கழக வெளியீடு : ௬௬௭

# விபுலாநந்த அடிகள்



இலங்கை, கழுவாஞ்சிக்குடி,

திரு. டி. ரி. செல்வநாயகம் அவர்கள்

*எழுதியது.*



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை



அறந்தழைத்து வளர்ந்தது தமிழகம்; தமிழகத்தின் ஓர்பகுதி ஈழநாடு; அந்நாட்டில் பெரியார் பலர் தோன்றித் தமிழ்ப்பண்பை நாடு முழுதும் வளர்த்துப் பரப்பினர்.

ஈழம் தந்த பெரியாருள் அருட்டிரு **விபுலாநந்த அடிகளாரும்** ஒருவராவர். இவர்கள் தமிழ்மொழிக்கும், பண்புக்கும் ஆற்றிய தொண்டுகள் அளப்பரியன.

அத்தொண்டின் விரிவே இவ் வரலாற்றுநூல். இந்நூலில் தமிழ்மாந்தர் 'தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த' அடிகளின் வாழ்க்கையைக் கற்று அறிந்து மகிழ்வது சிறந்தது. இதனைக் கோப்புமுறையாக அமைத்து உதவிய அறிஞர், ஈழநாட்டுத் **திரு. டி.ரி. செல்வ நாயகம்** அவர்கள்.

இந் நூற்கு **'விபுலாநந்த அடிகள்'** என்னும் பெயரமைத்து நன்முறையில் நூலுருவாக்கித் தந்துள்ளோம். தமிழுலகம் ஏற்றுக் கற்றுப் போற்றுமென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# முன்னுரை

‘உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவ’தேன்
றுள்ளம் நெகிழ்ந்துரைத்த உத்தமனர்—வள்ளலேன
அள்ளிக் கொடுக்குநல் அன்பருறை காரைநகர்
கொள்ளுவிபு லாநந்தக் கோ.

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் மிக்குடைய நாடே தன்னேரில்லாத் தலைசிறந்த நாடாகும். அத்தகைய தலைசிறந்த நாட்டிலேதான் தனிப்பெருந் தகைமை சான்ற ஆன்றோர் பலர் தோன்றுதல் இயல்பு. எனெனில் பண்புடைய மண்ணிலேதான் பண்பமைந்த செழும் பழங்கள் கனிதல் கண்கூடாதலின். அந்த வகையிலே தோன்றி முதிர்ந்து முற்றிப் பழுத்துத் தாயகத்திற்குத் தலையாய பெருமையை ஈட்டிக்கொடுத்த அருங்கலைக் கொழுந்தும், பெருந்தவ ஒளியுமானவர் அருட்டிரு விபுலாநந்த அடிகளாவார்.

கிழக்கு இலங்கையிலே வாழையடி வாழையாக வந்த பழங்குடி மரபிலே தோன்றிய அடிகளார், சேய்நாட்டிற்கே யன்றித் தாய்நாட்டிற்கும் மாண்புகழினை வாரிவாரிக் கொடுத்தார். புகழினை வாரி வழங்கிய பொய்தீர் ஒழுக்க நெறிநின்ற அடிகளார், இன்று நம்மை விட்டு மறைந்துவிட்டார். ஆயினும் அவர்தம் நுண்மாண் நுழைபுல மிக்க ஆராய்ச்சியால் தேடி உணர்ந்தளித்த அரும்பெருஞ் செல்வமான ‘யாழ் நூல்’ என்றென்றும் அவர் பெயரினை மன்னுவுலகினில் மறவாமல் இசைத்துக்கொண்டே யிருக்கும்.

‘தோன்றிற் புகழுடன் தோன்றுக’ என்ற வள்ளுவரின் மணிமொழிக்கியையத் தோன்றிப் புகழ்பரப்பி வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த அருட்டிரு விபுலாநந்த அடிகளார் பிறவாயாக்கைப் பெரும் பேறெய்தி மூன்றாண்டகவை முதிர்ந்த காலையில், அடிகளாரை நினைவுகூரும் முகத்தான், 1950-ம் ஆண்டு ஆவணித்திங்கள் எட்டாம் நாள் மாலைப்பொழுது ஆறுமணியளவில் இலங்கை வானொலி நிலயத்தினர் ஓர் சொற்பொழிவாற்றுமாறு எம்மைப்பணித்தனர்.

பாலும் தேனும் பெருக்கெடுத்தோடும் பல்வளம் நிரம்பிய மட்டக்களப்பிலே யானும் தோன்றியமையானும், அடிகளாருடன் சிலகாலம் நெருங்கிப் பழகியமையானும், மட்டிலா மகிழ்வுடன் ஒப்புக்கொண்டேன். அடிகளாரின் பெருமையைப் பேசுதல் பெரும் பேறாகக் கருதிக் குறித்த நாளிலே இலங்கை வானொலியில் ஓர் சொற்பொழிவாற்றினேன்.

எமது சொற்பொழிவு கிழக்கு இலங்கை மக்களிற் பெரும்பாலாருடைய நல்வரவேற்பைப் பெற்றது. அன்பர்கள் பலர் அடிகளாரின் வாழ்க்கை வரலாற்றை நூலுருவாக்கித் தமிழகத்திற்கு வழங்கும்படி வேண்டினர். அடிகளாரின் பிறப்பிடமான காரேறுமூதூரில் பிறந்த பலர், அடிகளாரின் வாழ்க்கைக் குறிப்புக்களையும், அன்னார் வரைந்த கட்டுரைகளிற் பலவற்றையும் தந்துதவினர். வேறுபல அன்பர்கள் எமக்கெழுந்த ஐயங்களைச் செவ்வனே தீர்த்து வைத்தனர். அனைவரின் உறுதுணையுடன் மூன்றாண்டுகளாக முயன்று பயில்தொறும் இன்பம் பயக்கும் அடிகளாரின் வாழ்க்கை வரலாற்றை ஒருவாறு எழுதி முடிக்கலானேன்.

நூலின் இடையிடையே தொடர்பறுத அடிகளார் வரைந்த கட்டுரைகளில் அகத்தியமெனக் கண்டவைகளை இடத்திற் கேற்பப் பொருத்தியுள்ளேன். அடிகளாரின் துகளிலாத தொண்டுகளைப் பாராட்டிச் சில அறிஞர்கள் கருத்து மணம் செறியும் கட்டுரைகள் பல செதுக்கியுள்ளார்கள். அவற்றுள் சிலவற்றைச் சூழ்நிலைக் கேற்ப சேர்த்துள்ளேன். பெருந்தகை அடிகளார் இறையடிப் பேறெய்திய காலையில் அறிஞர் பெருமக்கள் மிகவும் வருந்தினர். தமது உள்ளக் கவற்சியைத் தெள்ளுதமிழில் இரங்கற்பாக்களாக வடித்தெடுத்தனர். அப்பாக்களிற் சிலவற்றை நூலின் இறுதியில் சேர்த்துள்ளேன்.

புதுமை எழில் பொங்கிப் பொலியும் இஞ்ஞான்று, நிலைக்கேற்ப முற்றும் புதுமையான முறையிலேதான் அடிகளாரின் வரலாற்றை வரைந்துள்ளேன். எமது நூலாக்கப் பணிக்கு உதவி புரிந்த ஆசிரியர்கள் (Teacher's) அனைவருக்கும் எம் உளமார்ந்த நன்றியை உரிமைப்படுத்துகிறேன்.

உங்களின் கைகளிலே ஒப்பில் ஒருவரின் வாழ்க்கையினைக் கூறிடும் நூல் தவழ்கின்றது. உவகையோடு சுவைத்து உறுபயனடைவீர்களாக. தீயனதவிர்த்து நல்லனநாடல் நானிலத்தோர் கடனாகும்.

இசையிடை நுணுகி யாய்ந்து இசைபெறு யாழ்நூல் யாத்து
இசைத்தமி ழாசா னாகி இன்கலைக் கழகந் தன்னில்
இசைவளர் விபுலா நந்தர் இம்பரி னீங்கி வானின்
இசைபொழி அமர ராகி என்றென்றும் வாழ்கின் றரே.

டி. ரி. செல்வநாயகம்.

# உள்ளுறை



சுவாமி விபுலாநந்தர்
பி. எஸ். ஸீ. (இலண்டன்)

தோற்றம் : 26-3-1892

மறைவு : 3-8-1949

# க. பிறப்பு

## தாய்நாடு

ஈழவள நாடென்று தமிழ்மக்களால் போற்றப்படும் இலங்கைத் தீவானது, இந்துமாக் கடலின் நடுநாயகமாக இந்தியாவின் தென் கீழ்த்திசையில் அமைந்துள்ளது.

இலங்கை இயற்கைவளம் ததும்பிய ஓர் எழில் நாடு; இலங்கையென்றால் பிரகாசித்தல், ஒளிர்தல், இலங்குதல், துலங்குதல் என்ற கருத்துக்களைக் கொள்ளலாம். ஆதலினால் இலங்குதல் என்ற சொல்லினடியாகத்தான் இலங்கையென்ற பெயர் தோன்றியிருக்கலாமென்று கருதலாம்.

முன்னாளில் ஆரியர்கள்தான், இலங்கையென்று பெயர் சூட்டி அழைத்து வந்தார்கள். திராவிடர்களோ, ஈழம் என்று போற்றி வழங்கினார்கள். ஆகவே, ஈழம், இலங்கை என்ற இரு பெயர்களுடன் இந்நாடு திகழ்ந்தது. இதனைக் கொங்குவேளிர் இயற்றிய பெருங்கதையில்,

> " இலங்கை ஈழத்துக் கலந்தரு செப்பு "

என்று குறிப்பிட்டிருக்கிறார்.

சங்க இலக்கியங்களுள் ஒன்றான சிறுபாணாற்றுப் படையில்,

> " தொன்மா விலங்கைப் பெயரொடு பெயரிய
> நன்மா விலங்கை "

என்று கூறப்பட்டிருப்பதனால் இலங்கையென்ற பெயரே பெரும்பான்மையாக வழக்கத்திலிருந்திருக்கிறதென்பது தெளிவாகிறது.

கற்பின் மேன்மையால் மதுரையை எரித்த, கன்னியர்களின் தனிப்பெருந் தெய்வமான கண்ணகியின் வரலாற்றைக் கூறும் சிலப்பதிகாரத்தில்,

"கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தன்"

என்று கூறப்பட்டிருப்பதனால், நாற்புறமும் கடலால் சூழப்பட்ட ஓர் தீவென்பது உறுதியாகிறது.

பண்டைக்காலத்தில், அஃதாவது கிறித்துவிற்குப்பின் முதலாம் இரண்டாம் நூற்றாண்டளவில் மணிபல்லவம், இரத்தினத்தீவம் என்ற இரு பெயர்களைக்கொண்ட இரு வேறு நாடுகளாக இந்நாடு வழங்கப்பட்டு வந்திருக்கிறது. இதனை மணிமேகலையில்,

"அந்தரம் ஆறா ஆறைந்து யோசனைத்
தென்றிசை மருங்கிற் சென்றுதிரை யுடுத்த
மணி பல்லவம்"

என்று சொல்லப்பட்டிருப்பதனால், காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து தென்திசையில் முப்பது யோசனைகளுக்கப்பால் மணிபல்லவம் இருந்ததென்பது அறியக்கிடக்கிறது.

"ஈங்கிதன் அயலகத்தா இரத்தினத் தீவத்து
ஓங்குயர் சமந்தத்து உச்சி மீமிசை"

என்று மேலும் மணிமேகலையில் சொல்லப்படுவதனால் முன்னாளில் சமந்தகூடப் பர்வதமென்றும், பின்னாளில், தமிழர்களால் சிவனொளிபாதமென்றும், சிங்களவர்களால் சமந்தகூடமென்றும் போற்றப்படும் பாதபங்கயத்தைக்கொண்ட திருப்பதி இருந்ததென்று அறியற்பாலது.

இரத்தினத்தீவம், இலங்கா தீவமென்றும் வழங்கப்பட்டு வந்திருக்கிறது. இதனைப் பின்னும் மணிமேகலையில்,

> "இலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ்
> சிலம்பினை எய்தி"

என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. மணிமேகலை நூற் குறிப்பைப் பற்றுக்கோடாகக்கொண்டு, மணிபல்லவம், இரத்தினத்தீவம் என்பன இருவேறு நாடெனவும், இரத்தினத்தீவம், இலங்கா தீவமென்று வழங்கப்பட்டு வந்திருக்கிறதென்பதைக் காண முடிகிறது.

இலங்கையில் சிங்களவர் என்ற இனத்தார் தோன்றியவுடன், தமது இனப்பெயரைக்கொண்டு சிங்கள துவீபம் என வழங்கினார்கள். இதன் திரிபே சிங்க துவீபம் என்ற பெயரும்.

சிங்களவர் குடியேறி வாழ்வதற்கு முன்னரும், பின்னரும் தமிழ்மொழியைப் பேசும் மக்கள் இங்கு வதிந்தார்கள். இதனை நன்னூலுக்கு உரை எழுதிய மயிலைநாதர்,

> "தமிழொழி பதினேழ் நிலமாவன சிங்களம்
> சோனகம், சாவகம்.........தாமிவையே"

என்று குறிப்பிட்டுள்ளார்.

முத்துக்கள் இலங்கைக் கடல்களிலே விளைகின்றன; அதன் பயனாக நன்முத்துக்கள் மக்களின் இல்லங்கள் தோறும் பொலிகின்றன; மங்கையர்களின் மேனியை முத்துக்கள் அழகு செய்கின்றன; இதனைக் கருதி முன்னாளில் நித்தில துவீபம் என்ற சிறப்புப்பெயரைக் கொள்ளலாயிற்று.

இலங்கை நிலத்தினுள் இரத்தினக்கற்கள் செறிந்து கிடக்கின்றன; ஆதலினால் மக்கள் சிறு சிறு சுரங்கங்களைத்

தோண்டிப் பலவகையான கற்களை வெளியில் எடுத்தார்கள்; தம் தேவைபோக மிகுதியானவற்றைப் பிறநாட்டவருக்குக் கொடுத்து வாணிகம் செய்தார்கள். அதன் பயனாகக் கிரேக்கர் தமக்கு வேண்டிய பதுமராகக் கற்களை வாங்கியமையினால் மாணிக்க துவீபம் என்று அழைத்தார்கள்.

சீனர் தேவையான இரத்தினக் கற்களைப் பெற்றமையினால் இரத்தின துவீபம் என்றழைத்தார்கள்.

வேற்று நாட்டாரின் ஆட்சியில் இலங்கை சிக்கியதன் பயனாக 'சிலோன்' என்ற புதுப்பெயரையும் கொள்ளலாயிற்று. சிங்கள துவீபம் என்ற பெயரின் சுருக்கமே சிலோன் (Ceylon) என்ற பெயர்.

ஈழ வளநாட்டில் பலஇன மாந்தர்களும், வதிகிறார்கள்; விசயனின் பரம்பரையில் தோன்றிய சிங்களவர்கள் புத்தர் நெறியிலே ஒழுகினார்கள்; அந்த வகையிலே, சிவனொளிபாத மலையில் ஊன்றப்பட்டுள்ள அடிச்சுவடு கௌதம புத்தருடையதென்று போற்றிப் புகழ்ந்து பணிகிறார்கள்; இதனை மணிமேகலை என்னும் காப்பியத்தில், 'தீவ திலகை' என்னும் பௌத்த பிக்குணியின் கூற்றாகச் சீத்தலைச் சாத்தனார் நயம்படக் கூறுகிறார்.

"ஈங்கிதன் அயலகத்து இரத்தினத் தீவத்
தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை
அறவியங் கிழவோ னடி யிணை யாகிய
பிறவி யென்னும் பெருங்கடல் விடூஉ
மறவி நாவா யாங்குள தாகலின்
தொழுது வலங்கொண்டு வந்தே னிங்கு"

என்று கூறப்படுவதனால் நன்கு தெளிவாகிறது.

பௌத்த சமயத்தவர்களின் தனி உரிமையென்று பலரால் சொல்லப்படும் சமந்தகூடம் இன்று இங்கு வதியும்

எல்லா மக்களுக்கும் உரியதாகி எல்லோரையும் வேறுபாடின்றித் தன்னகத்தே கொள்கிறது.

சைவ சமயத்தவர்கள் தங்கள் முதல்வனான சிவபெருமானின் அடிச்சுவடு ஊன்றப்பட்டுள்ள திருப்பதியென்று போற்றுகிறார்கள். இக்கூற்றை ஆதாரப்படுத்த இம்மலைக்கு வழங்கப்படும் பெயர்களாவன, பாதபங்கயம், சிவனொளி பாதம், சிவனடிபாதம் என்பவைகள் சான்று பகர்கின்றன.

கிறித்துவ சமயத்தவர்கள் தங்கள் முழுமுதற் கடவுளின் முதற்படைப்பான ஆதாம் என்பவனின் அடி ஊன்றப்பட்டுள்ள இடமென்று குறையா அன்போடு வணங்குகிறார்கள். இதுவும் உண்மைதான் என்பதை நிலைநிறுத்த இம்மலையை ஆங்கில மொழியில் (Adams Peak) ஆதம்ஸ் பீக் என்றுஅழைக்கிறார்கள்.

முகமது சமயத்தவர்கள் தங்கள் ஆண்டவனான முகமது நபியின் தந்தையான ஆதாம் நபியின் பாதம் ஊன்றப்பட்டுள்ள தூய இடம் என்று பணிகிறார்கள்.

மலையின் உச்சியில் நிற்கும்போது, ஞாயிறு தோன்றுங்கால் பலவகைச் சமயத்தவர்களும் தமது சமய வேறுபாடுகளை மறந்து ஓர் தாயின் வயிற்றில் பிறந்த குழந்தைகளைப்போல் இறைவனை மனதில் இருத்திப் பொற்பாதத்தை வணங்குகிறார்கள். எல்லாச் சமயத்தவர்களும் அதீதராய கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற சமரச நன்னிலையை உணர்த்துவது சமந்தகூடமொன்றேயாகும்.

இவ்வாறாக இங்கு வதியும் எல்லாச் சமயத்தவர்களையும் பாகுபாடின்றி ஒரே இடத்திற் சேர்க்கும் பெருமையுடைத்து இந்நாடு. இதனைத்தவிர இன்னும் பல பாடல் பெற்ற கோயில்களையும், பழமையான கோயில்களையும் தன்னகத்தே கொண்டது ஈழவளநாடு.

## பிறந்த நாடு

இலங்கைஅரசியல் ஒழுங்காய் நடைபெறும் பொருட்டு, இலங்கையை ஒன்பது மாவட்டங்களாக வகுத்து, ஒன்பது தலைநகரங்களையும் ஏற்படுத்தியுள்ளார்கள். அவை களுள் வடக்கு மாவட்டமும், கிழக்கு மாவட்டமும் தமிழ் மொழி வழங்கும் தனித்தமிழ் மாநிலங்களாகும்.

வடக்கு மாவட்டத்தைக் காட்டிலும் கிழக்கு மாவட்டம் நீர்வளத்தில் சிறந்து, நிலவளத்தில் மேலோங்கி நிற்கின்றது; கிழக்கிலே பல ஆறுகள் பாய்ந்து செல்வம் கொழிக்கும் நாடாக்குகிறது; இலங்கையின் நீண்ட நதியான மகாவலிகங்கை கிழக்கிலே ஓடிக் கடலிலே கலத்தலினால், பொன்விளையும் நிலங்கள் புதுப்பொலிவுடன் விளங்குகின்றன.

கிழக்கில் எங்கு பார்த்தாலும், பசுமை செறிந்திருக்கும்; பசுமையை மிகைப்படுத்திக் காட்டும் பரந்த வயல் வெளிகள் பல கல்தொலைவில் பரந்துள்ளன; பண்டு தொட்டு இன்றுவரையும், நெல்மணிகளை இல்லையென்னாது வழங்கும் பெருமை கொண்டது. கண்டிநகரம், அரசர்கள் தலைநகராகத் திகழ்ந்தகாலையில் இவ் வயல் வெளிகள் பெரிதும் பயன்பட்டுள்ளன.

கிழக்கில் பசி என்ற கூக்குரல் பெரும்பாலும் எழாது; இந்தப் பெருமையை அடைவதற்கு முதற் காரணம் மகாவலிகங்கையாகும். நடுமலைநாட்டில் ஊற்றெடுத்துக் கிழக்கிலங்கையில் பாயும் மகாவலிகங்கை, கிழக்கிற்கே பெருமை தருவதுடன், இலங்கைக்கே புகழ் ஈட்டுகிறது; இதன் மாண்பைக் 'கதிரைமலைப்பள்ளு' என்னும் நூலில்,

எங்கும் மாமணி விற்பொலி யுங்கதிர்
எங்கும் தாமரை அன்னம் படுமலர்
மங்கு ரூத வளர்ந்திகழுந்திரு
மாவலி கங்கை நாடெங்கள் நாடே......

என்றும்,

அணி இளங்கதிர் ஆயிரமுள்ள
அருக்கன் போய்க்குட பாலிடை மேவ
மணிகொ ணர்ந்து மணிவிளக் கேற்றிடும்
மாவலி கங்கை நாடெங்கள் நாடே......

என்றும்,

பொன்னு லகம்பொ ருவுநல் நாட்டில்
பொழிலின் தோகை நின்று லாவும்
வன்ன வேலவன் கதிரைக் குமரேசன்
மாவலி கங்கை நாடெங்கள் நாடே.

என்றும் வளம்படக் கூறப்பட்டிருக்கிறது. இத்தகை வளமும், வனப்பும் மலிந்திடும் கிழக்கு இலங்கையின் தலைநகரம் மட்டக்களப்பாகும். இதனை ஆங்கிலத்தில் (Batticaloa) என்று அழைப்பார்கள்.

மட்டக்களப்பிற்குப் புளியந்தீவு என்றதோர் காரணப் பெயரும் உண்டு. முன்னாளில் புலியன் என்ற பெயரைக் கொண்ட திமிலகுலத் தலைவன் இருந்து அரசு புரிந்தமை யினால் புலியந்தீவு என வழங்கலாயிற்று; காலப்போக்கில் மொழியின் சிதைவினால் புளியந்தீவு என மருவி வழங்க லாயிற்று.

மட்டக்களப்பிலிருந்து இருபத்துநான்கு கல்களுக் கப்பால், தென்திசையில் கல்முனை என்ற ஓர் சிறு நகரம் இருக்கிறது; வயல் வெளிக்ளின் நடுவில் இந்நகரம் இருப் பதனால், செல்வச் சிறப்புடன் விளங்குகிறது; இங்கிருந்து வடக்குநோக்கி மூன்று கல்களுக்கப்பால் காரைத்தீவு என்னும் சிற்றூர் இருக்கிறது.

கிழக்கே வங்காள விரிகுடாக் கடலும், தெற்கே பரந்த வயல் வெளிகளும், வடக்கே சாய்ந்த மருது ஊரும், மேற்கே வயல்வெளிகளும் எல்லையாக இருக்கின்றன. காரைத்தீவு இயற்கை செறிந்த ஓர் ஊராகும். நெய்தல் நிலப் பண்பும், மருதநிலப் பொலிவும்கொண்ட ஒரு சிறு நகரம் எனலாம். தென்னை, பலா, கமுகு, வாழை முதலிய மரங்களும், செடி கொடிகளும் செறிந்து கிடக்கின்றன.

இயற்கை எழில் ததும்பிடும் காரைத்தீவில் இறை வணக்கமும், சீருடன் போற்றப்படுகிறது. கிழக்கிலே வீரபத்திரசுவாமி கோவிலும், பாலையடி விக்கினேசுவரர் கோவிலும், மேற்கே கண்ணகி அம்மன் கோவிலும், குள வெளி விக்கினேச்சுவரர் கோவிலும், தெற்கே மாவடிக் கந்தசுவாமி கோவிலும் அமைந்துள்ளன. காரைத்தீவிற்கு காரேறுமூதூர் என்ற சிறப்புப் பெயரும் வழக்கத்திலுள் ளது. இத்தகைய புண்ணிய பூமியான காரேறுமூதூரில் தான் அருட்டிரு விபுலாநந்த அடிகள் பிறந்தார்.

## பிறந்த நாட்டு மக்கள்

முன்னாளில் இலங்கையின் பழங்குடிகளாக, இயக்க ரும் நாகரும் வாழ்ந்துவந்த காலையில் கி. மு. 545-ஆம் ஆண்டளவில் மகதநாட்டு இளவரசனான விசயனும், அவ னுடைய தோழர்களும் வந்து பழங்குடி மக்களுடன் கலந் தனர். அன்னாரின் வழிவழி வழியினரே இன்று நாட் டில் நிலவும் சிங்கள மக்களாவர்.

கி. மு. 247-இல் சூரத்தீசன் என்னும் வேந்தனின் ஆட்சி நடைபெற்றபோது சேனன், குந்தகன் என்னும் சேரநாட்டுத் தளபதிகள் தமிழர் படையுடன் வந்து அர சிருக்கையைக் கைப்பற்றி, 23 ஆண்டுகள் ஆட்சி செலுத்தி

னர்கள். அதன் பெறு பேருகத்தான் இலங்கையில் சேர நாட்டு மக்களின் குடியேற்றம் தொடங்கிற்று.

மலையாளநாடும் சேர்ந்தே, சேரநாடாக அன்று திகழ்ந்தது. ஆதலினல் மலையாளநாட்டுத் தமிழரே முதன்முதலில் இலங்கையில் குடியேறிய பெருமையை உடையவராவர். காலப்போக்கில் இவர்கள் இலங்கையின் பல பாகங்களுக்கும் பரந்து சென்று குடியேறலானர்கள். ஆதலினற்றான் இன்றும் இங்கு வதியும் மக்களின் பழக்க வழக்கங்கள் மலையாளத் தமிழ்மக்களின் பழக்க வழக்கங்களாக இருக்கின்றன.

கி. மு. 215-இல் முடிசூடிய சிங்கள அரசனை அசேலனுடைய காலத்தில், மலையாளப் படைவீரர்களைக்கொண்ட பெரும்படையுடன் எல்லாளன் என்னும் சோழ இளவரசன் வந்து, அரசிருக்கையைக் கைப்பற்றி 44 ஆண்டுகள் ஆட்சி செலுத்தினன். இவன் காலத்திற்றான் தமிழ் மக்கள் எங்கும் போற்றப்பட்டுக் குடியேறினர்கள்.

கி. மு. 103-இல் வாலகம்பாகு ஆட்சி செய்தபோது, சோழ நாட்டிலிருந்து, புலகத்தன், பாகியன், பனையமாறன், தாட்டியன், பிலியமாறன் என்னும் ஐவருடன் இன்னுமிருவர் சேர்ந்து பெரும்படையுடன் வந்து ஆட்சியைக் கைப்பற்றினர்கள். அதன்பயனுகச் சேரநாட்டு மக்களுடன், சோழநாட்டு மக்களும் கலந்து குடியேறக் காரணமாகியது.

கி. பி. 110-இல் கரிகாற் சோழன் இலங்கையின்மேற் படையெடுத்து 12000 சிங்களவர்களைச் சிறைப்பிடித்துச் சென்று காவிரிக்கு அணை கட்டுவித்தான். பின்னர் இலங்கை வேந்தனுக வந்த கயவாகு என்பவன், தந்தை காலத்தில் ஏற்பட்ட தோல்வியைத் துடைக்கச் சோழநாடு

சென்று, சிறைப்பட்டவர்களை மீட்டதுடன் சோழநாட்டு மக்களையும் அழைத்துவந்து குடியேற்றினான். இக்காலையில் கற்பின் பெருமையினால் மதுரையை எரித்துப் பெண்ணினத்தின் தெய்வமான கண்ணகிக்குச் சேரன் செங்குட்டுவன் கோவில் எடுப்பித்து விழாக் கொண்டாடினான். அவ் விழாவில் கயவாகுவும் கலந்து, தன்னாட்டிற்கும் எழுந்தருளும்படி இறைஞ்ச "தந்தேன் வர"மென எழுந்தது ஓர் குரல். இதனைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோ அடிகள்,

> "கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்
> எந்நாட் டாங்கண் இமைய வரம்பனின்
> நன்னாட் செய்த நாளணி வேள்வியில்
> வந்தீக என்றே வணங்கினர் வேண்ட
> தந்தேன் வரம் என்று எழுந்த தொருகுரல்"
>
> (சிலப். ௩0: ௧௬0-௪.)

என்று கூறுகிறார்.

அதனால் உளம் மகிழ்ந்த கயவாகு புத்தரின் பிட்சா பாத்திரத்தின் சில்லான பத்ரதாது என்றதையும், பத்தினிக் கடவுளின் பொற்சிலம்பையும், பத்தினி வணக்கத்திற்குரிய பாடல்களையுங்கொண்ட சமஃச்கிருத, தமிழ்நூல்களையும் எடுத்துக்கொண்டு சேரநாட்டு மக்களிற் பலரையும் அழைத்துக்கொண்டு வந்தான். அதன் பயனாக இலங்கையில் கண்ணகிகோவில் எடுப்பித்து தனிவணக்கம் செய்ததுடன், பௌத்தகோவில்களிலும் கண்ணகி சிலையை நிறுவினான். இதனாற்றான் இன்றும் சிங்களவர்கள், கண்ணகியைப் 'பத்தினித் தெய்யோ' என்று பரவசமாகப் போற்றுகிறார்கள். வாரம் மும்முறை பௌத்த பாடல்களையும், வாரம் இருமுறை தமிழ்ப்பாடல்களையும், பாடவேண்டுமென்று கட்டளை இட்டான். இவ்

வாறாக இலங்கையில் கயவாகு கண்ணகி வழிபாட்டைத் திறம்பட நடத்தினனென்பதை, சிலப்பதிகாரத்தின் உரை பெறு கட்டுரையில்,

> "அதுகேட்டுக் கடல்சூழ் இலங்கைக் கயவாகு வென்பான்
> நங்கைக்கு நாட்பலிபீடிகை கோட்டமுந்துறுத்தாங்கு
> அரந்தை கெடுத்து வரந்தரு மிவளென
> ஆடித் திங்க ளகவையி னங்கோர்
> பாடி விழாக்கோள் பன்முறை யெடுப்ப
> மழை வீற்றிருந்து வளம் பெருகிப்
> பிழையா விளையுள் நாடா யிற்று" (சிலப். உரைபெறு: ௩)

என்று கூறப்பட்டிருக்கிறது.

இலங்கையிலே கண்ணகி வரலாற்றைப் பல நூல்கள் பலவிதமாகக் கூறுகின்றன. அவைகளுள் முக்கியமானவைகள், பத்தினி பத்மா (பத்தினி பூசை), பத்தினி பிலபயா (பத்தினியின் அழகை), பத்தினி யத்தின (பத்தினி தோத்திரம்), சலம்பகதுவா (சிலம்பின் கதை), சலம்ப சங்கியா (சிலம்பின் அருள்), வேசமேதினி (தாசியின் தொல்லை), அங்கிலி உபாதை, என்பவைகளாகும்.

இந் நூல்களின் பயனாக ஈழத்திலே கண்ணகிக்குப் பல பெயர்கள் சூட்டி மகிழ்ந்திருக்கிறார்களென்பது தெளிவாகிறது. சுரநாகா, மணிமேகா திரிசாலா, மணிமாசா, சிரிமாலா, ஈரந்தி, ஒணிமாலா என்பவைகள் குறிப்பிடத் தக்கன.

கயவாகு சோழ சேர நாட்டுமக்களை அழைத்து வருவதற்கு முன்னரே, ஈழத்தின் செழிப்பான ஆற்றங்கரைகளிலும், கடற்கரைகளிலும், சேரநாட்டிற் குரித்தான மலையாளத் தமிழர்கள், குடியேறி வாழலானார்கள். அவர்களுடன் சோழநாட்டு மக்களும் சேர்ந்து பல இடங்

களுக்கும் பரவினுர்கள். அந்த முறையிலே கிழக்கு இலங்கையின் கடலை அண்டிய இடங்களிலும், ஆறுகள் பாய்ந்து செழுமைப்படுத்தும் ஆற்றங்கரைகளிலும், சோழ, சேர நாட்டு மக்கள் குடியேறி, முன்னவர்களுடன் கலந்தனர்; அத்துடன் அன்னுரின் பழக்க வழக்கங்களையே மேற்கொள்ளலானுர்கள்; இதனுல் இன்றும் இலங்கைத் தமிழ் மக்களிடமிருக்கும், கணவன் இறந்தவுடன் கைம்மையேற்ற பெண்கள் மறுமணம் செய்துகொள்ளுதலும், திருமணத்திலே பெண்களுக்கு வரதட்சணை கொடுத்தலுடன் குடியிருக்கும் இல்லத்தையே கொடுத்தலும், திருமணமானவுடன் மணமகன் மணமகள் இல்லத்திலே இருத்தலும், ஆதிய பழக்க வழக்கங்கள் முதன்மையானவைகளாகும். இவ்வகையான பழக்க வழக்கங்கள் இன்றும் மலையாளநாட்டில் நடைமுறையில் இருக்கின்றன.

கயவாகு அழைத்து, தமிழ்மக்களைத் தம்பறை, அரஸ்பற்று, அழுத்துக்கோறளை ஆகிய இடங்களில் குடியேற்றினுன். அழுத்துக் கோறளையில் குடியேற்றப்பட்ட மக்கள் அங்கங்கு இடையிடையே, வாழ்ந்துவந்த மலையாளத் தமிழ்மக்களுடன் கலந்து நாளாவட்டத்தில் கிழக்கின் பல இடங்களுக்குப் பரவினுர்கள். முதன்மையாகச் செழிப்பான இடங்களிலே சிறுசிறு ஊர்களை ஆக்கிக் கொண்டு வாழலானுர்கள். முன்வைத்த காலைப் பின் வைத்தறியாத தமிழர்கள் காலப்போக்கில் கிழக்கில் செறிந்து கிடந்த காடுகளைத் தம் தேவைக்கேற்ப வயல் நிலங்களாக்கி வாழ்ந்து வந்தனர்.

கி. பி. பத்தாம் நூற்றுண்டிலே சோழர்களின் ஆட்சி நடைபெற்றது. அக்காலையில் கிழக்கில் பரந்து கிடந்த சிறுசிறு ஊர்கள் 'பலவற்றை ஒன்றுக்கி 'வன்னியர்'

என்னும் வேளாளர் ஆட்சி செலுத்தி வந்தனர். அதன் பெறுபேருகச் செங்கற்படை என்னும் இடத்தை நடுவாகக் கொண்டு ஓர் வன்னிமை ஆட்சிசெலுத்தி வந்தார். அந்நாளில் சேரநாட்டு வேளாளர் குடியைச்சேர்ந்த ஓர் மூதாட்டியார், தன் மகளுடன் கண்ணகி சிலை யொன்றைக் கொணர்ந்து காரைத் தீவிலே தங்கினுர். அங்கு உயரமாக வளர்ந்திருந்த ஓர் வம்பிமரத்தின்கீழ்த் தான்கொணர்ந்த கண்ணகி சிலையை வைத்து, மேலே ஓர் கொத்துப் பந்தல் போட்டு, வேளை தவருமல் வழிபாடு செய்துவந்தார். அம்மையாரின் கண்ணகி வழிபாட்டையும், கண்ணகி சிலையின் அருளையும் கண்டுணர்ந்த, முற்குகர் என்னும் சிறு கூட்டத்தார் அம்மையாருக்கு எல்லா உதவிகளையும் மனமுவந்து செய்துவந்தனர்.

யாழ்ப்பாணத்திலுள்ள கீரிமலை முதலாய கடற்கரையிடங்களிலே, மீன் பிடித்தலைத் தொழிலாலாகக்கொண்டு ஓர் இனத்தார் வாழ்ந்து வந்தனர். இவர்களை அந்நாளில் முற்குகர் என்றழைத்து வந்தனர். போத்துக்கேயருடைய ஆட்சியில் இவர்கள் இடையூறுகளை ஏற்படுத்தியமையினுல் தங்கள் பிரதேசத்தில் இருக்காவண்ணம் துரத்திவிட்டனர். ஆகவே போத்துக்கேயரின் ஆணை முழுதும் பரவாத கிழக்கிலங்கைக் கடற்கரை ஓரங்களில் குடியேறித் தம் தொழிலை நடத்தி வந்தனர். அதன் பயனுகத்தான் காரைத் தீவிலும் இந்த இனத்தவரில் பலர் வாழக் காரணமாகியது.

முற்குகரின் உதவியினுல் அம்மையார் தமக்கென ஓர் சிறுகுடில் அமைத்துக்கொண்டு கண்ணகி வழிபாட்டைச் செவ்வனே நடத்திவந்தார். ஓர்நாள் [1]செங்கற்

---

1. இது தற்போது மட்டக்களப்பிலிருந்து தெற்கு நோக்கி 32 மைல்களுக்கப்பால் இருக்கிறது.

படையிலிருந்த வன்னிமை நாட்டுவளப்பம் காண்பதற்காக தன் மனையாளுடன் யானைமேல் ஏறிவந்தபோது புதிதாக ஏற்படுத்தப்பட்ட கொத்துப்பந்தல் அன்னார்கட்குத் தென்பட்டது.

பந்தலினுள் அருளோடு வீற்றிருந்த கண்ணகி சிலையின் கண்கள் தீப்பிழம்புபோல் வன்னிமையின் மனையாளுக்குத் தோன்றலாயிற்று. "இஃதென்ன முண்டக்கண்போல இருக்கிறதே" என்று இகழ்ந்துரைத்தாள். அவளின் இகழ்ச்சியைப் பொறுக்கமுடியாத தேவியின் சினத்தீ அவள்மேல் தாவியது. ஆதலினால் அவள் கண்களில் வலி ஏற்பட்டதுடன் பார்வையும் குன்றலாயிற்று; இதனைக் கண்ணுற்ற வன்னிமை, இது தேவியை இகழ்ந்ததன் பயன் தான் என நினைந்து அம்மையாரிடம் சென்று முறையிட்டார்; அதற்கவர் தேவியின் திருவுருவத்தை இதே இடத்திலிருத்தி ஒரு கோவில் எடுப்பிப்பதுடன், அதனைப் பராமரிக்க புன்செய் நிலங்களும் வழங்கினால் வலி குணமாகுமென்றுரைத்தார்.

வன்னிமையும் அதற்கிணங்கி எதிரே இருந்த விளைநிலங்களில் 75 ஏக்கரைத் தேவிக்கென்று கொடுத்தார். அதனால் அவளின் ஓர் கண் குணமாகியது. ஆகையினால் அவ்வயல் வெளிக்கு "கண்வெளி" என்று பெயர் ஏற்படலாயிற்று. மறு கண்ணும் குணமடைய மேலும் வன்னிமை 75 ஏக்கர் விளைநிலத்தை தேவிக்கென்று வழங்கினார். அதன் பெறுபேறாக வன்னிமை மனையாளின் மறு கண்ணும் குணமாகியது. ஆகவே அவ்வயல் வெளிக்கு "கண் கண் வெளி" என்ற பெயர் ஏற்படலாயிற்று. இப் பெயர்கள் இன்றும் வழக்கத்திலிருப்பதை நன்கு காணலாம்.

வன்னிமை சொன்னபடி கொத்துப் பந்தலாகத் திகழ்ந்த இடத்தைக் கோவிலாக எடுப்பித்துச் சாசனமும் அமைத்துக் கொடுத்தார். தம் எண்ணம் நிறைவேறியதைக்கண்ட அம்மையார் மகிழ்ச்சி கொண்டதுடன் கோவிலின் வழிபாடு செய்பவராகவும் கடமை புரிந்து வந்தார்.

இவைகளினுல் அம்மையாரிடம் ஆழ்ந்த பற்றுக் கொண்டனர், அவ்வூர் முற்குகர். அம்மையாரின் ஒரே புதல்வி கன்னியாக இருப்பதுகண்டு திருமணம் செய்தற்கு முயற்சி எடுத்தனர். அவரோ வேளாள மரபைச் சேர்ந்தவர். தாங்கள் அம்மரபிலும் குறைந்தவர்கள். ஆதலினுல் தங்கள் மரபிலிருந்து மணமகன் எடுப்பது முறையல்லவென்று அயலிடங்களில் மணமகன் தேடலானுர்கள். அம் முயற்சியின் பயனுகத் தம்பிலுவில் என்னும் ஊரிலிருந்த வேளாளச்செம்மல் ஒருவரை அழைத்து வந்து திருமணத்தை நடத்திவைத்தனர்.

அன்னுரின் இல்வாழ்க்கையின் பயனுக மூன்று பெண் குழந்தைகள் பிறந்தன; அக் குழந்தைகளும் வளர்ந்து தக்க வயதை அடைந்தவுடன், தந்தையார் மணமக்களைத் தேடுவதில் முனைந்தார்.

காரைத்தீவிற்கு வடக்கே பதினொரு கல்களுக்கப்பால் களுவாஞ்சிகுடி என்னும் கிராமம் இருக்கிறது. இக்கிராமத்தின் பழங்குடிகளாக வேளாளமரபில் வந்த பெரிய பட்டன், சின்னப்பட்டன், ராமபட்டன் என்ற மூவரும் குடியேறினுர்கள்; இம்மூவரின் குடும்பங்கள் காலப்போக்கில் பெருகிப் பல குடும்பங்களாகப் பரந்திருந்தன; ஆகவே இக் குடும்பங்களிலிருந்து மூன்று மணமக்களைத் தெரிந்து, அம்மையாரின் பேர்த்திகளுக்குத் திருமணம் நடத்தி வைத்தனர்.

இவர்களின் குடும்பங்கள் தனி வேளாளர் குடிகளாகக் காரைத்தீவில் வளரலாயிற்று. களுவாஞ்சிகுடி வேளாளரும், தம்பிலுவில் வேளாளரும் கலந்து காரைத்தீவிலே புறம்பான ஓர் வேளாளர் குடி வளரலாயிற்று. இந்தப் பரம்பரையின் மூன்றாவது தலைமுறையில் வந்தவர் திரு. வயிரமுத்தாகும். இவர் சிவபக்தியில் சிறந்தவர்; கல்வி கேள்விகளில் போதிய அறிவுடையவர்; கண்ணகி வழிபாட்டில் அறநெறிப்படி ஒழுகுபவர்; ஏழைகளுக்கிரங்கும் தண்ணளிச் செம்மலாக விளங்கினார்; ஆதலினால், காரைத்தீவு மக்கள் திரு. வயிரமுத்து அவர்களை மதித்துப் பெருமைப்படுத்தினார்கள் என்றாலும் வயிரமுத்துவிற்கு தம் குடும்பத்தைத் தழைப்பிக்க மகப்பேறு இல்லையே யென்று கவலை கொள்ளலானார்; அவரைக் காட்டிலும் அவரின் மனைவியார் பன்மடங்கு கவலை கொண்டார்; ஆகவே இருவரும் தங்களது குறையைத் தீர்க்கும்படி காரைத்தீவில் எழுந்தருளியுள்ள கண்ணகி அம்மையாரை வேண்டினார்கள்; குழந்தை பிறந்தால் அதேபோல் பொற்சிலை செய்துகொடுப்பதாக நேர்க்கடன் செலுத்தினார்கள்.

வயிரமுத்துவின் கவலையைப் போக்க, கண்ணகி அருள் முழுமையாகக் கிடைத்தது; அதன்பயனாக ஒரு நன்னாளில் வயிரமுத்துவின் மனைவியார் ஓர் பெண்மகவை ஈன்றெடுத்தார்; குழந்தையைக்கண்ட தந்தையார் பிறவியின் பயனை அடைந்துவிட்டதாகப் பூரித்தார்; கண்ணகியின் அருளினால் குழந்தை பிறந்தமையினால், கண்ணகியை என்றும் மறவாமல் இருத்தற்பொருட்டுக் குழந்தைக்கும் கண்ணம்மை என்று பெயர் வைத்தார்.

காலம் கரைந்தது; அதேபோல் குழந்தை கண்ணம்மையும் வளர்ந்து பழைய இலக்கியங்களில் நல்ல பயிற்சி

பெற்றதுடன் கண்ணகி வழிபாட்டில் தன்னிகர் அற்றவராய் விளங்கினர்; எல்லாக் கலைகளிலும் தேர்ந்த கண்ணம்மையாரைக் காலம் கன்னியாக்கியது; கணவன் என்ற ஊன்று கோலை அளிப்பதற்காக திரு. வயிரமுத்து முயற்சி எடுத்தார்; கண்ணின் கருமணியான கண்ணம்மையாரை எந்நாளும் தங்களுடன் வைத்துக்கொள்ள விரும்பியதினல் உள்ளூரிலே திருமணம் செய்துவிட முடிவு செய்தார்; வயிரமுத்துவின் மணமகன் வேட்டைக்கு திரு. சாமித்தம்பியார் இலக்காயினர்; திரு. சாமித்தம்பியார் சொந்த உரிமையாளராக இருந்ததுடன் நில்லாமல் அவ்வூருக்கே ஊர்த்தலைமை அதிகாரியாகவும் விளங்கினர்.

ஊர்த்தலைமை அதிகாரிகள் பலரிடம் பொதுவாகக் காணப்படும் முதன்மைப்பாடு இவரிடம் சற்றேனும் இருக்கவில்லை; கடவுள் பத்தியினலும், அன்பினலும், மக்களைக் கட்டுப்படுத்தி இன்முகத்துடன் அலுவல்களைக் கவனித்து வந்தார்; கண்ணகி வழிபாட்டில் சிறந்த கண்ணம்மையாருக்குச் சிவபத்தியிலே சிறந்தோங்கிய சாமித்தம்பியாரைக் கணவராக முடிவுசெய்தது சாலவும் சிறந்ததெனத் வயிரமுத்து கண்டதனல், குறிப்பிட்ட ஓர் நல்லவேளையில், அன்னவரைச் சேர்த்து தம்பதிகளாக்கி வைத்தார்.

## பிறப்பு

திரு. சாமித்தம்பியார் கண்ணம்மையாருடன் இல்வாழ்க்கையைத் தொடங்கினர். தெய்வ பக்தியிலே சிறந்து விளங்கிய அன்னவர்கள் எவ்வித மனவேறுபாடும் எழாமல் ஒழுங்காக இல்லறத்தைக் கடைப்பிடித்து வந்தனர்.

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை"

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கிணங்க கண்ணம்மையார் வாழ்க்கையை நடத்தியமையினால் தாய்மைப்பேற்றை அடைந்தார்; அதனைச் சொல்லக்கேட்ட சாமித்தம்பியார் மகிழ்ச்சிகொண்டார்; பத்துத்திங்கள் ஓடியபின்னர் கர ஆண்டு பங்குனித் திங்கள் 26-ம் நாள் (26-3-1892) வைகறையில் கண்ணம்மையார் 'அறிவில் சிறந்து விளங்கப் போகும் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார்.

குழந்தையைத் தூக்கி உச்சிமுகர்ந்த சாமித்தம்பியார் மயில்வாகனன் என்ற அழகிய பெயரைச்சூட்டி அகம் மகிழ்ந்தார்.

மயில்வாகனனார் நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாக வளர்ந்து பள்ளிப்பருவத்தை எட்டிப் பிடித்தார்; ஆதலினால் தந்தையார் திரு. குஞ்சித்தம்பி ஆசிரியரிடம் அழைத்துச்சென்று கல்வி பயிற்றுவித்தார்.

மயில்வாகனனார் திரு. குஞ்சித்தம்பி ஆசிரியரிடம் பாடங்கேட்டதுடன் நில்லாது, தந்தையாரிடமும், தாய் மாமன்மாராகிய திரு. வசந்தராசபிள்ளை, திரு. சிவகுருநாத பிள்ளை ஆகியோரிடமும் பாடங்கள் கேட்டுப் படித்து வந்தார்.

மயில்வாகனனார் தொடக்கத்திலே நான்கு ஆசிரியர்களிடம் பாடங்கேட்டுப் படித்தமையினாற்றான் பிற்காலத்தில் பல பண்டிதர்களிடமும் பாடங்கேட்க முடிந்ததுடன் தமிழ்த்தாய்க்கும், தமிழர்களுக்கும் சொல்லமுடியாத தொண்டுகளைச்செய்யக் காரணமாகியது.

---

# ௨. வளர்ப்பு - - -

## குழந்தைப் புலவர்

காரைத்தீவை அழகு செய்யும் கோவில்களுள் பிள்ளையார் கோவிலும் ஒன்ருகும். ஆலமரத்தின் நிழலின்கீழ் பிள்ளையார் வீற்றிருப்பது காரைத்தீவு மக்களின் பெறு பேறென்றுதான் சொல்லவேண்டும். மக்கள் மாலை வேளைகளில் மரநிழலின்கீழ் அமர்ந்து இறைவனைப்பற்றிப் பேசி, அவரது திருவிளையாடல்களைப்பற்றிக் கலந்துரையாடித் தெளிவார்கள்.

இவ்வாலயத்தின் கோவில்பட்டகையராக வைத்திய லிங்கத்தேசிகர் தொண்டுபுரிந்து வரலானுர். விநாயகருக்கு வேளை தவருமல் வழிபாடு செய்வதுடன் தேசிகர் நின்று விடாமல், காரைத்தீவிலே திகழ்ந்த சைவப்பாடசாலையின் தலைமை ஆசிரியராகவும் பணிபுரிந்து வந்தார். தெய்வ பத்தியிலே சிறந்த ஒருவர் தலைமை ஆசிரியராக இருந்தால், அப்பாடசாலையில் பயிலும் குழந்தைகள் இறைவணக்கத்தில் எவ்வளவு தூரம் விருத்தியடைந்திருப்பார்களென்பது வெள்ளிடைமலை.

எத்தனையோ பேர்கள் தலைமைஆசிரியப் பதவி ஏற்றுள்ளனர். ஆசிரியப் பயிற்சிச்சான்றிதழ்பெற்றவர்கள் காலப்போக்கில் தலைமை ஆசிரியராக வரத்தகைமை உள்ளவர்கள். என்ருலும், அவர்களுள் சிலர்தான் புலமை உடையவராக இருக்கலாம். அந்தவகையிலே தேசிகருக்கு முதல் இடத்தைக் கொடுக்கலாம். தேசிகர் தமிழ்மொழியுடன் வடமொழியும் தெளிவுறக்கற்றவர். ஆகவே மயில் வாகனுர் அவரிடம் திருக்குறள், பாரதம் முதலானவை

களையும், நன்னூல், சூடாமணி நிகண்டு முதலியவைகளையும் வடமொழியையும் இனிது கற்கலானார்.

மயில்வாகனனார் நன்னூல் படிக்கும்போதுதான் செய்யுள்களின் தன்மையை ஓரளவு நினைக்கலானார்; நினைவுடன் நின்றுவிடாமல், தாமாகச் செய்யுள்கள் இயற்றும் வன்மையையும் பெற்றார்; தாம் ஆக்கப்படும் செய்யுள் இலக்கண வரம்பினுள் அமைந்தன்றோ இருக்கவேண்டும்; ஆதலினால் மயில்வாகனனார் பிறரின் துணையில்லாமல் அணி, யாப்பு ஆகியவைகளைக் கற்று சிறந்த குழந்தைப் புலவராக விளங்கலானார்.

பன்னிரண்டாவது அகவையிலே, மயில்வாகனனார் செய்யுள்இலக்கணம் கற்றுவிட்டாரென்றால், செய்யுள் பாடும் வன்மை அவரது தனிமுயற்சி என்று சொல்வதில் சந்தேகமின்று. விளையாட்டுப்போல் பாடல்கள் பாடிய மயில்வாகனனார் பின்னர்ச் செய்யுள் இயற்றுவதைத் தமது ஓய்வுநேரப் பொழுதுபோக்காகக் கொண்டார்.

தாம்மட்டும் சுவைத்து இன்புறாமல் ஏனையோர்களும் சுவைத்துப் பயனடைய வேண்டுமென்ற நோக்கத்தினால், முதன்முதலாகத் தமக்குக் கல்விதொடங்கிவைத்து, கல்விக்கு வித்திட்ட குஞ்சித்தம்பி ஆசிரியர் அவர்களை வழிபடும் நோக்கமாக,

“ அம்புவியிற் செந்தமிழோ
    டாங்கிலமும் எனக்குணர்த்தி அறிவு தீட்டி
வம்புசெறி வெண்கமல
    வல்லியருள் எனக்கூட்டி வைத்த குஞ்சுத்
தம்பியென்னும் பெயருடையோன்
    தண்டமிழின் கரைகண்ட தகைமை யோன்றன்
செம்பதும மலர்ப்பதத்தைச்
    சிரத்திருத்தி எஞ்ஞான்றும் சிந்திப் பேனே.”

என்று பாடினார். அன்றுதொட்டு மயில்வாகனனார் குழந்தைப் புலவராக விளங்கலானார்.

## கல்வி பயிலல்

மயில்வாகனனார் பத்து அகவை வரையும் தமிழ்ப்பாடசாலையில் தமிழ் கற்று வந்ததுடன், வீட்டிலே ஆங்கிலமும் கற்றுவரலானார். ஏனெனில் கிழக்கிலங்கையில் தக்க அகவையிற்றான் ஆங்கிலக்கல்விக்காக ஆங்கிலக்கல்லூரிகளிற் சேர்ப்பது வழக்கம். தமிழ்மொழியைப் பிழையற எழுதப் பேசக்கற்றவுடன் ஆங்கிலப்பாடசாலைக்கு அனுப்பாமல், ஓரளவு தமிழிலே ஐந்தாவது வகுப்பாதல் தேர்ச்சி அடைந்தவுடன்தான் அனுப்புவார்கள்; பொதுவாகப் பத்தாண்டுவரையும் ஆங்கிலக்கல்வி ஊட்டுவதில்லை; ஆனால் மயில்வாகனனார் பத்தாவது அகவை வரும்வரையும் தமிழ் மொழிமட்டும் கற்காமல் ஆங்கிலமொழியையும் கற்று வரலானார். படிப்பதில் மயில்வாகனனாருக்கு இருந்த ஆர்வத்தினாற்றான் உறவினர்கள் ஓய்ந்த வேளைகளில் ஆங்கிலக்கல்வியை ஊட்டினார்கள்.

மயில்வாகனனாரின் பத்தாவது அகவையிலே, சாமித்தம்பியார் காரைத்தீவிலிருந்து மூன்றுகல் தொலைவிற் கப்பாலுள்ள கல்முனை என்னும் பட்டினத்திலிருந்த 'மெதொடிஸ்த் மிச'னின் ஆங்கிலப் பாடசாலையில், ஆங்கிலம் கற்பதற்காக 1902-ம் ஆண்டில் சேர்த்தார்.

கல்முனை மெதொடிஸ்த் மிசன் பாடசாலை 1902-ம் ஆண்டிற்றான் முதன் முதலாகத் தொடங்கப்பட்டது; இப் பாடசாலை தொடங்கப்படாமல் இருந்தால் மயில்வாகனனார் இருபத்தேழு கல் தொலைவிற்கப்பாலுள்ள மட்டக்களப்பிற்கு அனுப்பப்பட்டிருப்பார்; ஆகவே கல்முனையில்

புதிதாக ஆங்கிலப் பாடசாலை தொடங்கப்பட்டது மயில்வாகனனாரின் பேறு என்று சொல்லலாம்.

நான்கு ஆண்டுகள் கல்முனையில் கல்வி பயின்றார்; மேலே பயில்வதற்கு இங்கு வகுப்புகள் தொடங்கப்படாமையினால் 1906-ஆம் ஆண்டில் மட்டக்களப்பிலுள்ள அர்ச் மிக்கேல் கல்லூரியில் சேர்ந்து கற்கலானார்.

மயில்வாகனரின் கல்வித்திறமையைக் கண்ணுற்ற ஆசிரியர்கள் அவரை மிகவும் பாராட்டினார்கள்; ஆதலினால் மயில்வாகனனார் ஆசிரியர்களின் நேயத்திற்காளானார்; அதன் பயனாக ஓய்வான வேளைகளில் ஆசிரியர்களிடம் சென்று தெரியாதனவற்றைக் கேட்டுத் தெரிந்து கொள்வார்.

மயில்வாகனனார் தமது பதினாறுவது அகவையில் 'கேம்பிரிட்ச் பல்கலைக் கழகத்தின'ரால் நடத்தப்பட்ட பரீட்சையில் கல்லூரிக்கே முதன்மையாகத் தேறினார்; இதனால் மயில்வாகனனார் அக்கல்லூரியிலே கல்வி போதிப்பதற்காக அமர்த்தப்பட்டார்; மயில்வாகனனாரும் மகிழ்ச்சியுடன் வேலையை ஏற்றுச் சிறந்த முறையில் மாணவர்கட்குக் கல்வி ஊட்டிவந்தார்; இரண்டு ஆண்டுகளாக ஆசிரிய நிலையை ஏற்று வந்த வேளையிற்றான், மயில்வாகனனாரின் நிறையன்பிற்குரியவராகிய அன்னையார் 1911-ம் ஆண்டில் இறைவனடி சேர்ந்தார்; ஆகவே, அன்னையின் இறுதிக் கடன்களை முடிக்கக் காரைத் தீவிற்கு வந்தார்.

அன்னையைப் பிரிந்த துயரத்தை அவரால் விரைவில் மறந்துவிட முடியவில்லை. ஆதலினால், ஆசிரிய வேலையைத் துறந்தார்; வேலையைத் துறந்து வீட்டிலே வாளா பொழுதைக் கழிக்க விரும்பாமையினால் கல்முனையிலுள்ள கத்தோலிக்க மிசன் பாடசாலையில் ஆசிரியப் பணியை ஏற்றார்.

## அன்னை வணக்கமும் கண்ணகி வழிபாடும்

மயில்வாகனனார் அன்னையாரை மிகவும் பத்தியுடன் மதிப்பவர்; அவரது ஆணைக்கு எதிர் வார்த்தை பேசி அறியார்; தம் மனத்தின்கண் எழும் ஐயங்களையெல்லாம் தெளிவாகக் கேட்டு விளங்கிக்கொள்வார்; கண்ணம்மையார் கண்ணகி வழிபாட்டில் சிறந்தவர்; அவ்வழிபாட்டை நன்றாக மயில்வாகனனாருக்கு உணர்த்தியுள்ளார்; ஆதலினாற்றான் பின்னாளில் மயில்வாகனனார் கண்ணகி வழிபாட்டையும், அன்னையாரையும்பற்றி எழுத முடிந்தது. அந்த வகையிலே மயில்வாகனனார் எழுதிய ஓர் கட்டுரையிலிருந்து ஒரு குறிப்பிட்ட பகுதியை இங்கு குறிப்பிடுகிறேன். அப்பகுதியையும் அவரது அழகிய உரைநடையிலே தருகிறேன்.

[1]நான் பிறந்த கிராமத்திலே ஒரு கண்ணகி அம்மன் கோயிலிருக்கிறது. அங்கு வைகாசித்திங்கள் பௌர்ணமித் திதியிலே வருடவிழாக் கொண்டாட்டம் நடைபெறுவது வழக்கம். பத்தினித்தெய்வமாகிய கண்ணகி அம்மையாரைத் தரிசிக்கும் பொருட்டுக் குறித்த தினத்திற்கு எட்டு நாட்களுக்கு முன்பு தொடங்கியே அயற் கிராமங்களிலிருந்து திரளான ஜனங்கள் வந்து கூடுவார்கள். கோயிலில் உச்சிக்காலப் பூசை முடிந்த பின்னர் ஜனங்கள் வசந்த மண்டபத்தில் வந்து அமைதியாக விருக்க, கற்றுவல்ல முதியோர் கண்ணகியார் வழக்குரையென்னும் நூலைப் படித்து அதன் கருத்தை யெடுத்து விளக்கமாகச் சொல்லுவார்கள். நான் சின்னஞ்சிறு குழந்தையாக விருந்த காலத்தில் என் அன்னையார் என்னை இக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். கோயிலில் வரிசையாக ஏற்றப்பட்

1. 'ஏப்ரல் 52'-ல் சிறிலங்காவில் அம்பலவாணன் எழுதியதிலிருந்து.

டிருந்த தீபங்களின் அழகும், பரந்த கொப்புக்களையுடைய ஓர் அரசமரத்தின்கீழே திரளான ஜனங்கள் கூடிஇருந்த காட்சியும், இன்னும் என் நினைவில் இருக்கின்றன. பெரியோர் கண்ணகியார் வழக்குரை படிப்பதை நான் கண்டேனாயினும், சிறுவனாகிய எனக்குக் கோவலனார் கண்ணகியாருக்குத் துன்பம் வரும்படி நடந்தாரென்றும், கண்ணகியார் அதனைப் பொருட்படுத்தாது கோவலரைப் பின்தொடர்ந்து சென்று மிகுந்த இடைஞ்சல்களை அனுபவித்தாரென்றும் அறிந்துகொண்டேன். பெண்பாலார் இயல்பிலே நல்லவர்களென்றும், ஆண்மக்கள் கொடுமையாளரென்றும் என் இளமை நெஞ்சம் உறுதியாக நம்பிற்று. கோயிலிலிருந்து வீட்டுக்கு வந்ததும், என் அன்னையாரை நோக்கி "அம்மா கோவலர் மிகுந்த துஷ்டரல்லோ" என்று நான் வினவினேன்.

**அன்னையார்:** ஏன் மகனே அப்படிச் சொல்கிறாய்!

**நான்:** அம்மாளுக்குத் துன்பம் வரும்படியாக அவர் நடந்தது தவறு. உங்களுக்கு மனவருத்தம் வரும்படி ஐயா நடந்தால் நான் ஐயாவுடன் கோபிப்பேன்.

**அன்னையார்:** எனக்கு மனவருத்தம் உண்டாகும்படி உன்னுடைய ஐயா ஒருபோதும் நடக்கமாட்டார். அது ஒரு பக்கம் இருக்க, உன்னுடைய ஐயா இராப்பகலாக எவ்வளவு கஷ்டப்பட்டு வீட்டுச் செலவிற்கு வேண்டிய பொருளைச் சம்பாதிக்கிறார். நீ படித்து நல்ல பிள்ளையாக வரவேண்டுமென்றும், குறையில்லாமற் சீவிக்கவேண்டுமென்றும், உனக்காகக் கஷ்டப்படுகிற ஐயாவோடு நீ கோபிப்பது சரியாகுமா?

**நான்:** என்றாலும் அம்மா, ஆண்பிள்ளைகளெல்லாம் கோவலனாரைப் போலவே கொடுமையானவர்கள்.

பெண்பிள்ளைகள் நல்லவர்கள். நாமெல்லாம் அம்மா ளைத்தானே வணங்குகிறோம். கோவலனுக்கு யாராவது கோயில் கட்டி வழிபடுகிறார்களா?

**அன்னையார்:** அம்மாள் கோவலனைத் தெய்வமாக வழிபட்டமையினால் நாமெல்லாம் அம்மாளைத் தெய்வமாக வணங்குகிறோம். ஆனபடியினால் கோவலனார் பெரியவர்தானே!

**நான்:** அம்மா, போன சித்திரை வருடப்பிறப்பன்று நீங்கள் மஞ்சள் நீரினால் ஐயாவுடைய கால்களைக் கழுவிப் பூக்களைப்போட்டு நமஸ்கரித்ததை நான் கண்டேன்; வருகிற தீபாவளியில் நான் உங்களுடைய காலைக் கழுவி நமஸ்கரிக்கப் போகிறேன்; ஐயாவை நமஸ்கரிக்கமாட்டேன்.

**அன்னையார்:** ஏன் அப்படிச் சொல்கிறாய்?

**நான்:** கண்ணகியார் கோவலனை வழிபட்டார். நாமெல்லாம் கண்ணகியாரை வழிபடுகிறோம். கோவலனை வழிபடுவதில்லை. நீங்கள் ஐயாவுடைய காலைக்கழுவி நமஸ்கரித்தீர்கள். நான் உங்களை நமஸ்கரிப்பேன். ஐயாவை நமஸ்கரிக்கமாட்டேன்.

**அன்னையார்:** அப்படிச் சொல்வது கூடாது; நீ ஆண்பிள்ளையானபடியால் ஐயாவுடைய பிள்ளை; ஐயாவைத்தான் நமஸ்கரிக்க வேண்டும்; ஐயாவுடைய புத்தகங்களையெல்லாம் படித்துக் கெட்டிக்காரப் பிள்ளையாக வர வேண்டும்; உன் தங்கைதான் எனக்குரிய பிள்ளை; இன்னும் இரண்டு மூன்று வருடஞ் சென்றபின்பு என்னோடுகூட சமையலறையில் வந்திருந்து சமையல் பழகுவாள்; நீ இரண்டு மூன்று வருடத்தில் தூர தேசத்திற்குப் படிக்கப் போய்விடுவாய்; நான் இறக்

கும்போதுகூட நீ வீட்டிலிருக்கமாட்டாய்; உன் தங்கைதான் என் காலண்டையிலிருப்பாள்.

என் அன்னை யீற்றிற்கூறிய மொழி காலகதியில் உண்மையாயிற்று; அன்னை இறக்கும்போது நான் வீட்டில் இல்லை; கல்லூரியிலிருந்து அடுத்த நாள்தான் வந்தேன். ஈமப் புறங்காட்டில் இறுதிச்சடங்கு நடக்கும்போது அன்னையினுடைய மொழிகள் என் நினைவிற்கு வந்தன; காலண்டை பலமுறை விழுந்து நமஸ்கரித்தேன்; சுற்றத்தாருள் ஒருவர் என் கையைப்பற்றி வீட்டுக்கு அழைத்துச் சென்றார்; அன்று முதலாக கண்ணகி அம்மையாரை என் குலதெய்வமாக மாத்திரமல்ல, என் அன்னையாகவும் கருதி வழிபடுகிறேன்; அம்மையாருடைய பெயரே எனது அன்னையினுடைய பெயருமாக விருந்தபடியால் என் குல தெய்வமே எனக்கு அன்னையுமாயிற்று என்று நினைத்து வழிபடுவது எளிதாயிற்று.

பின்னுளில் கல்லூரியிலிருந்தோ, வேறிடத்திலிருந்தோ எனது கிராமத்திற்குப்போக நேரிடின் முதன் முதலாக அம்மையாருடைய கோயிலுக்குப்போய் நமஸ்கரித்துப் பின்புதான் வீட்டுக்குப் போவேன்; என் உள்ளத்தில் படிந்து என்னை வருத்துகின்ற குற்றங் குறைகளையெல்லாம் அன்னையாருக்கு உரைப்பதுபோலக் கண்ணகியம்மையாருக்கு உரைப்பேன். பாலப்பருவத்திலே தெய்வமொன்றுண்டு என்னுமெண்ணம் மனதிலுதித்தபோது கையெடுத்து நான் வணங்கிய கண்ணகியம்மையார் மீதுள்ள பத்தி எனக்கு நாடோறும் வளர்ந்து வந்தது. பாலபாடங்கள் பயின்றுகொண்ட பின்னர் என் கையில் முதன்முதல் வைக்கப்பட்ட புத்தகம் 'அஸ்வமேத பர்வம்.'

இப் புத்தகத்தில் இராமாயணக் கதை முற்றிலும் சுருக்கமாகவும், அஸ்வமேதபர்வம் விரிவாகவும் எழுதப் பட்டிருந்தது. இப் புத்தகத்திலிருந்த படங்கள் வயதேறிய பின்னர் அழகில்லாதனவாகத் தோன்றியனவாகினும், சிறுவயதில் மனதைக் கவரும் தன்மையினவாக இருந்தன; வசிட்டர், தசரதன், இராமலட்சுமண பரத சத்துருக்கர், ஆஞ்சநேயர், சீதாபிராட்டியார் கௌசல்யாதேவி, கைகேயி, கூனி, இராவண விபீஷணுதியோர், சூர்ப்பணகை, மாரீசன், குகன் என்றின்னேரெல்லாம் முன்னுளிலிருந்து ஒழிந்து போனவர்கள் என்னும் எண்ணம் என்னுள் ளத்தில் ஒரு பொழுதும் உதிப்பதில்லை; சீதாபிராட்டி யார் அனுபவித்த துன்பங்களை நினைந்து நினைந்து உருகு வேன்; வண்ணனுடைய மொழியைக் கேட்டுப் பிராட்டி யாரைக் காட்டுக்கு அனுப்பிவிட்டது ஸ்ரீ இராமச்சந்திர னுடைய ஆண்மைக் குறைவாகும் என்று என் நெஞ்சம் தீப்பட்டது. ஆண்பிள்ளைகள் கொடுமையாளர்களென் றும், பெண்கள் தெய்வமாக வழிபடற்குரியர் என்றும் எனது பாலிய நெஞ்சம் நிச்சயமாக நம்பிற்று. அங்கு தயை முதலிய குணங்களனைத்தும் பெண்களிடத்தில் நிறைந் திருக்கக் கண்டேன். கோபமும் வெடித்தசொல்லும் ஒருவரை ஒருவர் வெல்லவேண்டும என்னும் எண்ணமும் ஆண்மக்களிடம் நிறைந்திருக்கக் கண்டேன். உயிரைப் பாதுகாத்து உணவூட்டி வளர்ப்பவர்கள் பெண்களென் றும், அங்ஙனம் வளர்க்கப்பட்ட உயிர்களை அழிப்பவர்கள் ஆண்பிள்ளைகளென்றும், நேரிற் கண்டுகொண்டேன். பெண்களெல்லாரும் சீதாபிராட்டியாரைப்போலவும், கண் ணகியாரைப்போலவும், தெய்வ மாதற்குரியவர் என்னும் எண்ணம் என்னுள்ளத்தில் நிலைப்படவே, விசேட தினங் களில் என்னுடைய தங்கை என் காலைத்தொட்டு நமஸ்

கரிக்க வரும்போது, அங்ஙனம் செய்யவொட்டாது தடுத்து அவளுடைய கைகள் இரண்டையும் பற்றி எனது தலையில் வைத்துக்கொள்வேன்.

மானிடரே பின்பு தேவராவர் என்னும் எண்ணம் சிறுவயது தொடக்கமுதல் என் மனதில் நிலைபெற்றிருந்தது. பாரதக்கதையைப் படிக்கும்போது தேவர் மானிட மகளிரை மணம் முடித்தாரென்றும், மானிடர் தெய்வ மகளிரை மணம் முடித்தாரென்றும் தேவர்களை மானிடர் யுத்தத்தில் வென்றார்களென்றும், தவத்தின்மிக்க மானிடர் இந்திரராகவும், பிரமராகவும் உற்பவித்துத் தேவராற் பூசிக்கப்பட்டனரென்றும் ஆண்டுச் சொல்லப்பட்டிருந்த சரிதைகள் எனக்குச் சிறிதேனும் அதிசயமாகத் தோன்றவில்லை.

அஸ்வமேதபர்வத்தைப் பலமுறை யான் வாசித்து முடித்தபின்பு என் தந்தையார் என் கையில் நான்கு பெரிய புத்தகங்களாகக் கட்டப்பட்டிருந்த பாரதவசனத்தை எடுத்துத் தந்தார். மாலைப்பொழுதில் தீபமேற்றிச் சிறிது நேரம் கழித்தபின்பு பீடத்தின்மேல் பாரதப்புத்தகத்தை வைத்து "நீடாழி உலகத்து" எனத் தொடங்கிக் காப்புச் சொல்லி இரண்டுமணிநேரம் வாசித்துப் பின்பு போசனத்திற்குப் போவது எனக்குரிய நித்திய கடமைகளுள் ஒன்றாக குறிக்கப்பட்டிருந்தது. பள்ளிக்கூடத்துப் பாடங்கட்கு காலைப்பொழுதும், பாரதவசனம் வாசிப்பதற்கு மாலைப்பொழுதுமாக இளமையிற் பழகிய பழக்கப்படியே நான் பின்னாளிலும், தமிழையும் ஆங்கிலத்தையும் ஒருங்கே கற்றுவந்தேன். சிறுவயதிலேயே பாரதவசனம் நான்கு புத்தகங்களை முதனின்று இறுதிவரையும் இரண்டு முறை வாசித்தேன்.

அதன்பின்பு பெரியபுராண வசனம், பஞ்சதந்திரம், விநோதரசமஞ்சரி, வில்லிபாரதம், நைடதம், கந்தபுராணம், காசிகாண்டம் முதலிய நூல்கள் ஒன்றின்பின் ஒன்றாக என் கைக்குத் தரப்பட்டன. ஒருநூலை முற்றிலும் முடிக்கும் வரைக்கும் மற்றொரு நூலினுட் பிரவேசிக்கக் கூடாதென்று எந்தையார் எனக்குச் சொல்லிய கற்பனை எனது கல்விப் பயிற்சிக்கு மிகவும் உபகாரம் ஆயிற்று என்பதைப் பின்னாளில் அறிந்துகொண்டேன். இவை எடுத்துக் கொண்ட பொருளோடு தொடர்பற்ற குறிப்புக்களாயினும் தமிழ் கற்க விரும்பும் மாணவர்கட்கு உபயோகமாதல் கூடுமென ஈண்டு வெளியிட்டேன்.

பாரதக்கதை படிக்கும்போது, விராடபர்வத்தில் வேற்றுக் கோலத்துடனிருந்த திரௌபதியை அணுகித் துன்புறுத்த முயன்ற கீசகனை வீமசேனன் வென்றானென வறிந்து ஐவருள்ளும் வீமசேனனே சிறந்த ஆண்பிள்ளை யென நிச்சயித்தேன். இராசசபையிற் தூர்த்தன் ஒருவன் திரௌபதிதேவியினுடைய துகிலைப் பற்றியுரியத் தருமம், தருமம் எனக்கூறித் தம்பிமாரை அடக்கிவைத்துக்கொண்டிருந்த தருமராசருடைய செய்கை எனக்குத் தருமமாகப் படவில்லை.

தனது கற்பின் வலிமையினாலே அளவிறந்த வஸ்திரங்களைப் படைத்துத் துகிலையுரிய முற்பட்ட தூர்த்தனுடைய கையைச் சோரப்பண்ணிய திரௌபதிதேவியார், தெய்வத்தன்மைபொருந்தியவரென்பதை அறிந்துகொண்டேன். திருவிளையாடற்புராணத்தின் வாயிலாக எம் பெருமாட்டியின் பெருமையை உணர்ந்தேன். தக்கன் மகளாக உற்பவித்த திரு அவதாரத்தில் நாயகர் பொருட்டுத் தம்முடலை விடுத்தவரும், பாண்டியன் மகளாக உற்ப

வித்த திருவவதாரத்தில் நாயகருக்குத் தம் அரசியலைக் கொடுத்தவரும், உலக மாதாவாகிய உமாதேவியா ரெனவும் அறிந்த மாத்திரத்தில் எமதிறைவ னிலும் பார்க்க எம் இறைவிமீது, எனக்கு நிறைந்த பக்தி உண்டாயிற்று. எல்லாநன்மைக்கும் உறைவிடமாக இவ் வுலகத்தில் விளங்கும் பெண்கள் அனைவரும் எம் பெரு மாட்டியின் அம்சமாக உதித்தவரென்பதை ஆன்றோர் மொழியினாலும், நூல் வாயிலாகவும், அறிந்துகொண்டே னாதலினால், பத்தினிப் பெண்டிர் நம்மால் வணங்கப்படும் தெய்வங்களாவர் என்பதை ஐயந்திரிபின்றி நிச்சயப்படுத் திக்கொண்டேன்.

தானம், தவம், நீதிமுறை எனுமிவை மாறுபட்ட இக் காலத்திற்கூட மழைபெய்து வருகின்றது. இதற்குக் காரணம் பத்தினிப்பெண்டிர் இக் காலத்தினும் இந் நாட்டி லிருப்பதுதான். மன்றோரஞ் சொல்வதையே தொழி லாகக்கொண்ட ஒருசார் வக்கீல்கள் மலிந்த, இக்காலத்தில் நீதிமழை பெய்வதற் கிடமில்லை. கற்புநெறியொன்று மாத்திரமே நமது தேசத்தைக் கலங்கவிடாமற் பாது காத்து வருகிறதென்பதை யாரும் மறுத்துரையார்.

---

# ௩. ஆசிரியப் பணி - - -

## தமிழ் பயிலல்

மயில்வாகனனார், கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைச் சீனியர் தேர்வில் தேறியவுடனே ஆசிரியராகத் தொண்டாற்றத் தொடங்கினார். முதன்முதல் அவர் படித்து உயர்வுற்ற கல்லூரியிலேயே ஆசிரியரானார். பின்னர் அன்னையார் இறக்க, அப்பதவியைத் துறந்து சொந்த ஊருக்கு வந்தவர், வாளாஇராமல், கல்முனைக் கத்தோலிக்க மிசன் பாடசாலையில் ஆசிரியராகக் கடமை யாற்றினார். அத்துடன் நின்றுவிடாமல் முழுப் பயிற்சிபெற்ற ஓர் ஆசிரியராகத் திகழவேண்டுமென்ற அவாவினால், ஆசிரிய கலாசாலைப் பிரவேசத் தேர்வுக்குப் படித்து, அதில் சிறந்த வெற்றிபெற்றார். ஆதலினால் ஈராண்டுப் பயிற்சி பெறும் வண்ணம் 1911-ம் ஆண்டு கொழும்பு மாநகரம் வந்தடைந்தார். பயிற்சிக்கல்லூரியில் மயில்வாகனனார் பயில்வதுடன் நின்றுவிடாமல், ஓய்வான வேளைகளில் தமிழ்ப் பண்டிதர்களிடம் பாடங் கேட்கலானார்.

அந் நாட்களில் யாழ்ப்பாணத் தமிழர்களிற் பலர் தொழிலைக்குறித்துக் கொழும்பு மாநகரிலுள்ள வெள்ளவத்தை என்னுமிடத்தில் வாழ்ந்துவந்தனர். அன்னார்களுள் பண்டிதர், எஸ். கந்தையா பிள்ளை, வித்துவான், சி. தாமோதரம் பிள்ளை, வித்துவான், எஸ். கைலாசபிள்ளை ஆகியவர்களிடம் மயில்வாகனனார், சங்க இலக்கியங்களை முறையாகப் பாடங்கேட்டுத் தமிழ் அறிவை விருத்தி செய்யலானார். இந் நாட்களில் மயில்வாகனனா

ருக்கு விவேகானந்தசபையில் தொடர்புஏற்படலாயிற்று. கொழும்பு விவேகானந்தசபையின் கற்றாண்களாக, மயில்வாகனனுர் பாடங் கேட்டவர்கள் திகழ்ந்தனர். ஆகையினுற்ருன் மயில்வாகனனுர் விவேகானந்தசபையின் உறுப்பினராக முடிந்தது.

ஆண்டுகள் இரண்டு மறைந்தன. மயில்வாகனனுர் பயிற்சிபெற்ற ஆசிரியர் என்னும் சான்றிதழுடன் 1912-ம் ஆண்டின் இறுதியில் வெளியேறினுர். மயில்வாகனனுரின் கல்விஅறிவை மெச்சிப்புகழ்ந்த அர்ச்மிக்கேல் கல்லூரி ஆசிரியர்கள், அவரை அன்புடன் வரவேற்று ஆசிரியப் பணிபுரிய அமர்த்தினுர்கள். இரண்டுஆண்டுகள் சிறந்த முறையிலே கற்பித்தார். பின்னர் ஆசிரியப் பதவியைத் துறந்து 1915-ம் ஆண்டு அரசினர் பொறியியற்கல்லூரியில் சேர்ந்து மேற்கல்வி கற்கலானுர். மயில்வாகனனுரிடம் இருந்த திறமையினுல் ஆசிரியர்கள் அவர்க்கு மனமுவந்து தோழமையானதுடன், தமக்குத் தெரிந்தவைகளை இன்முகத்துடன் சொல்லிக்கொடுத்தார்கள். ஆதலினுல் விஞ்ஞானச்சாலையில் சிறந்து விளங்கிய திரு. ஏ. எப். யோசெப், திரு. டப்ளியூ. என். றேய் ஆகியோரிடம் அக்கலையைப் பயிலலானுர்.

1916-ம் ஆண்டில் நடந்த தேர்வில் முதன்மையாகத் தேறி 'டிப்ளோமா' என்ற பட்டத்தைப் பெற்ருர். விஞ்ஞானக்கலையை ஆங்கிலத்தில் மயில்வாகனனுர் பயின்றுகொண்டு வந்தாலும், தமிழை அவர் புறக்கணித்துவிடவில்லை. அந்நாளில் தமிழர்கள் ஆங்கிலேய மோகத்திலே மூழ்கியிருந்தனர். ஆங்கிலேயரின் பழக்க வழக்கங்களையே கைக்கொள்ளலானுர்கள். நடுவட்டப் பகுதியில் வாழும் ஆங்கிலேயர் குளிருக்காக அணியும் கழுத்துப்பட்டியைக்

கூட நாகரிகத்தில் மூழ்கிய தமிழர்கள் வெப்பநிலைப் பூமியிலே கட்டி உடம்பு முழுவதும் வேர்வைகொட்ட மதி கெட்டு வாழ்ந்தனர். தமிழனுடன் தமிழ்பேசுவது அநாகரிகம் எனக் கருதினார்கள். அதுமட்டுமா? ஓர் பொது மேடையில் சொற்பொழிவாற்றும்படி அழைத்தால் 'எனக்குத் தமிழில் பேச அவ்வளவாக வராது' என்று ஆணவமாகக் கூறித் தமிழ்மொழியைக் கொலை செய்தார்கள். 'திரைகடல் ஓடித் திரவியந்தேடி'ப் பண்பாட்டை வளர்த்த தமிழனின் உயர்ந்த நாகரிகத்தை உதறியெறிந்துவிட்டு, நாகரிகத் தமிழ் - ஆங்கிலேயராகத் திகழ்ந்தனர். மக்கள் தமிழ் கற்பதை அவ்வளவாக விரும்பவில்லை. ஆங்கிலம் கற்றால் உயர்ந்த உத்தியோகம் கிடைப்பதுடன் கூடிய தொகைப்பணமும் கைக்கூலியாகக் கிடைக்கலாயிற்று. ஆகவே, தமிழ்மொழியைக் கற்பவர் தொகை அருகிக்கொண்டே வரலாயிற்று. இந்நிலையைக் கண்டு தமிழ்த்தாய் கண்ணீர் வடித்தாள்.

இவ்வாறான நிலையைக் கண்ணுற்ற மயில்வாகனனார் மிகவும் வருந்தினார். தம்மால் முடிந்தவரை தமிழ் அன்னைக்குத் தொண்டுபுரிய விரும்பினார். ஆதலினாற்றான் மயில்வாகனனார் விஞ்ஞானக்கலையைப் படித்துக்கொண்டிருந்தாலும், தமிழ்க்கலையையும் ஆர்வமுடன் படிக்கலானார். தாய்மொழியாம் தமிழ்மொழிக்கு முதன்மை இடத்தைக் கொடுத்துத்தான் ஆங்கில விஞ்ஞானத்தைப் பயின்றார். அந்த மாண்பினாற்றான் மயில்வாகனனார் 1916-ம் ஆண்டில் 'டிப்ளோமா' என்ற பட்டத்தைப் பெற்றதோடு, மதுரைத் தமிழ்ச்சங்கம் நடத்திய பண்டித தேர்விலும் தேறினார். இலங்கை நாட்டிலே, முதன்முதல் மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதத் தேர்வில் முதன்மைப் பெருமை மயில்வாகனனாருக்கு உடைத்து.

## சர்வானந்தர் காட்சி

ஸ்ரீ ராமகிருஷ்ண மிசனைச்சேர்ந்த சர்வானந்தர் இலங்கைக்கு வந்தருளினர். காவியுடையுடன் எளிய வாழ்க்கையை மேற்கொண்ட சர்வானந்தரின் பேச்சுக்களைக் கேட்ட மயில்வாகனனர் யாக்கை நிலையாமையைப் பற்றி எண்ணலானர். 'இருப்பது பொய் இறப்பது மெய்' என்ற மூதுரைக்கு மதிப்புரை தேடினர். மனிதன் நிலையானவன் அல்லன், எப்போதாதல் ஒருநாள் அவன் இறந்து விடுகிறன் என்ற தத்துவத்திற்குச் சர்வானந்தரிடம் தெளிவுற விளக்கம்பெற விரும்பினர். அதன்பயனக மயில்வாகனனர், சர்வானந்தரை நேரிலே தனிமையாகக் கண்டு உரையாடினர். அதனல் இருவருக்குமிடையிலே ஓர் அன்பு ஏற்படலாயிற்று. யாக்கை நிலையாமையைப்பற்றி மயில்வாகனனர் சர்வானந்தரிடம் விளக்கமாக அறிந்தார். ஆதலினல் மயில்வாகனனர் துறவு பூண்டு தமிழ்த்தாய்க்கும், தமிழர்சமயத்திற்கும் தொண்டுபுரிய வேண்டுமென்று எண்ணினர். தம் எண்ணத்திற்கேற்ப ஞான குருவாக, சோதிச்சுடர்போல் சர்வானந்தர் வாய்க்கப் பெற்றது தம் பாக்கியமே எனக் கருதலானர்.

ராமகிருஷ்ண மிசன், சமயத்திற்காகச் செய்யும் தொண்டுகளையும், மக்களின் வாழ்க்கை மேலோங்குவதற்காகப் புரியும் பணிகளையும் கண்டு மயில்வாகனனர், ராமகிருஷ்ண மிசனில் சேர்வதற்கு ஆவல் கொண்டார். இதனல் மயில்வாகனனர் தத்துவம் சமயம் ஆகியவைகளை ஊன்றிப் படிக்கலானர்.

மண், பெண், பொன் ஆகிய முப்பெரும் ஆசைகளைத் துறந்து, துறவியாகித் தொண்டு செய்வதனல் போதிய

ஞானமும், சிறந்த கல்வி அறிவும் வேண்டுமெனக் கண்டத னால் மேலும் படிக்கலானார்.

கொழும்பில் வாழ்ந்த காலையில் மயில்வாகனனாருக்கு சர்வானந்தரின் நட்புக்கிடைத்தமையினால், பிற்காலத்தில் தன்னலமற்ற துறவியாகத் திகழவேண்டுமென்ற உறுதி உண்டாயிற்று. அந்த உறுதியின் பயனாகத்தான் முன் கூட்டியே தம்மை ஆயத்தப்படுத்திக் கொள்ளவும், பல துறைகளில் ஆராய்ச்சி செய்யவும், ஆங்கில மொழியிலே பட்டங்கள் பெறவும் முடிந்தது.

## விஞ்ஞான ஆசிரியர்

1916 ஆம் ஆண்டு பண்டிதர் மயில்வாகனனார் 'டிப் ளோமா' என்ற விருதுடன் வெளி உலகைநோக்கியவரை, அரசினர் பொறியியற் கல்லூரியின் இரசாயன உதவி ஆசிரியராகக் கலைப்பீடம் அமர்த்திக்கொண்டது.

தமக்கென வாழாது பிறருக்கு உழைக்கும் பரந்த மனப்பான்மைகொண்ட மயில்வாகனனார், சிறந்த முறை யில் ஆய்வுக்கூடங்களில் புதிய புதிய பரிசோதனைகளின் மூலம் எளிய நடையில் அனைவருக்கும் விளங்கக்கூடிய தாகப் போதனைகளை நடத்தினார். இதன்பயனாக, மாண வர்கள் மயில்வாகனனாரைப் போற்றிப் புகழ்ந்தனர். அந்தப் புகழ் கொழும்பு நகரத்துடன் நின்றுவிடாமல் தமிழர்கள் வாழும் இடங்களெங்கும் பரவலாயிற்று. அதன் பெரும் பேறாக 1917 ம் ஆண்டில் அர்ச் சம்பத் கிரிசியார் கல்லூரி யின் விஞ்ஞான விரிவுரையாளராக அமரும்படி கல்லூரி யின் தலைவர் வேண்டிக்கொண்டதின் பயனாக மயில்வாகன னார் சம்பத்திரிசியார் கல்லூரியின் விஞ்ஞான பீடத்தை அலங்கரித்தனர்.

மாணவர்கட்கும் புதுப்புதுப் பாடல்களை ஊட்டுவ துடன் தாமும் புதுப்புது நூல்களைப் படித்துக்கொண் டும் வரலானார். இரண்டாண்டுகளாக இடையறாத முயற்சியின்பயனாக, மாணவர்களை வளர்த்ததுடன், தம் மையும் வளர்த்து ஓர் புதிய தேர்வினுள் புகுவதற்குத் தயார் செய்து கொண்டார்.

அதன்பயனாகத் தம் முயற்சியினால் பிறர் துணை யின்றிப் படித்து லண்டன் பல்கலைக்கழகம் நடத்திய பி. எஸ். ஸி. தேர்விற்றேறினார். கணிதவல்லுநராக மயில்வாகனனார் விளங்கினாலும், தமிழ்மொழியை மேன் மேலும் கற்பதற்காகச் சிறந்த அறிஞர்களைத் தேட லானார். அம்முயற்சியினால் சுன்னாகம் குமாரசாமிப் புலவரை அண்டித் தோழமைகொண்டு தமிழ் அறிவைப் பெருக்கலானார்.

இந்நாட்களில் இந்துக்கல்லூரியின் முகாமைக்கார ராக விளங்கிய திரு. திருவிளங்கம் அவர்கள் சிறந்த சித்தாந்த வல்லுநராகத் திகழ்ந்தார். ஆதலினால் அன்னா ருடன் நெருங்கிப் பழகி நட்புரிமை கொண்டார்.

இவர்களைவிட மேலும் பல தமிழ்வல்லுநர்களுடன் தோழமை பூண்டு யாழ்ப்பாணத்திலே தமிழ்மொழிக்குச் சேவை செய்யலானார்.

## தலைமை ஆசிரியர்

இக்காலையில் தமிழர்கள் ஆங்கில மோகத்தில் மூழ் கிக் கிடந்தாலும், விஞ்ஞானக்கலையில் போதிய திறமை கொண்டவர்கள், அவ்வளவாகப் பெருகிவிடவில்லை. மிக வும் சிலரே விஞ்ஞானக்கலையை ஓரளவு கற்றனர். அதி லும் பரந்த அறிவும், செறிந்த மனப்பான்மையும் கொண் டவர்கள் அரிதிலும் அரிதெனலாம்.

மயில்வாகனனார் விஞ்ஞானஅறிவுடன், தமிழிலே பண்டிதராகவும் விளங்கினார். ஆதலினால் மயில்வாகனனாரை, யாழ்ப்பாண மக்கள் ஓர் சிறந்த அறிஞராக மதித்தார்கள். விஞ்ஞானக்கலையைத் தமிழிலே சொல்வதற்கு யாரும் முன்வராதகாலையில், மயில்வாகனனார் தமது இனிய செந்தமிழ் நடையிலே விஞ்ஞானத்திற்கு விளக்கம் கொடுத்தமையினால் அவ்வப்போது பாராட்டுதலுக்கு உரியவரானார். சுருங்கக்கூறின், அந்நாட்களில் மயில்வாகனனாரிடம் இருந்த விஞ்ஞானத்திறமையும், தமிழ்த் திறமையும் யாரிடமும் இருக்கவில்லையெனலாம். இதனை உத்தேசித்து, மானிப்பாய் இந்துக்கல்லூரி நிர்வாக சபையினர் மானிப்பாய் இந்துக்கல்லூரியின் தலைமை ஆசிரியராக அமர வேண்டினார்கள். மயில்வாகனனாரும் அதற்கிணங்கி 1920-ம் ஆண்டு இந்துக்கல்லூரியின் தலைமை ஆசிரியர் பதவியை ஏற்றுக்கொண்டார்.

மயில்வாகனனார் கல்லூரியின் வளர்ச்சிக்காக உழைத்தார். அரும்பாடுபட்டு ஆய்வுக்கூடமொன்றைக் கல்லூரியில் நிறுவினார். ஆய்வுக்கூடத்திலே விஞ்ஞானம் போதிக்கக் கல்லூரியில் தகுந்தவர்கள் இல்லாமையினால், அப்பொறுப்பையும் தாமேயேற்றுத் திறம்பட நடத்தினார். மேலும் மாணவர்களுக்கு இலத்தீன் மொழியைத் தமிழ்மொழியுடன் இணைத்து ஏற்றத்தாழ்வுகளை ஆங்கிலத்துடன் ஒப்புநோக்கித் தமிழின்மாண்பை மாணவர்களுக்கு உணர்த்தினார்.

இலங்கையில் தமிழ்மொழியை வளர்க்கவோ, தமிழைப் போற்றிப் புகழவோ வழிவகைகள் இல்லாமையைக் கண்டு, தமிழ்மொழியின் வளர்ச்சிக்காக ஒரு கழகம் நிறுவுவதற்கு அல்லும் பகலும் பாடுபடலானார். பல அறிஞர்

களைக் கலந்து தமிழ்மொழியை வளர்க்கக் கழகம் இல்லாமையை எடுத்துரைத்து, தமிழ்மொழிக்கழகம் ஒன்றை அமைக்கவேண்டுமென்று முயற்சி எடுத்தார். அதன் பயனாக மயில்வாகனனார் யாழ்ப்பாணம் ‘ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கத்’தைத் தொடங்கி வைத்தார். இவரது முயற்சியினால் இச்சங்கம் உருவாகியது தமிழ் மக்களின் பெரும் பாக்கியமென்றுதான் சொல்லவேண்டும்.

யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷாவிருத்திச் சங்கம் ஓர் கலைக்கழகமாகத் திகழ்வதற்கு முன்னர், பண்டிதர்களை உருவாக்கவென்று ஓர் சங்கம் யாழ்ப்பாணத்தில் இருந்தாலும், அது சிறந்த பயனைக் கொடுக்கவில்லை. காலப் போக்கில் சங்கம் மேல்நோக்கி வளராமல் கீழ்நோக்கி இறங்கலாயிற்று. இச்சங்க உறுப்பினர்களில் சிலரைக் கொண்டு மயில்வாகனனார், ஆரியதிராவிட பாஷா விருத்திச் சங்கத்தை நிறுவினார்.

சங்கத்தைத் தொடங்கினால் மட்டும் போதுமா? அச்சங்கம் இனிது வளரவும், தமிழ்மொழி மணங்கமழச் செய்யவும் வேண்டுமன்றோ? அதற்காக மயில்வாகனனார், பிரவேச பண்டிதத்தேர்வு, பாலபண்டிதத்தேர்வு, பண்டிதத் தேர்வு ஆகிய முத்தரம்கொண்ட தேர்வுகளை ஏற்படுத்தினார். மேற்படி தேர்வுகள் இனிது நடைபெறுவதற்காக, மயில்வாகனனார் தேர்வு முதல்வராகவும், மேன்மையான உறுப்பினராகவும் விளங்கினார். நாளடைவில் சங்கம் வளர்வதற்காகப் பல குறிப்புக்களையும், ஆக்க வேலைகளையும் கொடுத்துள்ளார். அவைகளுள் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுகிறேன்.

1. உயர்தரக் கல்விபயிலும் மாணவர் கைக்கொள்வதற்குரிய முறைகள் இரண்டுள. அவற்றுள் ஒன்று பல

துறைக்கண்ணுஞ் சிலச்சில பயின்று கல்வி நிரம்புதல். பிறிதொன்று ஒருதுறைக்கண்ணுள்ள நூல்களனைத்தினை யும் ஐயந்திரிபற ஆராய்ந்து புலமை நிரம்புதல். முதலாவ தாகிய முறை மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் கண்ணும் யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத் தின்கண்ணும் கைக்கொள்ளப்பட்டுவருகிறது. இரண்டாவ தாகிய முறை பண்டைக்காலத்துத் திருவாவடுதுறை முத லிய ஆதீனங்களிலே கைக்கொள்ளப்பட்டுவந்தது. பண்டை முறையை மீட்டும் வழக்குக்குக் கொண்டுவருதல் நமது சங்கங்களின் கடமையாகலின் ஈண்டுத்தரப்படும் குறிப்பு கள் அறிஞரால் ஆராயத்தக்கன.

2\. அ. இலக்கணம், சங்கநூல், காப்பியம், இதிகாசம், புராணம், பிரபந்தம், சைவசித்தாந்தம், வைணவ சித்தாந்தம், நியாய வேதாந்தம், நாற்கவிப் புலமை, எனத் தனித்தமிழ்ப் புலமையைப் பத்துத் துறைக ளாக இப்பொழுது வகுத்துக்கொள்ளலாம்.

ஆ. நாளடைவில், கணிதம், சோதிடம், வைத்தியம், பௌதிகம், சித்திரம், சிற்பம், இசை, நாடகம், என்னும் இத்தொடக்கத்துறைகள் பலவற்றைச் சேர்த்துக்கொள்ளலாம்.

இ. இத்துறைகளிலே யாதாயினுமொன்றில் தேர்ச்சி பெறுவோர் "ஆசிரியர்" எனவும், ஒரு மூன்றில் தேர்ச்சி பெறுவோர் "இளம் பேராசிரியர்" என வும், ஒரைந்திற் தேர்ச்சி பெறுவோர் "பேரா சிரியர்" எனவும் பெயர் பெறுதற்குரியர்.

ஈ. பாலபண்டிதத் தேர்விலாவது, பண்டிதத் தேர்வி லாவது தேர்ச்சி யெய்தினோரே, இப் பரீட்சைக்கு வருதற்குரியர்.

உ. பாடவகை வருமாறு "..............................."
இப்பகுதியில் "இலக்கணத் தமிழாசிரியர்" முதல் "நாற்கவிப் புலமைத் தமிழாசிரியர்" ஈருகவுள்ள ஆசிரியர் தேர்வுகள் பத்துக்கும் பாடத்திட்டம் வகுத்துள்ளார்கள்.

ஊ. இந்நாட்களில் வெளிவந்த ஆராய்ச்சி உரைநடை நூல்களும், இவற்றிற்குச் சார்பான ஆங்கில நூல்களும் "வரன்முறைத் தமிழ்" (Literary History and Criticism) எனவொரு தனித்துறையாக ஆராயற்பாலன.

மயில்வாகனனார் குறிப்பிட்டுள்ளபடி "ஆசிரியர்" "இளம்பேராசிரியர்", "பேராசிரியர்" தேர்வுகளை ஈழ நாட்டில் நடத்தினல் நன்மைபயக்குமென்பது வெள்ளிடைமலே. மயில்வாகனனார் அன்று தொடங்கி வைத்த ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் இன்றுவரை எத்தனையோ பண்டிதமணிகளை ஈழநாட்டிற்கு அளித்து விட்டது. இனிமேலும் அளித்துக்கொண்டே வரும்.

## மொழிபெயர்ப்பு ஆசிரியர்

பன்னிரண்டாவது வயதிலேயே மயில்வாகனனார் கவி இயற்றுவதிலே வல்லுநராகிவிட்டார். பின்னர் மயில்வாகனனார் வளர்ந்துகொண்டு வந்ததுபோல், அவரது கவிதை இயற்றும் வன்மையும் வளர்ந்து, முன்னிலும் பன்மடங்குகளாகப் பெருகலாயிற்று.

தமிழ்மொழிக் கவிதைகளை அள்ளி அள்ளிச் சுவைத்ததுடன் நின்றுவிடாமல் ஆங்கிலக் கவிதைகளையும் படித்துச் சுவைப்பதில் அவாவுடையவரானார். பாரதநாட்டுக் கவிஞரான இரவீந்திரநாத் தாகூரின் கவிதைகளையும் விரும்

பிப் படிக்கலானுர். ஆய்வுக் கூடத்திலே வேலே செய்யும் போதும், சிந்தனேயின்றி அமைதியாக இருக்கும் வேளே களிலும், மயில்வாகனனுர் கவிதைகளேப் படித்து இன்புறத் தவறமாட்டார். பிறமொழிகளில் பரந்துகிடக்கும் கவிதை களின் சிறப்புக்களேக் கண்டு வியப்புறுவார். இதுபோன்ற கவிதைகளேத் தமிழ்மொழியிலே மொழிபெயர்க்க வேண்டு மென்று அவாக்கொண்டார். தமிழ்மொழி மட்டும் தெரிந்து, ஏனேயமொழிகள் தெரியாதவர்களுக்கு மொழி பெயர்ப்புக்கவிதைகளினுல் சுவை கூடுமென உணர்ந்தார். ஆதலினுல் ஒய்வான வேளேகளில் தமிழ்மொழியிலே மொழிபெயர்த்துத் தமிழ்க்கவிதை இலக்கணத்தினுள் அமைக்கலானுர். இந்தவகையிலே மயில்வாகனனுர் எத்தனே கவிதைகளே மொழிபெயர்த்துள்ளாரென்று வரை யறுப்பதரிது. ஏனெனில் அவர் இருந்தகாலேயில் நமக்கு விட்டுச்சென்ற சில கவிதைகள்தான் கிடைக்கக் கூடியன வாக இருக்கின்றன. கீதாஞ்சலி என்னும் நூலில் மயில் வாகனனுருக்கு மிக விருப்பம். ஆதலினுல் அதன் கவிதை களிற் சிலவற்றைத் தமிழ்மொழியிலே தந்துள்ளார். ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் என்னும் திங்கள் இதழிலே கீதாஞ்சலி மொழிபெயர்ப்பைக் கடவுள்வணக்கச் செய்யுள் களாக யாத்துள்ளார்.

என்னுயிர்க் குயிரே யேழையே னுடல
மெங்கணு நின்றிருப் பரிசம்
மன்னிய துணர்ந்தே உடலினேத் தூய்தா
வைத்திருக் குஞ்செயல் மறவேன்
துன்னுமென் னுளத்தி லறிவொளி பெருக்குஞ்
சுடர்நிக ருண்மைநீ யதனுல்
இன்னல்செய் பொய்யி னெண்ணமே புகாம
லென்றுநான் முயன்றகற் றிடுவேன்.

*   *   *

கோயிலாய் நீயென் னிதயமே கொண்ட
குறிப்பினை யுணர்ந்துளே னதனல்
தீயன யாவும் அகற்றியே உளத்திற்
செவ்விதா மன்பல ரமைப்பேன்
மேயநின் னருளே வலிமையை யளிக்கும்
வித்தினை யுணர்ந்தபான் மையினல்
நேயமாய்ச் செய்யுங் கருமங்க ளனைத்தும்
நின்னியல் புணர்த்திநின் றனவே.

மயில்வாகனனர் கவிதை அமுதைத் தாம் பருகுவதுடன் நில்லாது மற்றையோர்க்கும் பகிர்ந்தளிக்கும் இயல்புடையவர்.

இந்நாட்களில் நவநீத கிருஷ்ணபாரதி அவர்கள், மாவைக் கவுணியன் வெண்ணெய்க் கண்ணனர் என்னும் நூலை எழுதியபோது, அதற்குச் சிறந்த முன்னுரையைச் செந்தமிழ்நடையிலே மயில்வாகனனர் வழங்கினர்.

---

## போர்ப்பணி புரிதல்

உலகவரலாற்றிலே ஓர் மாற்றம்; ஆமாம். 1914-ம் ஆண்டு என்றால் மக்களுக்கு ஓர் நடுக்கத்தை ஏற்படுத்தும். இந்த ஆண்டிற்றான் ஐரோப்பாவின் பெருநிலப் பரப்பு முழுவதும், போர்ப்பாசறையில் மூழ்கியது. 1914 ம் ஆண்டு ஆனித்திங்கள் ஆஸ்திரிய கங்கேரிய இளவரசனை பேர்டினந்து தன் மனைவியுடன் போஸ்னியாவிற்குச் சென்றபோது, சேர்பியாவிடம் பற்றுக்கொண்ட போஸ்னிய இளைஞன் ஒருவனால் சுட்டுக் கொல்லப்பட்டான். இக்கொலைக்கு சேர்பியா அரசாங்கம் உடந்தையாக இருந்ததெனக் குற்றஞ்சாட்டி, ஆஸ்திரியா கடுமையான விதிகளை விதித்தது. அவைகட்கு 24 மணிக்கால அளவிற்குள் விடைதர வேண்டுமென்றும் கூறியது. விதிகளுள் சிலவற்றை சேர்பியா ஏற்றுக்கொண்டது; சிலவற்றை ஏற்க மறுத்துவிட்டது ; இதன்பயனாகச் சினங்கொண்ட ஆஸ்திரியா 1914 ம் ஆண்டு ஆடித்திங்கள் 28-ம் நாள் சேர்பியா மீது போர் அறிக்கைவிடுத்தது. இதனைக்கண்ணுற்ற ரசியா தன்படைகளைத் திரட்டலாயிற்று ; அதனால் ஜெர்மனி ரசியாவைத் தாக்கியது ; உடன்படிக்கையின்படி ரசியாவுக்கு உதவும் முகமாக ஆவணித்திங்கள் 3 ம் நாள் பிரான்ஸ் ஜெர்மனி மீது படையெடுத்தது.

ஜெர்மனியர் பெல்ஜியத்தையும் தாக்கினார்கள். இதனால் ஆவணித்திங்கள் 4-ம் நாள் பிரித்தானியா போரில் இறங்கியது. இவ்வாறாக ஐரோப்பியநாடுகளனைத்தும் பெரும்போரில் கலந்துகொண்டன. நாளடைவில் உலக

வல்லரசுகளும் பங்குபெறலாயிற்று. உலகப்பெரும்போரி ணுல் எத்தனையோ ஆயிரக்கணக்கான மக்கள் தங்க ளின் தேசங்களுக்காக இரத்தம் சிந்தி உயிரைப் பலியிடு வதைக் கேள்வியுற்ற மயில்வாகனனாரும் தேசிய எழுச்சி யினுல் உந்தப்பட்டார்; தம்மால் முடிந்தவரை நாட்டிற் குப் பணிபுரிய விரும்பினுர். அதன்பயனுக ஓர் போர் வீரராக நாட்டிற்கு இரத்ததானம் செய்ய முன்வந்தார்.

மயில்வாகனனுர் முன்வந்தகாலையில் உலகத்தையே அதிரச்செய்த பெரும்போர் ஓர் உடன்பாட்டுநிலைக்கு வந்தது. ஆதலினுல் மயில்வாகனனுரின் போர்ப்பணி தேவையற்றதாகியது. தேசத்திற்குப் பணிபுரிய மயில் வாகனனுருக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. ஆகவே தமி ழகத்திற்குத் தொண்டுபுரிய விரும்பினுர். சர்வானந்த ரின் காட்சி கிடைத்த நாள்தொடக்கம் மயில்வாகன ஞரின் வாழ்க்கையிலே ஓர் மாறுதல் எழலாயிற்று. 1916ம் ஆண்டில் தொடங்கிய மாற்றம் குறையாமல், மேலும் மேலும் வளரலாயிற்று. துறவறநிலையிலே ஒழுகி மக்க ளுக்குத் தொண்டுசெய்ய வேண்டுமென்ற ஆவல், மயில் வாகனனுரை மிகவும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு வளரலாயிற்று.

இந்துக்கல்லூரியின் தலைமைப்பீடத்தில் அமர்ந்த காலையில், அதன் முகாமைக்காரரான திருவிளங்கம் அவர்கள் மயில்வாகனனுருக்குச் சிறந்த நண்பராக விளங் கினுர். சமயஆராய்ச்சித் துறையிலும் திருவிளங்கம் சிறந்து விளங்கினுர். இத்தகைய ஆற்றலும் அறிவும் நிரம் பப்பெற்ற திருவிளங்கம் நோய்வாய்ப்பட்டார். நாளடை வில் அவரை நோய் நன்ருகப்பற்றி உருவத்தை மாற்ற லாயிற்று. இதனைக்கண்ணுற்ற மயில்வாகனனுர், மிகவும் வருந்தினுர். திருவிளங்கம் அவர்களின் நிலைமை, மயில்

வாகனனாருக்கு 'யாக்கை நிலையாமை'யைத் தெள்ளெனக்
காட்டக்கூடியதாக இருந்தது. பின் திருவிளங்கம் சிவ
பதமடைந்தார். அதனை அறிந்த மயில்வாகனனாரின் மன
நிலைமை ஓர் உச்சத்தை அடைந்தது. சிறந்த அறிஞராகத்
திகழ்ந்த திருவிளங்கத்தின் இறப்பு மயில்வாகனனாரின்
வாழ்க்கையிலே பெரிய ஒரு மாறுதலை ஆக்கியது. யாக்கை
நிலையாது; அஃது என்றேனும் ஒருநாள் அழிந்து மண்
ணொடு மண்ணாக மாறிவிடும். ஆதலினால் பெற்ற யாக்கை
யைப் பிரியுமளவும் மக்கள் கூட்டத்திற்கு தொண்டுசெய்ய
வழிநடத்துவதானால், துறவே மேலானதெனக் கண்டார்.

துறவறத்தை மேற்கொள்ள வேண்டுமென்ற எண்
ணம் மயில்வாகனனாருக்கு 1916-ம் ஆண்டில் ஏற்பட
லாயிற்று. காலப்போக்கில் வளர்ந்து, திருவிளங்கம் இறக்
கவும், அந்நிலை உச்சநிலையை அடைந்துவிட்டது.

இன்னும் காலத்தைக் கடத்திக்கொண்டிருப்பது
நல்லதல்ல எனக்கண்ட மயில்வாகனனார், ஆசிரியப் பதவி
யைத் துறந்தார். அதனைக் கண்ணுற்ற மாணவர்கள்
மிகவும் வருந்தினார்கள். இதனால் தம்கொள்கை மாறுத
லடைந்துவிடுமோ என்று மயில்வாகனனார் எண்ணவில்லை.
அத்தனை திடமான வைராக்கிய எண்ணம் அன்றே ஏற்
படலாயிற்று. துறவற நிலைக்காக ஆறு ஆண்டுகளாகத்
தம்மைத் தயாரித்துக் கொண்டவர், மனங்கலங்குவாரா?
ஆகவே 1922-ம் ஆண்டு துறவி ஆவதற்காக ராமகிருஷ்ண
மிசனில் சேர்ந்து சென்னைக்குப் புறப்பட்டார்.

## துறவு பூணல்

மனிதனுக்கு இறைவனை நாடும் குணம் எப்பொழு
தும் இருக்கிறது; எத்தனையோ பல ஆயிரக்கணக்கான

ஆண்டுகளாக மனிதன் ஆண்டவனைத் தேடுகிறான்; இன்றும் தேடிக்கொண்டே இருக்கிறான்; இனிமேலும் தேடிக் கொண்டே இருப்பான்.

மனிதன் கடவுளின் உருவத்தைப் பல பல வடிவங்களாக நினைக்கிறான். நினைப்பை எழுத்தாணிகொண்டு ஏடுகளில் எழுதியும் வைத்துள்ளான். பலநாட்டு மக்களும், பலவிதமாகக் கடவுளை உருவங்களில் ஆக்கி, பல பெயர்களையும் கொடுத்துள்ளார்கள். கடவுளின் கருணைக்காக உயிர்ப்பலிகூட இறுத்து வேண்டிநின்றான். இன்னும் பலவுள.

கடவுள் தீப்பிழம்பானவரென்று தீயை வழிபடலானார்கள். புருஷோத்தமனென்னும் எண்ணத்தோடு, மனிதர்கள் பலவிதமான விக்கிரகங்களை ஆக்கி வழிபட்டனர். சிலர் அழகுத்தெய்வமான முருகனை வழிபட்டனர். சிலர் உலகத்தந்தையாகிய சிவனை வணங்கினார்கள்; சிலர் அண்ட சராசரங்களை அடக்கியவள் காளியென்று போற்றிப் பணிந்தார்கள். இன்னும் எத்தனையோ பெயர்களைச் சூட்டி ஆண்டவனை ஆராதித்தனர். உருவமற்ற இறைவனுக்கு உருவம் அமைப்பது தவறென்று, அருவ வழிபாட்டைச் சிலர் ஏற்றுக்கொள்ளலானார்கள். இக்கொள்கைக் கேற்றாப்போல் வள்ளுவநாயனார்,

> மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
> நிலமிசை நீடுவாழ் வார்.

எனத் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். எளியவர்க்கு எளியவன் இறைவன். இறைவனை நோக்கி எத்தனையோ யோகிகள் கடுந்தவம் புரிந்து காட்சிகொடுக்கும்படி கோரினார்கள். கடுந்தவம் புரியும் யோகிகள் இறைவனுக்கு ஓர் வடிவத்தை மனத்தில் நிறுத்தித்தான் யோகத்

தில் ஈடுபட்டனர். ஆகவே அன்பர்களின் அடியவணுகிய ஆண்டவன் அவரவர்களின் விருப்பப்படியே காட்சி கொடுத்தார். ஆதலினுல் பலர் பல உருவங்களை ஆண்டவனுக்குக் கொடுத்து ஆகமங்களையும் ஏற்படுத்தி வைத்துள்ளார்கள். வள்ளுவர் காலத்திற்கு முதலிலே மக்கள் கடவுளை ஆண்வடிவமாகவும், பெண்வடிவமாகவும் நினைந்து வழிபட்டார்கள். இறைவன் ஒரு பாகத்திலே பெண் வடிவமும், மறுபாகத்திலே ஆண்வடிவமும் கொண்டு விளங்குகிருரென்று பெருமைப்படுத்தினுர்கள். இதனை ஐங்குறு நூறு என்னும் சங்க நூலில்,

"நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே"

என்று கடவுள்வாழ்த்தாகக் கூறப்பட்டிருக்கிறது. காலஞ் செல்லச் செல்லத்தான், முழுமுதற்கடவுளுக்குக் கோவில் எடுப்பித்து வழிபாடு செய்யலானுர்கள். பின்னர் இக் கோவில்கள் பல பெயருடன்மாறி, ஆயிரக்கணக்கான கோவில்களாக நாட்டில் நிலவுகின்றன.

கடவுளைத் தொழுதல், கடவுளை நினைத்தல், மனிதனுக்குத் தொண்டுசெய்தல், இம் முப்பெருங் கடமைகளை மக்களிடம் நிலைநிறுத்த வேண்டிக் கோவில்கள்போல் மடங்களும் நாட்டிலே எழலாயின. இம்மடங்களிலே முற்றத் துறந்த முனிவர்கள், யோகிகள் இருந்து ஆண்டவனின் அருளை அன்பாக எடுத்தோதினுர்கள். ஆண்டவனின் அருளை வெளிப்படுத்துவதுடன் நில்லாது, மக்களுக்கு நல்ல நெறியிலே வாழ்வதற்கும் வழிகாட்டினுர்கள். ஆதலினுல் மடாலயத்தின்மாண்பு மக்கள் மனதிலே கொடிவிட்டுப் படரலாயிற்று.

ஆண்டவனின் ஆலயம்போலவே மடாலயங்களும் விளங்கின. மடாலயத்தில் எல்லாநலங்களும் இருந்தன. துறவிகள் வாழ்வதற்கேற்ற இடங்கள், போதிப்பதற்கு இடங்கள், ஆண்டவனுக்கு வழிபாடு செய்ய இடங்கள், இவ்வாறாக இன்னும் பல பிரிவுகளாக மடாலயங்கள் திகழ்ந்தன. அந்தவகையிலே 'தமிழ்நாட்டின் தலைமை நகரமான சென்னையில் ராமகிருஷ்ண மடாலயம் எழுந்தது. ஸ்ரீராமகிருஷ்ணரின் போதனைகளை உலகிற்கு அறிவிக்கும் முகமாகத்தான் இம்மடாலயம் எழுந்தது. அத்துடன் சைவசமயத்திற்குரிய உயர்ந்த கொள்கைகளை நிலைநிறுத்தவும் இம்மடாலயத்தார் தொண்டாற்றினார்கள். ஆதலினாற்றான் மயில்வாகனனார் மூவாசைகளைத் துறந்து, துறவியாகத் தமிழ்த்தாய்க்குத் தொண்டுசெய்யும் நோக்கமாக 1922-ம் ஆண்டில் ராமகிருஷ்ண மடாலயத்திற்கு வந்தார்.

துறவி ஆவதற்கு வேண்டிய ஒழுங்குநெறிகளைக் கைக்கொண்டு வரலானார். மனப்பக்குவம் பெற்ற பின்னர்த் தானே துறவி ஆக முடியும். ஆதலினாற்றான் மயில்வாகனனார் நியமங்களைக் கடைப்பிடிக்கலானார். மயில்வாகனனார்க்கு மடாலயத்தார் 'பிரபோத சைதன்யா'' என்னும் தீட்சாநாமத்தை வழங்கினார்கள். துறவறநிலை முற்றும் அமையப்பெற்று, ஞான உபதேசம் பெறும்வரையும் மயில்வாகனனார், "பிரபோத சைதன்யா" என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்தார்.

## மடாலய வாழ்க்கை

உலகத்தை ஓர் புதிய முன்னேற்றப் பாதைக்கு அழைத்துச் செல்லும் விஞ்ஞானம், மக்களிடம் ஓர் பரபரப்பை உண்டாக்கியது. சிறப்பாக ஒரு மாற்றத்தை

உண்டாக்கியதெனலாம். ஆங்கிலமொழியைச் கற்றவர்களே அதிகமாக விஞ்ஞானத்தைப்பற்றி அறிந்திருந்தார்கள். ஆங்கிலங் கற்காதோர், ஏனையவர்கள் கூறுவதைச் செவிக்கேள்வியாக ஏற்றுவந்தார்கள்.

நம்நாட்டு நிலையில் அன்று எல்லாராலும் ஆங்கிலம் கற்றுக்கொள்ள இயலாது போயிற்று. பொதுமக்கள் ஆங்கிலக்கல்வியை நினைக்கவும் முடியாதவர்களாய் இருந்தார்கள். அது அவர்களது தவறல்ல. பொருளாதாரநிலைமையின் புதுமையே. நடுத்தரவகுப்பாரும், பணம் படைத்தவர்களுந்தான் விஞ்ஞானஉலகத்தோடு ஒட்டிக் கொண்டிருந்தார்கள். மற்ற மக்களோ, விஞ்ஞானஅறிவைப் பெருக்கிக்கொள்ள முடியாதவர்களாய் இருந்தார்கள். ஆதலினால் இக்குறைபாட்டை நீக்குவதற்காகப் பல அறிஞர்கள் முயற்சி எடுக்கலானார்கள். விஞ்ஞான உலகத்திலே இன சமயமாறுபாடு, ஏழை பணக்காரன் என்ற வேற்றுமைகளை நோக்காமல் எல்லோரையும் அழைத்துச் செல்ல ஆலோசனைகள் கூறப்பட்டன.

ஆங்கிலமொழியிலே இருந்த விஞ்ஞானப்புதுமைகளை எளிய இனிய தமிழ்நடையிலே எல்லோருக்கும் விளங்கும்படி சொல்லல் வேண்டும். படியாத மக்கள்கூடப் பண்பாக விளங்கத்தக்கதாகச் சொல்லவேண்டும் என எண்ணி அதற்காகப் பல அறிஞர்கள் முயன்று, தமிழ்நாட்டின் தலைநகரமான சென்னையிலே "தமிழர் கல்விச் சங்கம்" ஒன்றை ஆரம்பித்தார்கள்.

தமிழர் கல்விச்சங்கம் அடிக்கடி கூடிப் பல விஞ்ஞானப் பொருள்கள்பற்றிய விளக்கங்களும், விரிவுரைகளும் நிகழ்த்தியது. ஆகவே, பிரபோத சைதன்யா அவர்களும் பல விரிவுரைகளை ஆற்றினார். அத்துடன் நின்று

விடாமல், விஞ்ஞானப்பொருள்கள்பற்றிய இனிய பல கட்டுரைகளை இதழ்களின் வாயிலாக எளிய தமிழ்நடையிலே மக்களுக்களித்தார். விஞ்ஞானச் சொற்களுக்கேற்ற தமிழ்ச்சொற்களையும் ஆக்கினார். கலைச்சொற்கள் என்ற தலைப்பிலே பல பெயர்களை இதழ்களிலே வெளியிட்டார்.

மடாலய வாழ்க்கையை மேற்கொண்டிருந்தகாலையில் பிரபோத சைதன்யா அவர்கட்குப் பல தமிழ்ப்பெரியார்களின் உறவு கிடைக்கலாயிற்று. அவர்களுள் டாக்டர் உ. வே. சாமிநாதையர், யோகி சுத்தானந்த பாரதியார் போன்றார்களின் தொடர்பு ஏற்பட்டது குறிப்பிடத் தக்கது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடாலயத்தாலே வெளியிடப்படும் 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' என்னும் தமிழ்த் திங்கள் வெளியீட்டிற்கும், 'வேதாந்த கேசரி' என்னும் ஆங்கிலத் திங்கள் வெளியீட்டிற்கும் ஆசிரியராகத் திகழ்ந்தார். தமது பொறுப்பிலே வெளிவரும் இரு இதழ்களிலும் பிரபோத சைதன்யா அவர்கள், அரிய பல சிறந்த பொருள்களை வெளியிட்டு மக்களின் பாராட்டுதல்களுக்குரியவரானார்.

இந்நாட்களில் கொழும்புநகரிலே இலங்கைப் பல்கலைக் கழகம் தொடங்கப்பட்டது. பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பீடத்துப் பொருத்தமுள்ளவர் பிரபோத சைதன்யா அவர்கள்தான் சிறந்தவரெனக் கண்டமையினால், விவேகானந்த சபையின் சார்பாகப் பதவியை ஏற்கும்படி வேண்டினார்கள். அப்போது பிரபோத சைதன்யா அவர்கள் துறவியாவதற்குரிய கொள்கைகளைக் கடைப்பிடித்ததனால் மடாலய விதிக்கிணங்கப் பிற இடங்கள் செல்ல முடியாது. ஆதலினால் சுவாமி சர்வானந்தர், இலங்கை அன்பர்

களுக்கு மடாலய நியமங்களை எடுத்துக்காட்டி, பிரபோத சைதன்யா அவர்களை அனுப்பமுடியாமல் இருப்பதற்காக மிகவும் வருந்துவதாகத் தெரிவித்தார்.

## தீக்கை பெறல்

பிரபோத சைதன்யா அவர்கள் முற்றத்துறந்த முனிவராதற்காகத் தம்மை ஆயத்தப்படுத்திக் கொண்டதை, மடாலயத்தார் பாராட்டினார்கள். 1924-ம் ஆண்டு சித்திரைப் பௌர்ணமியன்று சுவாமி சிவானந்தர் ஞான உபதேசஞ்செய்து, துறவறப்பெயரான "**சுவாமி விபுலாநந்தர்**" என்ற பெயரைக் கொடுத்தார்கள்.

விபுலானந்த அடிகள் துறவற வாழ்க்கையை மேற்கொள்வதற்கு முதற்காரணமாகத் திகழ்ந்தவர் சர்வானந்தரேயாகும். அதனாற்றான் மயில்வாகனனார் மடாலயத்திலே சேர்ந்து, சிவானந்தரின்கீழ்த் துறவறத்தை மேற்கொள்ள முடிந்தது. ஆகையாற்றான், விபுலாநந்த அடிகளின் குருவாக சுவாமி சிவானந்தர் விளங்கினார். தம்மைத் தொண்டுசெய்யும்படி துறவியாக உருவாக்கிவிட்ட சுவாமி சிவானந்தரை அடிகளார் என்றும் மறந்தாரில்லை. பொது மேடைகளில் சொற்பொழிவுகள் ஆற்றுங்கால் வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் குருநாதரைப் போற்றிப் புகழத் தவறமாட்டார்.

சுவாமி சிவானந்தர்பால் அளவுகடந்த பத்தியும், நம்பிக்கையும் கொண்டவரென்பதைக் குருவணக்கமாக அவர் இயற்றிய கவிதைகளே இனிது காட்டும்! "குரு ஸரண ஸ்தோத்திரம்" என்னும் பண்புநிறைந்த வணக்கத்திலே, சுவாமிகள் தம் குருநாதரை வழிபடுமுகமாகப் பாடிய கவிதைகள் சிறப்புடையன :

ஈசனருள் மெய்ஞ்ஞான வொளிவிளக் கந்திருத்தி
இழிந்துழன்ற ஆருயிரை யிருக்கையினி லிருத்தி
ஆசையென்னுங் கனலவித்திவ் வேழையை யன்றாண்ட
அணிமலர்ச்செஞ் சேவடியை யனைத்தினையும் விளக்கும்
தேசுசெறி பிரதியென்கோ சஞ்சீவி யென்கோ
திருவருளின் மழைபொழியும் செழிய முகிலென்கோ
பாசமொன்று நீர்மைதரப் பரிந்துவந் தென்சிரத்திற்
படிந்த திருவடியிணையை யடைந்தது மற்புதமே. (க)

காரிரும்பு நிகர்மனத்தைப் பொன்னாக்கி யுளத்திற்
கருதியவெல் லாமளித்துக் கரைகாணாப் பிறவி
ஆரிரும்பௌ வங்கடக்க அருள்செய்தெனை யாண்ட
அணிமலர்ச்செஞ் சேவடியை யனைத்தையும் பொன்னாக்கும்
சீரிலகு மணியென்கோ பதுமநிதி யென்கோ
தெய்வமுத்திக் கரைசேர்க்குஞ் சிறந்ததெப்ப மென்கோ
பாரிலொன்று நீர்மையவாய்ப் பரிந்துவந்தென் சிரத்திற்
படிந்ததிரு வடியிணையை யடைந்தது மற்புதமே. (உ)

நோவொழிய வினைப்பகற்றி நுவலநின்ற முதுமை
நோய்மரண முறுதலிலாத் தேவர்நிலை பெறுதற்
காவனசெய் தானந்த நிறைவினை யன்றளித்த
அணிமலர்ச்செஞ் சேவடியை யடைந்தவரைப் புரக்கும்
தேவதரு நிழலென்கோ தெள்ளமுத மென்கோ
சிவானந்த நிதிபொதிந்த செழும்பேழை யென்கோ
பாவமொன்று நீரமைந்து பரிந்துவந் தென்சிரத்திற்
படிந்த திருவடியிணையை யடைந்தது மற்புதமே. (ங)

என்ற கவிதைகளிலிருந்து அடிகள் தம் குருநாதரான சுவாமி சிவானந்தரைப் போற்றும் புதுமை புலனாகின்றது.

மட்டக்களப்பின் வரன்முறையிலே வந்த பண்டிதர் 'மயில்வாகனனார்' பி. எஸ். ஸி., அவர்கள் இராமகிருஷ்ண மடாலயத்திலே சேர்ந்து 'பிரபோத சைதன்யா' என்ற மடாலயப் பெயரால் அழைக்கப்பட்டவர், முற்றத்துறந்த

முதுமுனிவரான சுவாமி சிவானந்தா அவர்களால் 'சுவாமி விபுலாநந்த'ராகத் தாயகத்திற்குப் பணிபுரியத் துறவியாக அளிக்கப்பட்டார்.

அடிகள் ஞானஉபதேசம் பெற்று, தாயகத்தை நோக்கியபோது, பெருமை ததும்பிய அழைப்பு ஆதரவுடன் வந்தது. திருப்பாதிரிப்புலியூரின் ஞானியார் மடாலயத்தில் நடைபெறும் ஆண்டுநிறைவு மாநாட்டிற்குத் தலைமை தாங்கிச் சிறப்பிக்கும்படி வேண்டினார்கள். அடிகளும் அதற்கிணங்கி மாநாட்டின் தலைமை தாங்கிச் சிறந்த விரிவுரை நிகழ்த்தினார்கள்.

## மதங்கசூளாமணி ஆசிரியர்

ஸ்ரீ இராமகிருஷ்ண விஜயம் என்னும் திங்கள் வெளியீட்டிற்கு அடிகள் ஆசிரியராகத் திகழ்ந்த காலையில்தான் அரிய பல நூல்களைப் படிப்பதற்கு வாய்ப்புக் கிடைத்தது. ஆங்கிலக் கவிஞர்களின் கவிதைகளைப் படித்துச் சுவைத்தார். அந்த நுகர்ச்சியைத் தம்முடன் மட்டும் வைத்துக் கொள்ளாமல், தாயகத்திற்கும் அன்புடன் அளிக்க முன் வந்தார். அதன் பெரும் பேறுகத்தான், **'ஆங்கிலவாணி'** **'பூஞ்சோலைக் காவலன்'** என்ற சிறந்த கட்டுரைகளை எழுதி வெளியிட்டார். இக்கட்டுரைகள் தமிழ்மக்களை மிகவும் கவர்ந்தன. ஆங்கிலநடையைத் தமிழ்நடையில் புதுமையுடன் அடிகள் மாற்றி அமைத்தது கவர்ச்சியாகவும், படிப்பதற்கு இனிமையாகவும் இருந்தது. ஆதலினால் தமிழகம் அடிகளைப் பாராட்டியது. இம்மாதிரி மேன்மேலும் பல கட்டுரைகளை எழுதும்படி பல அன்பர்கள் அஞ்சல்கள் வாயிலாக வெளியிட்டனர்.

ஆங்கிலப் பெரும்புலவரான செகப்பிரியரின் நாடகங்களை அடிகள் படித்து இன்புற்றார்கள். அத்தகைய ஓர்

நாடகச் சூழ்நிலையைத் தமிழ்மொழியிலும் ஆக்குவதற்கு எண்ணங் கொண்டார்கள். 1924-ம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஆண்டுநிறைவுவிழாவில் கலந்து கொள்ளவும் "நாடகத் தமிழ்" என்னும் பொருள்பற்றி ஓர் விரிவுரை செய்யவும் அடிகளுக்கு வாய்ப்புக் கிடைத்தது. சங்கத்தின் செயலாளரான திரு. டி. சி. சீநிவாச ஐயங்கார் அவர்கள் அடிகளின் விரிவுரையை ஓர் நூலாக்கித் தரும்படி அடிகளிடம் கேட்டுக்கொண்டார். அதற்கிணங்கிய அடிகள், செகப்பிரியரின் நாடகங்களையும், தனஞ்சயனார் தந்த தசரூபத்தையும், மூலமாகக்கொண்டு சிலப்பதிகாரத்திலுள்ள நாடக நூன்முடிபுகளை ஒரளவிற்கு விளக்குதற்கேற்றதாக, **மதங்க சூளாமணி** என்ற நூலை எழுதினார்கள். முன்னரே கேட்டுக்கொண்டபடி, மதங்க சூளாமணியைக் கண்ட செயலாளர் மகிழ்வுடன் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வெளியிட்டார்.

புதுப்பொலிவுடன் புறப்பட்ட மதங்க சூளாமணிக்கு எங்கும் நல்வரவேற்புக் கிடைத்தது. தமிழகம் அந்நூலைப் போற்றிப் புகழ்ந்தது. முத்தமிழின் ஒரு பகுதியாகிய நாடகத்தமிழினை நலம்படக் காட்டும் மதங்க சூளாமணி பண்டிதர்களால் பண்புடன் வரவேற்கப்பட்டது. நாடக நயத்தின் திறமைக்கு எடுத்துக்காட்டான மதங்க சூளாமணியிலிருந்து ஓர் சிறு பகுதி கீழே விரிகிறது :

> மகத தேசத்திலிருந்து புறப்பட்ட ஓர் கப்பலில் சுதாரனும், விமலையும் பிரயாணஞ் செய்தனர். இவ்விருவரும் அன்னை வயிற்றில் ஒருங்கு தங்கியிருந்து பிறந்த இரட்டைப்பிள்ளைகள். மொழி, உருவம், உயரம் முதலியவற்றால் ஒருவரையொருவர் முற்றும் நிகர்த்தவர். கப்பல் ஈழநாட்டுக் கரைக்குச் சமீபமாகச்

சேதப்பட்டுப் போயிற்று. ஒரு மாலுமியினது உதவி யாற் கரைசேர்ந்த விமலை தன்னைக் காப்பாற்றிய மாலுமியை நோக்கி, "நண்பா! இஃதென்ன நாடு" என்றனள்.

**மாலுமி:** அம்மணி இஃது ஈழநாடு.

**விமலை:** என் அண்ணன் பொன்நாட்டுக்குப் போய்விட் டான். எனக்கு ஈழநாட்டில் என்ன வேலை. ஒருவேளை நீரிலமிழ்ந்தாது தப்பியிருக்கவும் கூடும்.

**மாலுமி:** அம்மணி தாங்கள் தப்பியதே பேரதிர்ஷ்டம்.

**விமலை:** இந்நாட்டினை அரசுபுரிகின்ற மன்னவன் பெய ரென்ன?

**மாலுமி:** மாசேனன்.

**விமலை:** அவர் பெயரை என் தந்தை குறிப்பிடக் கேள்வி யுற்றிருக்கிறேன். அவர் அக்காலத்தில் விவாகமாகா தவராக இருந்தார்.

**மாலுமி:** ஆம். அவருக்கு இன்னும் விவாகமாகவில்லை. ஒரு மாதத்துக்கு முன்பு இவ்விடமிருந்து நான் போன பொழுது இந்த ஊரிலுள்ள பெரியார் ஒருவரின் புதல்வியாகிய கமலையென்னுஞ் சீமாட்டிமீது மன் னன் காதலுற்றிருப்பதாக நகரத்து ஜனங்கள் பேசிக் கொண்டார்கள்.

**விமலை:** இந்தப் பெருமாட்டி எப்படிப்பட்டவள்?

**மாலுமி:** மிக நல்லொழுக்கம் வாய்ந்தவள். இவளது தந்தை இறந்து இன்னும் ஓராண்டு நிறையவில்லை. இதற்கிடையில் தமையனும் இறந்துபோயினன். இந் நிகழ்ச்சிகளினால் மனம் மறுகித் துன்புற்று ஆடவர்

முகத்தையே பார்ப்பதில்லையென்னும் விரதத்தோ டிருக்கிறாள்.

**விமலை:** இந்தச் சீமாட்டியிடம் நான் வேலைக்கமருதல் கூடாதா?

**மாலுமி:** துன்பத்தால் வருந்துகிற அந்தச் சீமாட்டியாரை யும் அடுப்பதில்லையென்று தெரிகிறது.

**விமலை:** நல்லது மாலுமி. நீ எனக்கு ஓர் உதவிசெய்ய வேண்டும். யான் ஆண்பிள்ளை வேடத்தோடு போய் மாசேன மன்னனுடைய சேவகத்திலமரக் கருது கிறேன். என் சகோதரனுடைய உடைகளைப்போன்ற உடைகள் சில நீ தயாரித்துக்கொண்டு வருதல் வேண்டும்.

விமலை ஆண்பிள்ளை உடைதரித்துச் சேவகன் எனப் பெயரிட்டுக்கொண்டு மன்னனுடைய சமஸ்தானத்துக்குப் போய் அவனிடத்தில் வேலைக்கமர்ந்தனள்.

இவ்வாறாகப் பல நாடக நயங்களைக் கொண்டதாக மதங்க சூளாமணி திகழ்கிறது. நாடகத் தமிழிலே ஓர் முன்னேற்றத்தை மதங்க சூளாமணி ஏற்படுத்தியதென் பதிற் சந்தேகமின்று.

## இலங்கை மீளல்

1922-ம் ஆண்டு இலங்கையிலிருந்து பண்டிதர் மயில் வாகனனாராகச் சென்றவரை ராமகிருஷ்ண மடாலயத்தார் சுவாமி விபுலாநந்தராக 1924-ம் ஆண்டு தமிழகத்திற்களித் தனர். மயில்வாகனனாரின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாறு தல் மாண்பானது; எளிதில் யாருக்கும் கிட்டாததாகும். அத்தகைய பெறற்கரும் பேற்றைப் பெற்றவரை இலங்கை

மக்கள் காண்பதற்கு அவாவினர்கள். ஆதலினல் தாயகத் திற்கு மீளும்படி பன்முறை கேட்கலானர்கள். அதற் கிணங்கிய அடிகள் 1925-ம் ஆண்டில் தாய்நாட்டிற்கு வந்தார்.

மட்டக்களப்பின் தியாகவீரனை, ஈழ வளநாட்டின் தவப்புதல்வனைக் கண்ட மக்கள் மகிழ்வுற்றார்கள்; அடிக ளின் திருவாயிலிருந்து எழும் முத்தமிழ் மாரியைக்கேட்ப தற்கு விழைந்து நின்றனர்; ஈழத்தின் தலைநகரமான கொழும்பிலே, விவேகானந்த சபையினரால் அடிகளுக்கு சிறந்தவோர் வரவேற்பளிக்கப்பட்டது; அந்த வரவேற் பிலே அடிகள் "யாக்கை நிலையாமை"யைப் பற்றி ஓர் அரிய செந்தமிழ்ச் சொற்பொழிவாற்றினர்.

அடிகளை நேரிலே கண்டு மகிழ விரும்பிய மக்கள், தங்கள் தங்கள் ஊர்களுக்கு வரும்படி அழைப்புக்களை அனுப்பிக்கொண்டேயிருந்தனர். "பணி செய்தலே என் கடன்" எனக்கண்ட அடிகள், தாயகத்து மக்களின் அழைப்புக்களை ஏற்றுப் பல இடங்களுக்குஞ் சென்றார்கள். இலங்கையின் சிறந்த நகரங்களாகத் திகழும் கண்டி, காலி, வதுளை முதலிய நகரங்களுக்குச் சென்று பல நாட்கள் தங்கி, பல இடங்களிலும் செந்தமிழின் தீஞ்சுவையை விளக்கினர். மாத்தளை, தொப்பிதோட்டம், அட்டன் போன்ற துணைநகரங்களுக்குஞ் சென்று பல விரிவுரைகளை நிகழ்த்தினர். அதுகாலை யாழ்ப்பாணத்தில் மாணவர் மாநாடு ஒன்று நடத்துவதற்கு வேண்டிய முயற்சிகளைப் பலர் செய்தனர். மாநாட்டிற்குத் தலைமை தாங்குவதற்குச் சிறந்த கல்வியறிவாளரைத் தேடிக்கொண்டிருந்தபோது, அடிகளின் வருகை அன்னார்கட்கு அளவிடமுடியாத மகிழ்ச்சியை ஊட்டலாயிற்று. ஆதலினல் அடிகள் மாண

வர்களின் வேண்டுகோளுக்கிணங்கி யாழ்ப்பாணம் சென்று மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார்.

அடிகள் தமது தலைமை உரையிலே, மாணவர்களின் வருங்கால உலகத்தைச் சுட்டிக்காட்டி, அதற்கு ஒவ்வொருவரும் எவ்விதம் ஆயத்தமாக வேண்டுமென்று, பல அரிய செயல்முறைகளை அழகாக எடுத்துக்கூறினார்கள். பின்னர் சைவமாணவர் சமாசத்திலே, இந்துசமயத்தின் பெருமை பற்றியும், இந்துசமயப் பேரன்பினர் கைக்கொள்ளவேண்டிய ஒழுக்கங்களைப்பற்றியும் விரிவுரை ஆற்றினார். மேலும் யாழ்ப்பாண அன்பர்களின் வேண்டுகோட்கிணங்கிப் பல பொதுமேடைகளில் சிறந்த பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அடிகள் யாழ்ப்பாணத்தில் நிகழ்த்திய எந்தச் சொற்பொழிவிலேனும், சமய குரவரான ஆறுமுகநாவலரின் பணியைப்பற்றிப் பேசாது விடவில்லை. அடிகளுக்கு நாவலரிடம் ஓர் தனிப்பற்று இருந்தது. அந்தப்பற்றினால் அடிகள் நாவலரைக் கவிதையிலே களிநடம் செய்யும்படி செய்தார்.

## ஆறுமுகநாவலர்

"நாவலரை நினைக்கும்போதெல்லாம், அவரது வாழ்க்கை நெறி என் உள்ளத்தைக் கவரும். கல்வி அறிவு மிகச் சிறந்ததே. ஆயினும் அவ்வறிவு ஒழுக்கத்தோடு இயையும்போது அதற்கு ஓர் தனிச்சிறப்பு உண்டாகிறது" என்று கூறினார்கள் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்.

"நாவலரைப்போல் முன்னும் இப்பொழுதும் தமிழ் அறிஞர்கள் இல்லை. ஒருவேளை இருந்தாலும் அவரைப் போலத் தமிழ்மொழியையும், நல்லொழுக்கத்தையும், சைவ

சமயத்தையும் வளர்த்து நல்ல தமிழ் உரைநடையிலே நூல்களை எழுதி அச்சிட்டு வெளிப்படுத்தித் தமிழ்நாட்டாருக்கு உதவிசெய்தவர் வேறொருவருமில்லை; பொருள் வரும்படிக்காகப் பிறரை வணங்காதவர்களும், அவரைப் போல் ஒருவருமில்லை" என்று சென்னை நீதிபதி திரு. தி. சதாசிவ ஐயர் கூறியுள்ளார். இந்தவகையிலே இன்னும் எத்தனையோ அறிஞர்கள் நாவலரைப் பாராட்டி இருக்கிறார்கள்.

ஈழநாட்டிலே தமிழை வளர்த்து, சைவத்தைக் காத்த பெருமை நாவலர் ஒருவருக்கே உரியதாகும். ஆதலினால் தான் அடிகள் நாவலரிடம் அளவிடமுடியாத பேரன்பு கொண்டார்கள். பிறநாட்டார்க்கும், உள்நாட்டார்க்கும் நாவலரைப்பற்றிப் பெருமையாகச் சொல்லி, மகிழ்வதுடன் நின்றுவிடாமல் அவரின் பணிகளையும், தன்னலங்கருதாத உயர்ந்த நோக்கங்களையும்பற்றித் தமிழ்நாட்டில் வீரமுரசு கொட்டினார். அத்துடன் நாவலரைப்பற்றி இசைத்தமிழால் ஏடுகள் பலவற்றை நிரப்பித் தமிழகத்திற்கு வழங்கினார்.

அடிகளின் இளமைப்பருவத்திலே, அவரின் தந்தையார் சிதம்பரதரிசனத்திற்காக அடிக்கடி செல்வது வழக்கம். சென்று திரும்பி வருங்காலையில் யாழ்ப்பாணத்திலுள்ள புண்ணியத் திருக்கோவில்களையும் தரிசித்து வருவார். யாழ்ப்பாணத்திலே சைவசமயக்கோவில்களில் நாவலரைப்பற்றிப் பேசிக்கொள்வது மரபு. அவரது நூல்களின் பெருமைகளையும் சொல்லிக்கொள்வார்கள். ஆதலினால் சாமித்தம்பி அவர்கட்கும் நாவலர்மேல் நன்மதிப்பேற்பட்டது. அவரின் நூல்களை ஒன்றும் விடாமல் வாங்கிப் படித்தார். தாம் படித்ததுடன் நில்லாது தம் மகனாருக்கும் கொடுத்துப் படிக்கச்செய்தார். அந்த முறையிலே

அடிகள் இளம்வயதிலேயே, பள்ளிப்பருவத்திலேயே, நாவலரைப்பற்றி நன்ருக அறிந்துகொண்டார். காலம் வளர்ந்து ஆண்டுகள் கூடியதுபோல் நாவலரைப்பற்றிய நல்ல கருத்துக்களும், அடிகளின் மனத்திலே வளர லாயிற்று. ஆதலினுற்ருன் அடிகள் நாவலரை மறக்காது அவரது பெருமையைத் தமிழகத்திற்குக் கவிதைமலர் மாலையினுல் புனைந்து வழங்கினுர்.

### வாழ்த்து

'ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள்கடியும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்.

பைங்க ணிளம்பகட்டின் மேலானைப் பான்மதிபோல்
திங்கள் நெடுங்குடையின் கீழானை—அங்கிரந்து
நாம்வேண்ட நன்னெஞ்சே நாடுதிபோய் நானிலத்தோர்
தாம்வேண்டுங் கூடற் றமிழ்.

சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே மலையாத
தண்டாரான் கூடற் றமிழ்.'

எனுஅ, நாவலந் தீவின் ஆர்வல ரேத்திய
தண்டமிழ்ப் பாவையை அண்டரும் விழையும்
அமிழ்துகு தீஞ்சொல் அணங்கினை இமிழ்திரை
ஆர்கலி சூழ்ந்த மாயிரு ஞாலத்து
மனவிரு ளிரிய வாழ்த்துதும் பணிந்தே.

### நூல்

தொல்லியல் வழுவாச் சைவநூற் புலவர்
தூநெறித் தமிழுரை யாளர்
நல்லியற் புலவர் இசைதரும் புலவர்
நாடக நவிற்றிய புலவர்

சொல்லியற் றுகைநூல் வானநூல் தருக்கம்
தோமறு கணித நூல் முதலாம்
பல்கலைப் புலவர்க் குறைவிட மாகிப்
பரந்திசை யெய்தும்யாழ்ப் பாணம். (க)

ஆரியர் ஆழி வேந்தரென் றவனி
புகழ்ந்துரை அளிக்கநல் லூரிற்
சீரிய செங்கோல் செலுத்திய வேந்தர்
சென்றபின் சைவநிந் தனைசெய்
பூரியர் ஆட்சி புக்கது கண்டு
பொருதுபுண் ணியத்திசை நடந்த
நேரியல் ஞான விளக்கெனு முனிவன்
நிறைபுகழ் மரபுமேம் படவே. (உ)

தில்லைவாழ் கூத்தன் திருவரு ளுருவாம்
சீர்ச்சிவ காமசுந் தரியார்
எல்லையில் கருணைக் கொள்கல மாய
எழிற்சிவ காமியார் வயிற்றில்
நல்லைவாழ் கந்தன் அருளினால் நல்லைக்
கந்தர்தம் தவப்பய னாக
வில்லைநேர் நுதலார் கண்வலைப் படாத
மெய்த்தவன் மகவென உதித்தான். (ங)

குலந்தரு செல்வன் அறுமுகப் பெயரும்
கோதில்சீர் ஒழுக்கமும் மருவி
நலந்தரு கல்வி கேள்வியால் நிறைந்து
நற்றமிழ் வடமொழி குடபால்
நிலந்தரு மன்னர் மொழியிவை உணர்ந்து
நீடுசீர் முருகனே யென்ன
அலந்தவர்க் குதவி நினைந்தது முடிக்கும்
ஆற்றலும் பெற்றுயர் வடைந்தான். (ச)

தன்னியல் புணரத் தலைவன தியல்பு
சாற்றிய சைவநூல் பலவும்
மின்னியல் சடையார் அருளினால் அச்சில்
மேவுதல் நலமெனத் துணிந்து

பன்னல மிகுந்த சென்னைமா நகர்க்குப்
படர்தர வெண்ணிநான் மறைகள்
துன்னிநின் றேத்துந் தொல்பதி தொழுது
தொலைவில்சீர் ஆவடு துறையில். (ரு)

பாவலர் போற்றும் ஞானதே சிகரைப்
பணிந்தவ ராணையின் வண்ணம்
பூவலர் கொன்றை புனைந்தவர் புகழைப்
புலமிகு மறிவர்கூட் டுண்ணக்
காவலர் வியப்ப உரைத்திடல் கேட்டுக்
கருணைகூர் தேசிகர் இவர்க்கு
நாவல ரெனும்பேர் தகுமென அளித்தார்
ஞாலத்தார் தகுந்தகும் என்ன. (சு)

சொல்லுதல் வல்லான் சோர்விலன் அஞ்சான்
துணிவுகொள் சிந்தையான் அவனை
வெல்லுதல் யார்க்கும் அரிதென உரைத்த
மெய்ம்மறைப் பொருட்கிலக் காகி
நல்லையி லுதித்த நாவலர் பெருமான்
நலந்திகழ் சென்னைமா நகரின்
எல்லையை நண்ணி இயற்கலை பரப்பும்
இயந்திரம் வாங்கிய பின்னர் (எ)

கருணையே யுருவாங் கண்ணுதற் பெருமான் !
கழலிணை பதிந்தவுள் ளத்தர்
அருணைமால் வரையின் சாரலிற் சின்னாள்
அமர்ந்தனர் திருமடத் ததிபர்
பொருணிறை தமிழின் புலத்துறை முற்றும்
புண்ணியர் தகவினை யெண்ணித்
தெருணிறை யுரவோய் ஈண்டுநீ வைகச்
சிந்தைசெய் திடல்நலம் என்றார். (அ)

தம்மை யீன்றெடுத்த அரசியல் நாட்டிற்
சைவமாஞ் சமயமும் புலவர்
செம்மைசே ருளத்திற் பொலிந்தமுத் தமிழும்
சீருறப் பணிபல புரிதல்

இம்மையிப் பிறவிக் கியைந்தமா தவமென்
றெண்ணியே விடைபெற்று மீண்டார்
எம்மையும் பயந்த ஈழமா நாட்டின்
இணையில்லாப் பெருநிதி யனையார். (கூ)

கடிகமழ் கொன்றைத் தாரினர் அழகிற்
காதலுற் றுருகுமெய் யன்பர்
வடியிலை வேற்க ணரம்பையர் வரினும்
மதித்திடா ராதலின் விதித்த
படியினில் தூய நெறிபுக நினைந்து
படிகலிங் கத்தினிற் றலைவன்
துடிமழுக் கரஞ்சேர் சுந்தர வடிவைத்
தொழுதிட எண்ணிய தூயோர். (க0)

நண்ணினர் வினைகள் நலிவுற அருளும்
நாவலந் தீவினை யடைந்து
புண்ணியந் திரண்ட உருவியல் ஞான
போதகா சிரியனைத் தொழுது
மண்ணினிற் பிறந்தோர் மனமய லகல
வளரொளிப் பிழம்பென நின்ற
விண்ணவர் முதலைப் பூசனை புரியும்
விதியினை மதியினிற் றெளிந்தார். (கக)

மன்னுமீ ழத்தை யடைந்து தொண்டாற்றி
மாமறைக் காட்டினை மேவித்
தொன்னலத் துறைசைத் தருமையம் பதியில்
தொகைவிரி வுரைபல நவிற்றி
முன்னமே ழிசையாற் செழுந்தமிழ் வளர்த்த
முதல்வரைப் பயந்தசீ காழி
என்னுமா நகரில் இறைவர்தாள் தொழுதார்
இன்றமிழ் வளர்த்தநா வலனர். (கஉ)

உரையுணர் விறந்த தனிமுதல் கருணை
உருவு கொண்டுல கெலாம் பயந்த
வரைமகள் உவகை விழியினுற் பருக
மாதவர் வாழ்த்தொலி யெடுப்ப

பரையுரு வாய மாமணி மன்றுட்
பதஞ்சலி யாது நின்றாடும்
விரைகமழ் கொன்றைத் தாரினு ராடல்
விரும்பிவந் தமரரும் பணிவார். (கங)

அத்திற மாய தில்லையம் பதியில்
ஆகம அளவையாற் சமைந்த
வித்தகக் கோயிற் கோபுரங் கண்டார்
விழிகணீர் பெருகமெய்ம் மறந்தார்
பத்தர்சீர் பரவும் நல்லைநா வலனுர்
பாரினிற் பன்முறை விழுந்தார்
அத்தரே யென்றார் அம்மையே யென்றார்
ஆடினுர் பாடினுர் அன்பால். (கச)

மாமணி மன்றுள் திருநடங் கண்டார்
மனநெகிழ்ந் துடையவர் பாதம்
பாமணி மாலைப் பனுவலாற் பரவிப்
பல்பகல் பிரிந்தகா தலனுர்
தாமணி மையிலே வருதல்கண் டுவகை
தழைத்தமெல் லியலெனத் தளர்ந்தார்
பூமணிச் சிலம்பி னெலிசெவிப் படலும்
புதுமைசேர் மருட்கையுற் றெழுந்தார். (கரு)

# ரு. பொதுநலப் பணிகள் - - -

## முகாமைக்காரத் தொண்டு

கிழக்கிலங்கையில் ஆரையம்பதி, மண்டூர், காரைத் தீவு, ஆனைப்பந்தி முதலிய ஊர்களில், இராமகிருஷ்ணன் சபையினரால் பள்ளிக்கூடங்கள் நடத்தப்பட்டு வந்தன. இலங்கையில் வெளிநாட்டாரின் ஆட்சி வேரூன்றியதனால், கிறித்துவசமயமும் வளரலாயிற்று. ஆதலினால் சைவ சமயம் கீழ்நிலைமையை அடைந்துகொண்டு வரலாயிற்று. அந்த நிலைமையை இயன்றவரை மாற்றுவதற்காகத்தான் இராம கிருஷ்ணன் சபையார் மேற்படி ஊர்களில் சைவசம யத்தை வளர்ப்பதற்காகப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி னார்கள்.

ஆரையம்பதியில் பழைமையான கண்ணகி கோயிலும், கந்தசுவாமி கோயிலும் இருக்கின்றன. ஆனைப்பந்தியிலே பண்டையநாளில் ஆக்கப்பட்ட பிள்ளையார் கோவில் இருக் கிறது. காரைத்தீவில் கற்பின் தெய்வமான கண்ணகி கோவில் பழைமையான புதுமையைப் புதுக்கியவாறு இருக் கிறது. மண்டூரிலே ஆறுமுகவேலனின் ஆதிக்கோயில் இருக் கிறது. இந்த நான்கு ஊர்களிலுமுள்ள கோவில்களின் வரலாறுகள், இதிகாசத்துடன் இணைந்தவைகள். மேலும் ஆலயங்களில் இருக்கும் உருவச்சிலைகள் அந்தந்த இடங் களிலே தானாகத் தோன்றியவைகளாகும். ஆதலினால் தான் இவ்விடங்களில் சைவசமயநெறிகளைக் காக்கப் பாட சாலைகளை ஏற்படுத்தினார்கள்.

பாடசாலைகள் ஏற்படுத்தப்பட்டு நடைபெற்று வந் தாலும், சமயம் வளர்ந்ததென்று சொல்லமுடியாது

அதேபோல் பாடசாலைகளும் வளர்ச்சியுறவில்லை. இதற்குக் காரணம் இப் பாடசாலைகளை நடத்திவந்த முகாமைக்காரர் என்று சொல்லலாம். இந் நாட்களில் அடிகள் சமயத் தொண்டு செய்வதைக் கண்ணுற்ற இராமகிருஷ்ணன் சபையார், கிழக்கு இலங்கையிலுள்ள இராமகிருஷ்ணன் பாடசாலைகளை நடாத்தும் முகாமைக்காரர் பதவியை அன்னாரிடம் ஒப்புவித்தார்கள்.

அடிகளும் மனமுவந்து இப் புனிதப்பணியை ஏற்றுக்கொண்டார்கள். தன்னலமற்ற சமயப்பணியைப் பாடசாலைகள்வழியாகச் செய்தல் சிறப்புடையதென அடிகள் கண்டார்கள். இன்று இளஞ்சிறாராக இருப்பவர்கள் நாளை நாட்டின் நல்ல மனிதர்களாவார்கள். ஆதலினால் அன்னார்கட்கு இளமையிலே சமயநெறிகளைப் புகட்டிவிட்டால், இல்லறவாழ்க்கையில், பெரிதும் பயன்படுமென்பது வெள்ளிடைமலை. அடிகளும் இதே கொள்கைகளை மேற்கொண்டு சமயத்தை வளர்க்கவும், பாடசாலைகளை மேலோங்கச் செய்யவும் திடங்கொண்டு, தொண்டுபுரியலானார்கள்.

கிழக்கில் மிகுதியாக அக்காலையில் கல்வியை வளர்த்த நிலையங்கள் மெதொடிஸ்த மிசன், கத்தோலிக்க மிசன் சபைகளாகும். இவைகள் கிறித்துவர்களால் மேற்பார்வை செய்யப்பட்டு வந்தமையினால், பாடசாலைகளில் கிறித்துவ சமய அறிவை ஊட்ட உறுதுணையாக இருந்தன. இந்த நிலைமையிலே சைவசமயம் எவ்வாறு வளரமுடியும்? இக் குறையை நீக்குவதானால், சைவசமயப் பாடசாலைகளை ஊர்தோறும் துவங்கவேண்டுமென்று அடிகள் உணர்ந்து, நடைமுறையிலே நடத்தவும் தொடங்கினார்கள். சைவ சமயத்தை வளமாகக்காட்ட எங்கெங்கு கோயில்கள்

இருக்கின்றனவோ, அங்கெல்லாம் இராமகிருஷ்ண மிசன் பாடசாலைகளை நிறுவுவதற்கு முயற்சிகள் எடுத்தார்கள். அதற்காக ஊர்கள்தோறும் சென்று, பல பெரியார்களைக் கண்டு, அவர்களின் அன்பையும், ஆதரவையும் பெற்றார்கள். அதன்பயனாகப் பல புதிய பாடசாலைகள் துவங்கப்பட்டன. இவைகளுள் காரைத்தீவு சாரதா வித்தியாலயமும், கல்லடி உப்போடை சிவானந்த வித்தியாலயமும் முக்கியமானவைகளாகும்.

## சாரதா வித்தியாலயம்

அடிகள் பிறந்து வளர்ந்த காரேறுமூதூரில், ஓர் இராமகிருஷ்ண மிசன் பாடசாலை இருந்தது. இதில் ஆண்களும், பெண்களுமாகப் படித்துக்கொண்டு வந்தார்கள். நாளடைவில் மாணவர்கள் மிகுதிப்பட்டதால், பாடசாலைக் கட்டிடங்கள் போதாமல் இருந்தன. இக் குறைபாட்டை நீக்குவதற்காக அடிகள் முயற்சி எடுத்தார்.

அடிகளின் இல்லத்திற்கருகில் ஓர் காணி வெறுமையாகக் கிடந்தது. இக்காணி அடிகளின் மாமனாரான இராமநாதபிள்ளை அவர்கட்கும், அடிகளின் தந்தையாருக்கு முரியதாகும். முதன்மையாக இராமநாதபிள்ளைக்கே உரியதெனலாம். அடிகளின் விருப்பத்தின்படி, இராமநாத பிள்ளை பாடசாலைக்கென அக் காணியைக் கொடுத்ததுடன், பாடசாலையைக் கட்டிமுடிக்கும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார். இக் காணியிலே கட்டப்படும் பாடசாலை பெண்களுக்கு எனத் தீர்மானிக்கப்பட்டு, சாரதா வித்தியாலயம் என்றும் பெயர் கொடுக்கப்பட்டது. இராமகிருஷ்ணரின் மனைவியின் பெயரே சாரதா தேவி. ஆகவே அவ் வுத்தமியாரைப் பெண்கள் மறவாமல் இருத்தற்

பொருட்டு இப் பெயர் வைக்கப்பட்டது. பாடசாலை கட்டு வதற்கான அடித்தளக் கல்லை 1925-ம் ஆண்டு ஐப்பசித் திங்கள் 28-ம் நாள் அடிகள் நட்டார். நன்னாளில் கால் கோள்விழா துவங்கிய கட்டிடம் எவ்வித இன்னல்களு மின்றி, இராமநாதபிள்ளையின் பொருளுதவியினால் எழுந் தது.

சாரதாவித்தியாலயம் இன்று பெண்களுக்கென்று தனிஉரிமையுடன் இருக்கிறது. இதில் நானூற்றுக்கு மேற் பட்ட மாணவர்களும், பல ஆசிரியர்களும் இருக்கிறார்கள். கன்னித் தமிழ்மொழியை வளர்ப்பதில், கிழக்கில் சாரதா வித்தியாலயத்திற்குத் தனிச் சிறப்புண்டு.

## சிவானந்த வித்தியாலயம்

கிழக்கு இலங்கையின் தலைநகரமான மட்டக்களப் பிலே ஆங்கிலக்கல்வியை வளர்க்கப் பல கல்லூரிகள் இருந் தன. இவைகளனைத்தும் கிறித்துவர்களாலே நடத்தப் பட்டு வந்தன. சைவசமயத்தின் உறைவிடமான மட்டக் களப்பிலே, சைவசமயநெறிகளைப் பரப்ப ஓர் ஆங்கிலக் கல்லூரி இல்லாதது ஓர் குறையென அடிகள் எண்ணினார். இக் குறையினை நீக்குவதற்காக முயற்சி எடுக்கலானார். மட்டக்களப்பு நகரத்திலே அவ்வமயம் கல்லூரி ஆரம்பிக் கத்தக்க இடம் கிடைக்கவில்லை. அதனால் அடிகளின் கவனம், மட்டக்களப்பிலிருந்து சற்றுத் தொலைவிலுள்ள கல்லடிஉப்போடை என்னும் ஊரில் காடுகள் உறைவிட மாகத் திகழ்ந்த பரந்த இடம் தென்படலாயிற்று. இந்த இடம் பெரிய பாட்டையின் அருகே இருப்பதுடன், பரந்த வெளியான இடமாகவும் இருந்தது. மக்கள் வதி வாரற்ற காடாக இருந்தமையினால் ஓர் கல்லூரி ஆரம்பிப்ப

தற்கு ஏற்றதாகவும் இருந்தது. ஆதலினுல் அடிகள் அக் காணியில் தம் தேவைக்கேற்ப ஐந்து ஏக்கர் நிலத்தை வாங்கினுர்.

ஓர் கல்லூரி நிறுவுவதானுல் பெருந்தொகைப் பணம் வேண்டும். மூவாசைகளையும் துறந்த அடிகளிடம் பணம் ஏது? ஆதலினுல் அவ்வூரிலேயே தனவந்தர்களாகத் திகழ்ந்த, திரு. கதிர்காமத்தம்பி உடையார், திரு. சபாபதிப்பிள்ளை உடையார் ஆகியோரிடம் பெருநிதி பெற்றுக் கல்லூரி கட்டுவதற்கான அடித்தளக்கல்லை 1926-ம் ஆண்டு கார்த்திகைத் திங்கள் 5-ம் நாள் அடிகள் நட்டார்.

மூன்றுஆண்டுகள் நடைபெற்ற கட்டிடவேலை 1929-ம் ஆண்டில் முற்றுப்பெற்றது. அதே ஆண்டு வைகாசித் திங்கள், அடிகள் கல்லூரியைத் திறந்துவைத்தார். அடிகளைத் தொண்டு செய்யும்படி தமிழகத்திற்கு அளித்தவர் சுவாமி சிவானந்தரேயாகும். தம் குருநாதரை அடிகள் என்றும் மறந்தாரில்லை. ஒருபோதும் அன்னுரை மறவாதிருக்கும்பொருட்டு, கல்லூரிக்குச் சிவானந்த வித்தியாலயம் என்றபெயரைக்கொடுத்துக் குருநாதரைப் பெருமைப் படுத்தினுர்.

அன்று 18 மாணவர்களுடன் வித்தியாலயம் ஆரம்பிக்கப்பட்டு, இன்று 600-க்கு மேற்பட்ட மாணவர்களைக் கொண்டதாய்க் கிழக்கு இலங்கையில் ஓர் சிறந்த கல்வி நிலையமாகத் திகழ்கிறது.

அடிகள் தம் உரிமைக் குழந்தையைப்போல் சிவானந்த வித்தியாலயத்தைப் பேணி வளர்த்துவந்தார். தாம் பெறும் ஊதியம் அனைத்தையும் சிவானந்த வித்தியாலய வளர்ச்சிக்காகவே, செலவிட்டார். அடிகள் எந்த இடத்திலிருந்தேனும், தொண்டுபுரிந்து கடமையாற்றினுலும், தம்

தாயகத்துச் சிவானந்தவித்தியாலயத்தை ஒருபோதும் மறந்தார்களில்லை.

அடிகள் இறைவனுடன் இரண்டறக் கலக்கும் வரையும், வாழ்க்கையின் பெரும்பகுதியை வித்தியாலயத்திற்காக உழைத்து, அதனை ஓர் சிறந்த கல்விச்சாலையாக்க முயன்றார். தமது செல்வக்குழந்தை, தமது வளர்ப்புக் குழந்தை என்று அடிகள் வித்தியாலயத்தைக் கண்ணின் கருமணிபோன்று பாதுகாத்து வளர்த்தார். இதனைச் சுவாமி நிஷ்காமாநந்தர் “விபுலாநந்த வெள்ளி விழா ”மணி மலர்க்கு வழங்கிய கட்டுரையில் சிறப்பாக எழுதியுள்ளார். ஆதலினால் அடிகளின் அழியாத அன்பிற்கு ஏற்ற சிவானந்த வித்தியாலயத்தைப்பற்றி, சுவாமி நிஷ்காமாநந்தர் கூற்றிலிருந்து ஒரு பகுதியைக் கீழே தருகிறேன்.

## அடிகளும் அடியேனும்[1]

சென்னை மயிலை ஸ்ரீ ராமகிருஷ்ணமடம் முன் மண்டபத்தின் ஒரு பக்கத்தில் பெரியதோர் வட்டமேஜை. அதைச் சுற்றிலும் சில நாற்காலிகள். எனது காலை வழிபாட்டை முடித்துவிட்டுத் தன்னந்தனியாக அந்த நாற்காலிகளில் ஒன்றின்மீது அமர்ந்திருந்தேன். எனது வெளித் தோற்றத்தில், அமைதி தோன்றினாலும் உள்ளத்திலோ அன்று பெரும்புயல், கொந்தளிப்பு, அமைதியின்மை. தமது தமிழ்ப்பணியால் தம்மை ஈன்று தமிழகத்திற்கு வழங்கிய தாய்நாடாம் ஈழத்திற்குப் பெருமையை வாங்கித்தந்த தனிப்பெருந்துறவர் பெருமான் விபுலாநந்த அடிகள், சிதம்பரத்திலிருந்து சில நிமிஷங்களுக்குள் சென்னைமடத்திற்கு வரப்போகிறார். நான் அவரை

1. விபுலாநந்த வெள்ளிவிழா மணிமலர், 12-5-49.

வரவேற்பதா? அல்லது அவருடன் பேசாமலே இருந்து விடலாமா? தொன்றுதொட்டு வரும் வழக்க முறைப்படி அவருடைய திருவடிகளைத் தொட்டுத் தொழுவதா? என்ற எண்ணங்கள் ஒன்றின்மேல் ஒன்றாய் என் உள்ளத்திலே எழுந்தன. அவர் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஊதியம்பெற்றுத் தமிழ்ப் பேராசிரியராக இருந்தது, துறவிகள் எப்படி வாழவேண்டுமென்று யான் அன்று எண்ணியிருந்தேனோ அக் கருத்துக்களுக்கு முற்றும் முரண்பாடாகத் தென்பட்டதுவே, என் மனதில் எழுந்த கோபக்கிளர்ச்சிக்குக் காரணம். இந்தச் சிந்தனை யிலே மூழ்கி என்னையே மறந்திருந்தேன்.

திருமடத்தின் முன்பு திடீரென ஓர் மோட்டார்க்கார் வந்து நின்றது. மடத்திலிருந்த சாதுக்களும், பிரமசாரி களும் உள்ளிருந்து வந்து மகிழ்வோடு அடிகளை வரவேற் றார்கள். இந்தச் சத்தத்தையெல்லாம் கேட்டு நானும் திடுக்கிட்டுத் தூக்கத்திலிருந்து விழித்தவன்போல எனது ஆழ்ந்த சிந்தனை கலைந்து எழுந்து நின்றேன். மடத்தி னுள்ளே சென்று ஒளிந்துகொள்ளலாமா என்ற எண்ண மும் உதித்தது. ஒரு முடிவுக்கு வருவதற்குள் அடிகளே என்னை நோக்கித் தமக்கே அமைந்த புன்முறுவலுடன் "தம்பி எப்படிச் சுகம்" என்ற இனிய வுரைகளோடு, எனது கையைப்பிடித்து மடத்துக்குள் அழைத்துச் சென் றார்; எனக்கோ வெட்கம் பிடுங்கித் தின்றது; பெருமை யின் பணிவுதான் என்னே என்று வியந்தேன்; சில நிமிடங் களுக்கெல்லாம் வெளியே சென்றிருந்த கேதாரீசுவராநந்த சுவாமிகளும் வந்தார்; நாங்களிருவரும் நெருங்கி அமர்ந்து பேசிக்கொண்டிருந்தது அவருக்கே வியப்பாக இருந்தது; என் மனத்திலுள்ள கருத்துக்கள் அவருக்கும் நன்கு தெரியுமல்லவா? அடிகளை நோக்கி, "பிரதர் இந்தத் தம்பி

சரியான குறும்புக்காரன். நம்மையெல்லாம் கிண்டல் கூடச் செய்கிறுன்" என்று தமது அன்புகனிந்த மொழி களால் சிரித்த குரலில் உரக்கச் சொன்ஞர். அன்று மடத்தில் இருந்தவர்களில் நாங்கள் மூவர் தான் தமிழர்கள்.

அன்று மாலே அடியேனும், அடிகளும் கடற்கரைப் பக்கமாக உலாவச் சென்ருேம். பேச்சும் சற்று உறைப் பாகவிருந்தது. அடிகளுடன் தொடர்ந்து. வாதஞ் செய்தேன். சொற்களிஞல் தாக்கவும் துணிந்தேன். "தங்களுக்குத் தமிழ்ப்பணி ஆற்ற ஆர்வம் இருப்பின், தாராளமாகப் பல்கலேக்கழகத்தில் பேராசிரியராகவோ, அத்தியட்சகராகவோ இருங்கள். ஆஞல் தாங்கள் ஏன் அவ்வளவு ஊதியம் பெறவேண்டும். நாம் துறவிக ளல்லவா?" என்று சரமாரியாக விஞவினேன். அவரோ அன்று சங்கத்தின் ஓர் பழுத்த துறவி. நாஞே அப் பொழுதுதான் சங்கத்தில் சேர்ந்த புத்தம்புது பிரமச்சாரி, இருப்பினும் என் கேள்விகள் அனைத்திற்கும் அமைதி யாக எவ்வளவு பொறுமையுடன் விடைபகன்று என்னை வெற்றிகொண்டார் என்பதை இன்றும் நினைக்க நினைக்க என் கண்களில் நீர் பெருக்கெடுக்கின்றது. 'தானத்திலும் பெரிது நிதானம்' என்பதை அன்றுதான் உணர்ந்தேன். அடக்கம், அமைதி, பொறுமை, அன்பு, இவை ஓர் உரு வெடுத்து என்முன் நிற்பதுபோல், அவர் காட்சியளித்தார். எனக்கு அன்று கடற்கரையில் கிட்டிய அக்காட்சி இன்று இங்கே அகக்கண்முன் நின்று வழிகாட்டி வருகின்றது. வெறும் நூலறிவாக இருந்த "பணியுமாம் என்றும் பெருமை, சிறுமை அணியுமாம் தன்னை வியந்து" என்ற பொய்யாமொழி பெரியதோர் அனுபவமானதைக் கண்ணு ரக் கண்டேன்.

தன் வளர்ப்புக் குழந்தையாகிய சிவானந்த வித்தியாலயத்தைப் பேணி வளர்ப்பதற்காகத்தான் ஊதியம் பெறுவதாகக் கூறியபொழுது நான் மிகவும் நாணமடைந்தேன். தமக்கென வாழாப் பெரியோர் அல்லவா அவர்! அவரது பற்றற்ற பற்றுத்தான் என்னே! அன்று நான் பெற்ற படிப்பினைக்கு என்ன கைம்மாறு செய்யக்கூடும் என்று நினைத்ததும் உண்டு. பத்தாண்டுகள் கழித்து அதே சிவானந்த வித்தியாலயத்திற்குப் பணியாற்ற நான் ஈழம் வந்தது இறைவன் எனது எண்ணத்தைப் பூர்த்தி செய்து வைத்ததுபோற் காண்கிறதல்லவா?

* * * *

சிவானந்த வித்தியாலயம் பல கட்டிடங்களைக்கொண்ட ஓர் பரந்த இடமாகும். ஆரம்பத்திலே ஓர் பொதுக் கட்டிடத்துடன் திகழ்ந்த வித்தியாலயம் இன்று பல வேண்டிய வசதிகளுடன், விடுதிகளையும் கொண்டதாகத் திகழ்கிறது. ஏழை மாணவர்கள் உயர்தரக் கல்விகற்று முன்னேறுவதற்காக அடிகள் இலவசவிடுதி யொன்றை ஏற்படுத்தினர். இவ்விடுதியினால் மட்டக்களப்பில் எத்தனையோ ஏழை மாணவர்கள் படித்து முன்னேறியதுடன் இன்றும் அடிகளது புகழைப் பாடிக்கொண்டிருக்கிறார்கள்.

சிவானந்த வித்தியாலயம் வளர்ந்தது. அதேபோல் சைவசமயமும் வளர்ந்தது. பிறமொழியான ஆங்கிலத்திலே மோகங்கொண்டு, உத்தியோக நலத்திற்காக மதம் மாறித் தமிழ்மொழிக்கும், தாயகத்திற்கும் மக்கள் செய்த சீர்கேடு சொல்லும்தரமன்று. இந்த வழக்கத்திற்குச் சிவானந்த வித்தியாலயம் சாவு மணி அடித்தது. மக்களின் மடிந்தொழிந்த நிலையிலிருந்த பண்பாட்டைத் தூக்கி நிலைநிறுத்தியதனால் சைவசமயம் வளர்ந்தது. இதனைக் கண்ணுற்ற அடிகள் உளம் மகிழ்ந்தார்.

காலப்போக்கில் அடிகளின் தன்னலமற்ற முயற்சி யினால் வித்தியாலயத்தின் எல்லை விரியலாயிற்று. சமயப் பற்றுக்கொண்ட பல பெரியார்கள் வித்தியாலயப் பொது வேலைகளுக்காகப் பணி புரிந்தார்கள். ஆசிரியர்கள்கூட தமது ஊதியத்தின் பெரும்பகுதியை வித்தியாலய வளர்ச் சிக்காக ஒதுக்கினார்கள்.

அனாதைகளின் விடுதி விரிவாக்கப்பட்டதுடன், சித்திரகூடம், புலவர் மன்றம், சிவபுரி முதலிய கட்டிடங் களும் ஏற்படுத்தப்பட்டன. பின்னாளில் அதிபர் விடுதியும், இரத்தினாலயமும், விஞ்ஞான ஆய்வுக்கூடங்களும் நிறுவப் பட்டன. இலக்கியமன்றங்கள் ஆரம்பிக்கப்பட்டதுடன், மன்றம் வளர்வதற்குத் துணையாக வாசகசாலை யொன்றும் எழலாயிற்று. வித்தியாலயக் கட்டிடங்களுக்கிடையிடையே நிழல்தரும் மரங்கள் நடப்பட்டு, எங்கும் தண்ணெனும் குளிர்ச்சியை ஊட்டலாயிற்று. வித்தியாலயத்தை மின் சாரச் சுடரினால் விளங்குமாறு ஓர் சிறிய பொறி இணைத்து மின்சார ஒளி விளக்குகள் பொருத்தப்பட்டன. நாளடை வில் கட்டிடங்கள் விரிந்தன. அதேபோல் மாணவர்களுக்கு எல்லா நலங்களும் செய்து கொடுக்கப்பட்டன. இசை வகுப்பு, சமய வகுப்பு, புலவர் வகுப்பு, யோகாசன வகுப்பு கள் ஆரம்பிக்கப்பட்டு, மாணவர்களின் சிறப்பாற்றல்கள் வளர்க்கப்பட்டன.

## தலைமை ஆசிரியர் பதவி

அடிகளின் இடையறாத முயற்சியின் பயனாகத்தான் சிவானந்த வித்தியாலயம் வளர்ந்தது. அதேபோல் மாண வர்களும் வளர்ந்தாக வேண்டும். அவ்வாறாயின் வித்தியா சாலையின் தலைமை ஆசிரியர் (Principal) பதவிக்கேற்ற ஆற்றல்மிக்க ஒருவர் வேண்டும். மேலும் வளர்ந்துவரும்

குழந்தையான வித்தியாலயத்தை பேணிக் காத்து முன்னணியில் நிறுத்தவும் வேண்டும். இத்தகைய தகைமை நிறையப் பெற்றவராக அடிகளுக்கு யாரும் தென்படவில்லை. ஆதலினால் அடிகளே வித்தியாலயத்தின் தலைமை ஆசிரியர் பதவியை ஏற்றுக்கொண்டார்.

பண்டிதராகவும், பயிற்சிபெற்ற ஆசிரியராகவும், விஞ்ஞானப் பட்டதாரியாகவும், மூவாசைகளையும் துறந்த துறவியாகவும் அடிகள் விளங்கியமையினால் கல்விப்பணியைத் திறம்பட ஆற்றினார். ஒவ்வொரு மாணவனின் ஆற்றலையும், திறனையும் உணர்ந்து சிறந்த முறையிலே பாடங்களைக் கற்பித்தார். அந்நாட்களில் ஆங்கிலம் கற்கும் மாணவர்களிடம் தமிழை வெறுக்கும் வழக்கம் இருந்தது. தமிழ்ப்பாடம் என்றால் அவர்கட்கு நரகத்துன்பம் போலிருக்கும். பெரும்பாலாகத் தமிழ்ப்பாடங்களுக்கு மாணவர்கள் திருமுகம் கொடுப்பதில்லையென்றால், தமிழ் மொழி எவ்வாறு வளர்ந்தது என்பது நன்கு தெளிவாகும். இத் தன்மையை முற்றும் அறிந்திருந்த அடிகள், மாணவர்களுக்குத் தமிழ்ப்பாடங்களிலே மனக்கிளர்ச்சியும் ஆர்வமும் உண்டாகும்படியாகப் பாடங்களை நடத்தினார். வளர்ந்தோர் சிலருக்காகப் புலவர்வகுப்பை ஏற்படுத்தினார். தமிழ் மொழியைத் திறம்படக் கற்பதனால் சமக்கிருதமும் அறிந்திருக்கவேண்டுமென்பது அடிகளின் கருத்து. ஆதலினால் புலவர் வகுப்பிலே வடமொழியையும் கற்பிக்கலானார்கள்.

சிவானந்த வித்தியாலயம் ஆங்கிலக்கல்லூரியாகத் திகழ்ந்தாலும், அதனது போக்கு தனியொரு சிறப்பான வழியிலே செல்ல அடிகள் வழிநடத்தினார். நாட்டு உடைக்கு வித்தியாலயத்திலே முதலிடத்தைக் கொடுத்தார். பொதுவாக அந்நாட்களில், ஆங்கிலம் கற்போர்கள்

ஆடம்பரமாகக் கீழ்ச்சட்டை, மேற்சட்டை அணிந்து, ஐரோப்பியர்கள்போல் நடந்தார்கள். இந்த நிலையிலே வித்தியாலயத்தில் நாட்டு உடைக்கு மதிப்புக் கொடுத்தாரெனின், அடிகளின் நாட்டுப்பற்று இனிது புலனாகிறது.

சைவசமயம் வளரவேண்டுமென்பதே அடிகளின் பூரண விருப்பம். அதற்காகச் சிறந்த கருத்துக்களை மாணவர்களுக்குக் கற்பித்தார்கள். சைவத்திலே பற்றுக் கொண்ட அடிகள், பிற மதங்களைப்பற்றி ஒருபோதும் குறைகூறினார்களில்லை. அந்த மதங்களின் கொள்கைகளையெல்லாம் எடுத்துக்காட்டி, சைவசமயக் கொள்கைகளும் ஒப்புநோக்கி விளக்குவார்.

சைவசமயத்தை மேற்கொள்பவர்களிற் பலர், சைவ சமய நெறிகளை அறியாதவர்களாய் இருக்கிறார்கள். இத் தகையவர்களைக் கண்டால் அடிகளுக்குப் பிடிக்காது. ஓர் தடவை அடிகளின் நண்பர் ஒருவர் பிற சமயத்தை இகழ்ந்து கூறியபோது, அடிகள் அவரது அறியாமையைப் போக்க,

> "நீ ஒரு சைவசமயத்தவன். மற்றைச் சமயங்களை இகழாதிருத்தலே சைவசமயத்தின் கொள்கை. சைவசமயத்தின் பெருமையை மற்றைச் சமயத்தவர்கள் தாமாக உணரவேண்டும். ஆகையால் மற்றைய சமயம் எதையாவது நீ இகழ்ந்து பேசுவையாகில் நீ சைவசமயத்தின் முதலாவது எதிரியாகக் கருதப் படுவாய். ஆகையால் நீ உண்மைச் சமயப்பற்று உள்ளவனாயிருந்தால் இன்று தொடக்கம் மற்றைய சமயங்களை இகழ்ந்து பேசுவதைவிட்டு விடவேண்டும்."

என்று ஆணித்தரமாகக் கூறினார்கள். இதிலிருந்து நாம் அடிகள் பிற சமயக்கொள்கைகளையெல்லாம் தெளிவாக

அறிந்திருந்தார்களென்பதைக் காணக்கூடியதாக இருக்கிறது.

சிவானந்த வித்தியாலயத்தில், வித்தியாலயத்தலைவர் வசிப்பதற்காக 'சிவபுரி' என்ற இல்லம் ஏற்படுத்தப்பட்டது. இந்த இல்லத்திலேதான் அடிகள் அமைதியாக வாழ்ந்தார். ஏகாந்தமான தனி இடத்திலே சிவபுரி அமைந்துள்ளது. சுற்றிவரப் பூஞ்செடிகளால் சூழப்பெற்று, இயற்கைப் பொலிவுடன் இம்மனை திகழ்ந்தது. இம்மனையில் ஏகாந்த வாழ்வில்தான் அடிகள் தமிழகத்திற்குப் பல கவிதைகளையும், கட்டுரைகளையும் அளித்தார்கள். அதன் பேருக அடிகள் பாடும் மீனைப் (Singing Fish) பற்றிய ஆராய்ச்சியை எம்மிடம் விட்டுச்சென்றுள்ளார்.

## நீரர மகளிர் இன்னிசை

உலகத்திலே ஏழு அதிசயங்களுண்டென்று மக்கள் சொல்லிக்கொள்கிருர்கள். எட்டாவது அதிசயமாக ஒன்றுளதெனில் பலர் ஆச்சரியப்படவுங்கூடும். அத்தகைய எட்டாவது அதிசயந்தான் ஓர் வகையான மீன்கள் இன்னிசை இயைப்பது. இந்த இன்னிசை, உலகில் கலிபோர்னியாவிலும், மட்டக்களப்பிலுந்தானுண்டு. அந்த வகையிலே இலங்கை ஓர் புண்ணிய பூமியென்றுதான் சொல்ல வேண்டும். ஆகையினுல்தான் அயல்நாட்டார்கள் இலங்கையைப்பற்றி அதிகமான புகழ்மாலைகளைச் சூட்டியுள்ளார்கள்.

மட்டக்களப்பில் முப்பதுகல்கள் நீண்ட ஓர் வாவி இருக்கிறது. இதன் அருகேதான் கிழக்கு இலங்கையின் தலைமை நகரமான மட்டக்களப்பு அமைந்திருக்கிறது. மூன்றுகல் பரப்புக்கொண்ட இந்நகரம் மட்டக்களப்பு வாவியின் நடுவண் அமைந்திருக்கிறது. இளவேனிற்

காலத்தில் முழுமதி நாளிலும், அதற்கு முன்னும் பின்னும் உள்ள நாட்களில், வானம் களங்கமற்றிருக்கும் வேளையில் சிறு தோணியில் கல்லடிப் பாலத்திலிருந்து மட்டக்களப்புக் கோட்டைக்கு இடையிலுள்ள பாகத்தில் அரவஞ்செய்யாது மெதுவாகச்சென்று நீரினுள் உற்றுக்கேட்டால் அற்புதமான இன்னிசை எழுவதை அறியலாம். இவ்விசை நீரினுள் இருந்து எழுவதனால் நீரில் வசிக்கும் ஓர் உயிர்தான் இசைக்கவேண்டுமென்று மேஞட்டார் எண்ணியமையினால் இதனை (Singing fish) பாடும் மீன் என்று கூறினார்கள். மட்டக்களப்பு மக்கள் இவ்வின்னிசையை, ஊரியென்னும் ஓர் உயிர் இசைப்பதாகச் சொல்லுவார்கள். இதன் ஓசை கேட்பதற்கு இனிமையாக இருக்கும். கேட்டுக்கொண்டே நாள் முழுவதும் இருக்கலாம்.

மேஞட்டார் இதற்குப் பாடும் மீன் என்று பெயர் சூட்டியது பொருத்தமற்றதாகும். நீரரமகளிர் பாடும் இசை எவ்வாறு மீனினுடையதாக இருக்க முடியும். நீரரமகளிர் தெய்வீககானத்தை ஓர் தடவை கேட்டு அனுபவித்தவர்கள் தங்கள் வாழ்நாளில் ஓர்போதும் மறக்கமாட்டார்கள். அடிகள் நீரரமகளிரைப்பற்றி ஆராய்ந்து சிறந்த கவிதையினால் தமிழகத்திற்கும், உலகிற்கும் வழங்கியுள்ளார்கள். அடிகள் இவ்வாராய்ச்சியில் புலன் செலுத்தியமையினால் தான், பின்னாளில் யாழ்நூலென்ற கலைக்கருவூலத்தைத் தமிழகத்திற்களிக்க முடிந்தது. அடிகள் நீரரமகளிரைப் பற்றி இயற்றிய கவிதைகள் நிகரற்றனவாகும். கவிதைகளில் நீரரமகளிரின் கதையே விரிகிறது.

> தண்ணளியே செங்கோலாய்த் தனியறமே சக்கரமாய்
> மண்முழுதும் ஆண்ட புகழ் வாமனடியிணையே
> என்றும் அழியா திலங்குஞ் சமனொளியுங்
> கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவற்கு

மூவடிமண் ஈந்தளித்து மூவாப் புகழ்படைத்த
மாவலியின் பேரால் வயங்கு மணிநதியும்
காவும் பொழிலுங் கழிமுகமும் புள்ளணிந்த
ஏரியும் மல்கி இரத்தினத் தீவமென
ஆரியர் போற்றும் அணிசால் இலங்கையிலே
ஏரார் குணதிசையைச் சேர்ந்து வளர்புகழும்
சீரார் இயன்ற செந்நெல் இன்சுவைத்தீங் கன்னலொடு
மட்டக் களப்பென்னு மாநாடந் நாட்டினிடைப்
பட்டினப் பாங்கர்ப் பரந்த தோணுமுகமாய்
ஐங்கரன் கோயில் அமிர்த கழிக்கணித்தாய்ப்
பொங்கு கடலுட் புகும்நீர் நிலையொன்று
நீர்நிலையி னுள்ளே நிகழ்ந்த அதிசயத்தைப்
பாரறியக் கூறும் பனுவல் இதுவாகும்.

### வேறு

மாசகன்ற மணிவிசும்பில் வயங்குநிறை மதியம்
மலர்க்கிரண ஒளிபரப்ப வளரும் இளவேனில்
வீசுதென்ற லொடுங்கூடி விளையாடல் கண்டு
விண்ணகத்தார் மண்ணகத்தில் விழைவுகொள்ளும் யாமம்;

அஞ்சிறைய புள்ளொலியும் ஆன்கன்றின் கழுத்தில்
அணிமணியின் இன்னொலியும் அடங்கியபின் நகரார்
பஞ்சியைந்த அணைசேரும் இடையாமப் பொழுதிற்
பாணனொடும் தோணிமிசைப் படர்ந்தனனோர் புலவன்;

தேனிலவு மலர்ப்பொழிலிற் சிறைவண்டு துயிலச்
செழுந்தரங்கத் தீம்புனலுள் நந்தினங்கள் துயில
மீனலவன் செலவின்றி வெண்ணிலவில் துயில
விளங்குமட்டு நீர்நிலையுள் எழுந்ததொரு நாதம்.

### வேறு

நீநி—சாச—ரீ நீலவானிலே
நிசரி—காக—மா நிலவுவீசவே
மாம—பாப—தா மாலைவேளையே
மபத—நீநி—சா மலைவுதீருவோம்;

சாச—ரீரி—கா சாலநாடியே
சரிக—மாம—பா சலதிநீருளே
பாப—தாத—நீ பாலைபாடியே
பதநி—சாச—ரீ பலரொடாடுவோம் ;
நீல வானிலே நிலவு வீசவே
மாலை வேளையே மலைவு தீருவோம்
சால நாடியே சலதி நீருளே
பாலை பாடியே பலரொ டாடுவோம் ;
நிசரி காக மா மபத நீநி சா
சரிக மாம பா பதநி சாச ரீ
ரிகம பாப தா தநிச ரீரி கா
கமப தாத நீ நிசரி காக மா
நிலவு வீசவே மலைவு தீருவோம்
சலதி நீருளே பலரொடாடுவோம்.

### வேறு

என்ன எழுந்த அந்த இன்னிசைத்தீம் பாடலினைக்
கன்னலெனக் கேட்டுக் களித்த புலவனுந்தன்
அன்பன் முகநோக்கி ஆகாவிவ் வற்புதத்தை
என்னென் றுரைப்பேன் இசைநூற் பொருளுணர்ந்தேன்
ஐந்தாம் நரம்பின் அமைதியினை யானறிந்தேன்
காந்தாரத் தைந்தாய்க் கனிந்த நிஷாதமெழும்
செய்ய நிஷாதச் செழுஞ்சுரத்தின் பஞ்சமமே
வையம் புகழ்கின்ற மத்திமமாம் மத்திமத்திற்(கு)
அஞ்சாஞ் சுரமாம் அணிசட்சம் சட்சத்தின்
பஞ்சமமே பஞ்சமமாம் பன்னும் ரிடபமதற்(கு)
அஞ்சாஞ் சுரமாய் அடையும் அணிரிடபத்(து)
எஞ்சாத பஞ்சமமாய் எய்திநிற்குந் தைவதமே
தைவதத்திற் கைந்தாய்த் தனித்தகாந் தாரமெழும்
இவ்வகையே ஏழாகி இன்னிசையாழ்ந் தீங்குழலில்
நாதமாய்த் தோன்றி நவைதீர் அமிழ்தனைய
கீதமாய் மேவுங் கிளையாய்ப் பகைநட்பாய்
நின்ற முறையை நினையின் இவைகிளையாம்
என்ற பொழுதில் எழுவர் மடநல்லார்

நீருளிருந் தெழுந்து நின்றா ரரமகளிர்
ஆதலினுல் ழப்பறியார் அந்தீங் குழலொலியும்
ஓதியயாழின் ஒலியுமென மொழிவார்
பைம்புனலின் மேற்படர்ந்த பாசிநிகர் கூந்தலார்
அம்பொன்னின் மேனி அரையின்கீழ் மீன்வடிவம்
செங்கமலம் போற்கரங்கள் திங்கள் மதிமுகத்திற்
பொங்கிய புன்முறுவல் பூத்தார் புலமையார்
கவிமுகத்தை நோக்கிக் கனிந்துரையார் "யான்கிளையே
புவியிலெனைத் தாரமென்பார் புதல்வியிவள் பேர்உழையே
உழையின் மகள்குரற்பே ருற்றாள் இளிதனையை
பிழையி லிளிபாற் பிறந்தாள்பேர் துத்தமே.
துத்தம் பயந்த சுதைவிளரிப் பேர் பூண்டாள்
உய்த்த விளரிக் குறுதனயை ஃகைக்கிளையே
பொன்னின் கபாட புரத்துறைவோம் மாவலிநீர்
தன்னிற் படிந்து சமஞெளியைக் கும்பிடுவோம்
ஆடுவோம் பாடுவோம் அடையாதார் தங்களையாம்
இச்சை யறவே இழித்துரைக்கும் நீர்மையேம்
உருத்தெழுந்து கோபிப்போம் உண்மை யுரைப்போம்
அருத்தியொடு வீரம் அறைவோம் வியப்புறுவோம்
திங்கள் நிறைநாளிற் சேர்வோம்இந் நீர்நிலையை
கங்குல் கழியுமுன்னே கார்படிந்த மைக்கடலைச்
சென்றுயாஞ் சேர்வோமெஞ் செய்கையிது" வென்றார்
ஒன்ருகநீருள் ஒளித்தார் தமிழ்ப் புலவன்
சிந்தையை யன்னர்பாற் சேர்த்தி மனைபுகுந்தான்
வந்த இசையின் வரன்முறையும் ஈங்கிதுவே.

## இலங்கைப் பிரதிநிதி

கன்னித் தமிழ்மொழியை வளர்த்துவரும் சங்கங்களுள், மதுரைத் தமிழ்ச்சங்கமும் ஒன்ருகும். அன்று முடியுடை வேந்தர்கள் மதுரையில்கூடித் தமிழ்மொழியை வளம்படுத்தினர்கள். புலவர்களை ஒருங்கே சேரப்பண்ணி

இலக்கியங்களை ஆக்கினார்கள். ஆதலினால்தான் மாணிக்க வாசகர்,

"கூடலின் ஆய்ந்த ஒண் தீந்தமிழ்"

என்று கூறினார். புலவர்கள் கூட்டத்திற்கு கூடல் என்றும் பெயருண்டு. ஆதலினால் சங்கம் இருந்த மதுரைக்கே கூடல் என்றபெயர் ஏற்படலாயிற்று. மதுரையிலே சங்கங்கள்கூடித் தமிழை ஆராய்ந்தமையினால் சங்கத் தமிழ் என்று நம் மொழியைப் பெருமைப் படுத்தினார்கள். இத்தகைய தமிழ்மொழி, இனிமையானது, தூய்மையானது. பால், பருப்பு, பாகு, தேன் ஆகியவைகளைக் கலந்து கிளறி எடுத்தால் தீஞ்சுவையாக இருக்கும். அதனைக் காட்டிலும் சங்கத்தமிழ் இனிமையானதென்கிறார் ஒளவைப்பிராட்டியார்.

பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும்இவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன்—கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா.

என்று கூறியுள்ளார்.

பன்னெடுங் காலமாகத் தமிழ்மொழி ஆராயப்பட்டு வந்த மதுரையில், தற்பொழுது அறிஞர்கள் தமிழ்ச்சங்கத்தை நிறுவியது சாலவும் சிறப்புடைத்து. 1925-ம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கத்தினர் மகாமகோபாத்தியாய சாமிநாதையர் அவர்கட்குப் பொற்கிழி அளிக்கும் முகமாக ஓர் விழாவை ஒழுங்கு செய்தார்கள். இவ்விழாவில் இலங்கை வித்துவான்களின் பிரதிநிதியாகக் கலந்துகொள்ளும் பெருமை அடிகளுக்குக் கிடைக்கப்பெற்றது. அதன்பயனாக அடிகள் மதுரைக்குச்சென்று பொற்கிழிச் சிறப்புவிழாவிற் கலந்து பாராட்டுரையைப்

பரிமாறினர். அடுத்தநாள் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் அடிகள் ஓர் சிறந்த சொற்பொழிவாற்றிவிட்டுத் தாயகம் திரும்பினர்.

1926-ம் ஆண்டில் கல்கத்தாவிலுள்ள வேலூரில் ராம கிருஷ்ணத் தலைமை மடத்தில் மாநாடொன்று நடைபெற் றது. இம் மாநாட்டில் இலங்கைப் பிரதிநிதியாகப் பங்கு பற்றும் பொறுப்பும் அடிகளுக்குக் கிடைக்கலாயிற்று.

கிழக்கிலங்கையில் ராமகிருஷ்ணமிசன் பாடசாலை களின் முகாமைக்காரராக அடிகள் திகழ்ந்ததுடன், யாழ்ப்பாணத்து வண்ணார்பண்ணை வைத்தீசுவரன் வித்தி யாலயம் விவேகானந்த வித்தியாலயம் முதலிய பாடசாலை களை நடத்தும் பொறுப்பும் அடிகளிடம் ஒப்படைக்கப் பட்டது. தம் ஆணையின் கீழ்வந்த யாழ்ப்பாணத்து இரு பள்ளிக்கூடங்களையும் மிகவும் திறம்பட முன்னேற்றப் பாதையில் அடிகள் அழைத்துச் சென்றார். 1926-ம் ஆண்டில் வைத்தீசுவரன் வித்தியாலயத்தில் அனாதைச் சிறுவர்களுக்கென ஓர் மாணவர் இல்லத்தை ஏற்படுத்தி னர். இவ்வில்லம் அமைக்கப்பட்டதனால் வடக்கு இலங்கையி லுள்ள எளிய மாணவர்கள் தங்கி நின்று கல்விகற்க வாய்ப் பாயிற்று.

இந் நாட்களில் அரசியலார் கிழக்கிலங்கையின் கல்வி நிலையை ஆராய்ந்து வளர்ச்சியுறச் செய்யவேண்டுமென்று அவாவினர். அதனால் கல்வி அறிக்கை தயாரிப்பதற்காக ஓர் சபை நிறுவப்படலாயிற்று. இச்சபையின் தலைமைப் பீடத்தை அரசியலார் அடிகளிடம் ஒப்புவித்தனர். கல்விச் சபையின் மூலமாக அடிகள் கிழக்கிலங்கையின் கல்வியில் ஓர் மறுமலர்ச்சியை ஏற்படுத்தினர்கள். ஊர்கள்தோறும் கல்விச்சாலைகள் எழலாயிற்று.

கொழும்புமாநகரில் விவேகானந்தசபை நிறுவப்பட்டு நடந்துவந்தாலும், நகரில் விவேகானந்தசபையாரின் பள்ளிக்கூடம் ஒன்றேனுமில்லாதது பெருங்குறையாகவே இருந்தது. இக்குறையை நீக்குதற்குச் சபையினர் முயன்று வெற்றியும் பெற்றனர். புதுப் பள்ளிக்கூடத்தைத் தொடங்கி வைப்பதற்காகச் சபையினர், அடிகளுக்கு அழைப்பிதழ் அனுப்பிவைத்தனர். அடிகளும் அதற் கிணங்கி ஓர் நல்ல வேளையில் கொழும்பு விவேகானந்த வித்தியாலயத்தைத் தொடங்கிவைத்தார். அன்று தொடங் கப்பட்ட வித்தியாலயம் இன்று பல துறைகளிலும் வளர்ந்து, தமிழ்மொழிக்கும், சைவசமயத்திற்கும் அளவிட முடியாத பணிகள்புரியும் ஓர் கலைக்கழகமாகத் திகழ்கிறது. இலங்கை முழுதும் சைவசமயத்தை வளர்க்கும்முகமாக மாணவர்களுக்கு "சைவசமய பாடத்தேர்வு"களை ஏற் படுத்தி நடத்திவருகிறது. சமயத்தேர்வுகளில் சிறந்தபடி சித்தியெய்தும் மாணவர்களுக்குப் பரிசுகளும் வழங்கி மனக் கிளர்ச்சியூட்டி வருகிறது.

சிதம்பரத்திலே ஓர் பல்கலைக்கழகம் நிறுவும் முகமாக 1927-ம் ஆண்டு மதுரையில் இராமநாதபுரத்து அரசர் தலைமையில் ஓர் விசாரணைச்சபை நிறுவப்பட்டது. நாட் டின் பல பாகங்களிலுமுள்ள அறிஞர்களின் ஆலோசனை களைக் கேட்டுப் பல்கலைக்கழகம் கட்டாயம் வேண்டுவதா என்பதை வலியுறுத்த இச்சபை முயன்றது. சென்னைப் பல்கலைக்கழகத்தார் இம் முயற்சியைக்கண்டு மகிழ்வு கொண்டதுடன், சிதம்பரத்திலும் ஓர் பல்கலைக்கழகம் ஏற்படுத்திவிடவேண்டுமென்று முயன்றனர். அதற்காக முதன்முதலிலே சிறந்த ஓர் அறிஞரைச் சான்றுபகர அனுப்பவேண்டுமென்று எண்ணினர். எல்லாவகையிலும் பல்கலைக்கழகத்தார் அடிகளே தகுதிவாய்ந்தவரெனக்

கண்டதனால், மதுரைவந்து சான்று பகருமாறு கேட்டுக் கொண்டனர். அதற்கியைந்த அடிகள் இராமநாதபுர அரசர் முன்னிலையில் பல்கலைக்கழகம் கட்டாயம் நிறுவியாக வேண்டுமென்று சான்று கூறினர். இவ்விசாரணைச் சபையில் முதன்முதலிலே சான்றுரைத்த பெருமை அடிகளுக்குரியதாகும். அடிகளின் சான்று வீண்போகாமல், பின்னாளிலேயே சிதம்பரத்தில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் எழுந்தது.

1927-ம் ஆண்டு ஆவணித் திங்களில் கண்டி நகர சைவ மகாசபையினர் ஆண்டுவிழா நடத்தினர்கள். இவ்விழாவிற்கு அடிகள் தலைமைதாங்கி மகாநாட்டைச் சிறப்பித்ததுடன், சைவசமய அன்பர்களின் நெறியினைப்பற்றி அகன்றதோர் விரிவுரையும் நிகழ்த்தினர்கள். இந்நாட்களில் காந்தி அடிகள் இலங்கைக்கு எழுந்தருளினர்கள். மாணவர் மாநாட்டுத் தலைவர் என்ற முறையில், அடிகள் காந்தியடிகளை வரவேற்றார். மாணவர்களுக்குப் பயன்படும் வண்ணம் காந்தியடிகள் சிறந்த ஓர் சொற்பொழிவாற்றினர்கள். இச் சொற்பொழிவின்விரிவை மாணவர்கள் மறவாமல், தங்கள் கல்லூரியின் ஆண்டுவிழாமலரில் அழகாகப் பதிப்பித்துள்ளார்கள்.

---

## இந்துக்கல்லூரித் தலைமை ஆசிரியர்

*நிரைகழ லாவஞ் சிலம்பொலி யலம்பும்*
*நிமலர்நீ றணிதிரு மேனி*
*வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த*
*வடிவினர் கொடியணி விடையர்*
*கரைகெழு சந்துங் காரகிற் பிளவும்*
*அளப்பருங் கனமணி வரன்றிக்*
*குரைகட லோத நித்திலங் கொழிக்குங்*
*கோணமா மலையமர்ந் தாரே.*

என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் பாடப் பெற்ற திருக்கோணேச்சுரம் திரிகோணமலையில் அமைந் துள்ளது.

திருக்கோணாசலம் கிறித்துவிற்கு முன் 1300-ம் ஆண்டுவரையில் அமைந்ததெனலாம். மநுநீதிகண்ட சோழனே இத்தலத்தை ஆக்குவித்தானென்பது உலகுரை. இவனுடைய மகன் குளக்கோட்டன், தந்தையின் காலத் தில் முற்றுவிக்கப்படாத பணியைச்செய்து நிறைவாக்கி னன். பின்னாளில் போத்துக்கேயரின் ஆட்சி இலங்கையில் பரவியகாலையில், அவர்கள் இவ்வாலயத்தை இடித்து அதன் கற்களைக்கொண்டே, கோட்டையைக் கட்டுவித்தார்கள். பழைமையான கோணேச்சுரம் பறங்கி என்னும் சாதியா ரால் தகர்க்கப்படுமென்பதை, அக்காலையில் முன்கூட்டியே அறிந்து கோவிலின் பின்புறத்திலே கீழ்வரும் பாடலைப் பொறித்து வைத்திருந்தார்கள் :

முன்னே குளக்கோட்டன் மூட்டுந் திருப்பணியைப்
பின்னுட் பறங்கி பிரிக்கவே—பொன்னுரும்
பூனைக்கண் செங்கண் புகைக்கண்ண ணுண்டபின்பு
தானுந் தமிழாய் விடும்.

கல்வெட்டிற்கேற்ப இன்று தம்பலகாமத்திலே, பழைய காலத்தில் எவ்வாறு கோணேச்சுரம் திகழ்ந்ததோ அதே போல ஓர் கோவிலை எடுப்பித்துள்ளார்கள். திரிகோணமலைக்குப் பெருமையைக் கொடுப்பது இக்கோணேச்சுரந் தான். இத்தகைய புண்ணிய நகரிலே சைவசமயத்தை வளர்க்க ஓர் சைவசமயப் பள்ளிக்கூடம் இல்லாதது அடிகளுக்கு ஒரு குறையாகத் தோன்றியது.

தென்கைலாசம் என்று போற்றப்படும் புனித நகரத்தில் சைவசமய மாண்புகளைப் புகழ்ந்தேத்த ஓர் இந்துக் கல்லூரியை அமைக்கவேண்டுமென்று அங்கு வாழ்ந்தவர்களுக்கு எடுத்துக்கூறியதின்பேரில் பல அன்பர்கள் முன் வந்து பொருளுதவி செய்தார்கள். அதன் பெரும் பயனுகவும் அடிகளின் முயற்சியினுலும் இந்துக்கல்லூரி எழலாயிற்று.

இந்துக்கல்லூரியின் அஃதாவது ஆங்கிலக் கல்லூரியின் அடிப்படைக்கல்லை 1927-ம் ஆண்டு அடிகள் நாட்டினுர். அதன்பயனுக இரண்டாண்டினுள் புதுக்கட்டிடம் எழலாயிற்று. ஒரு நன்னுளில் புதுக்கட்டிடம் திறக்கப்பட்டு மாணவர்கள் ஆங்கிலமும் பயிலலானுர்கள். இந்துக் கல்லூரியை வளர்த்துத் திரிகோணமலையின் தனிச்சுடராகத் துலங்கப் பண்ணவேண்டுமென்பது அடிகளது முழு விருப்பம். ஆதலினுல் அடிகள் இதுகாலம்வரை ஏற்றுப் பணிபுரிந்துவந்த முகாமைக்காரத் தொண்டையும், சிவா

னந்த வித்தியாலயத்தலைமை ஆசிரியர் பதவியையும் பிறிதொருவரிடம் ஒப்புவித்துவிட்டு இந்துக் கல்லூரியை வளர்ப்பதற்காகத் திரிகோணமலைக்கு வந்து தலைமை ஆசிரிய பீடத்தை அணிசெய்தார். இந்துக்கல்லூரியை அடிகள் ஓர் முன்னேற்றப்பாதையினுள் அழைத்துச் சென்றார். சைவசமயத்தைத் தழைக்கவைத்து, வளருவதற்குச் சிறந்த பல தொண்டுகளைக் கல்லூரியிலும், ஊரிலுமாகச் செய்யலானார். பாடல்பெற்ற கோயிலான கோணேச்சுரமிருக்கும் இடத்தில், சைவசமய நெறியினை ஏனையவர்களுக்கு இன்பமாக எடுத்துக்காட்ட இந்துக்கல்லூரி சிறந்த நிலையமாகச் செழித்தோங்கச் செய்யவேண்டியது கடனாகும். இதனை உணர்ந்து உள்ளன்புடன் பணிபுரிந்த அடிகளை எப்படிப் பாராட்டினாலும் போதாது. இந்துக் கல்லூரி அடிகளின் பணியைப் பலகாலம் பெறுவதற்குக் கொடுத்துவைக்கவில்லை. ஆம்; அடிகளை அண்ணாமலைப் பல்கலைக்கழகம் அன்புடன் அழைக்கலாயிற்று.

## ஈசனுவக்கும் இன்மலர் மூன்று

அடிகள் கவிகள் புனைவதில் வல்லுநர். முற்றத்துறந்த துறவியாதலினால் அவரது கவிதைகளனைத்திலும் பத்திச் சுவை ததும்பக் காணலாம். அடிகள் எத்தனையோ கவிதைகளைப் பாடியுள்ளார். கடவுள்வணக்கச் செய்யுட்களாகப் பல செய்யுட்கள் யாத்துள்ளார். அவைகளில் சில பாலர் முதற்கொண்டு பத்தியுடன் படிக்கக்கூடியன:

வெள்ளைநிற மல்லிகையோ வேறெந்த மாமலரோ
வள்ளல் அடியிணைக்கு வாய்த்த மலரெதுவோ
வெள்ளைநிறப் பூவுமல்ல வேறெந்தமா மலருமல்ல
உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது.

காப்பவிழ்த்த மாமலரோ கழுநீர்மலர்த் தொடையோ
மாப்பிள்ளையாய் வந்தவர்க்கு வாய்த்த மலரெதுவோ
காப்பவிழ்த்த மலருமல்ல கழுநீர்த்தொ டையுமல்ல
கூப்பியகைக் காந்தளடி கோமகனுர் வேண்டுவது.

பாட்டளிசேர் பொற்கொன்றையோ பாரிலில்லாக் கற்பக
வாட்டமு ருதவர்க்கு வாய்த்த மலரெதுவோ [மோ
பாட்டளிசேர் கொன்றையல்ல பாரிலில்லாப் பூவுமல்ல
நாட்டவிழி நெய்தலடி நாயகனுர் வேண்டுவது.

இத்தகைய கவிதைகளை அடிகள் இயற்றியதுடன் நில்லாமல், அவைகளை என்றும் மறந்தாரில்லை. தமது இசை நூலாம் யாழ்நூலிலும்கூடச் சேர்த்து விட்டார். ஈழநாட்டின் தவப்புதல்வரின் கடவுள் வணக்கச் செய்யுட்களை, இலங்கை மாணவர்களும் படித்துப் பயனடையும்படி, பாடப்புத்தகங்களிலும் இப்பாடல்களைச் சேர்த்துள்ளார்கள்.

## தமிழ்ப்பேராசிரியர்

செட்டிநாட்டரசருடைய தலைமையில் ஆரம்பிக்கப் பட்ட விசாரணைச்சபை பல்கலைக்கழகம் கட்டாயமாக நிறுவப்படவேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தது. அதன்பயனுகச் சிதம்பரத்திலே, பல்கலைக்கழகம் பல கட்டிடங்களுடன் எழுந்தது. பல்கலைக்கழகம் அமைப்ப தற்கு இன்றியமையாதவராக விளங்கிய செட்டிநாட்டரசர் ராசா சர். அண்ணுமலைச் செட்டியாரை மறவாது இருத்தற் பொருட்டு பல்கலைக்கழகத்திற்கு, அண்ணுமலைப் பல்கலைக் கழகம் எனப் பெயரிடப்பட்டது. அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப்பேராசிரியர் பதவியேற்கும்படி அடிகளை அண்ணுமலைச் செட்டியார் கேட்டுக்கொண்டார். அவ் வேண்டுகோளுக்கு மனப்பூர்வமுடன் இணங்கிய அடிகள்

1931-ம் ஆண்டு ஆடித்திங்கள் தமிழ்ப்பேராசிரியப் பணியை ஏற்றுக்கொண்டார்.

அடிகள் தமது விரிவுரைகளிலெல்லாம், மாணவர்கள் தாயகத்திற்கும், மொழிக்கும் எந்தெந்தவகைகளில் தொண்டுகள் செய்யவேண்டுமென்பதை வலியுறுத்திக் கூறுவார்.

மனிதனுக்கு முதலிலே தேசத்திலே பற்று உண்டாக வேண்டும்; ஒவ்வொருவரும் தமது நாட்டைப்பற்றிப் பெருமை கொள்ளவேண்டும்; இப்பற்று வளர்ந்தால் தங்களது மொழியிலே அளவுகடந்த விருப்பு உண்டாகும்; மொழிக்குரிய மக்கள்கூட்டத்திடம் இதனால் அன்பு பிறக்கும்; இதனை அடிகள் நன்கு உணர்ந்தார். முற்றத்துறந்தவராக அடிகள் இருந்தாலும் தமிழகத்திடமும், தமிழ் மொழியிடமும், அளவிடமுடியாத பற்றுக்கொண்டவர். இப்பற்றை வருங்கால மக்களான மாணவர்களுக்குத் திறம்பட எடுத்து விளக்கினார்.

தமிழகத்திலிருக்கும் சாதிவேற்றுமையை அடிகள் கண்டு வருந்தினார்; தம்மால் முடிந்தவரை அதை யொழிக்கப் பாடுபட்டார்; சேரிகளுக்குச் சென்று பாடசாலைகளை ஏற்படுத்தினார்; ஏழை எளிய மாணவர்களுக்கு தம் செலவிலே புத்தகங்களை வாங்கிக்கொடுத்துப் படிக்கச்செய்தார்; ஒருவர் உயர்ந்தவரென்றும் மற்றவர் தாழ்ந்தவரென்றும் மனித அடிப்படையில் மனிதர்களை மனிதர்களே முன்னாளில் வகுத்துவிட்டார்கள்; அறிவியற்காலமாகிய இக்காலையிலும் தாழ்த்தப்பட்டவர்களென்று ஒருசாராரை புறக்கணிப்பதென்றால் தமிழகத்தில் சமயம் எவ்வாறு வளர முடியும்? மனிதனே மனிதனைத் தாழ்த்திவைத்தான்! ஏன்

இவ்வாறு செய்தான்? தன்னுரிமைகளுக்கும், தன்னலத்திற்குமாகத்தான்; இந்த அடிப்படையிலே தாழ்த்தப்பட்டவர்கள் உயர்தரக்கல்வி பெற முடியாதிருப்பதை அடிகள் கண்டு மனம் நொந்தார்; தம்மால் இயலுமட்டும் தாழ்த்தப்பட்டவர்களை முன்னணியில் நிறுத்துவதற்காக உழைத்தார்.

சிதம்பரத்தில் அடிகள் வாழ்ந்தகாலையில் மட்டுந்தான் இப்பணியைச் செய்தாரென்பது தவறாகும். அடிகள் எங்கெங்கு சென்று வாழ்ந்தாரோ அங்கெல்லாம் அன்னார்களுக்காக ஆவன செய்தார். தீண்டாமைக்கு இறுதியாக்கிய பெருமை காந்தி அடிகளைச் சேரும். அம்மகான் தீண்டாதவர்களென்று சொல்லப்படும் இனத்தவர்களுக்காகச் செய்த பணிகள் அளவிடமுடியாதன. காந்தியடிகளின் கொள்கைகளை விபுலாநந்த அடிகள் கடைப்பிடிப்பவர். ஆதலினாற்றான் அவர் சேரியென்றுகூட மனங்கூசாமல் சென்று புனிதத்தொண்டு புரிந்தார்.

## தேச அன்பர்

1933-ம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் பட்டமளிப்பு விழாவிற்காக, மண்டபங்களும், விடுதிகளும் பலவகைக் கொடிகளாலும் அழகுபடுத்தப்பட்டன; கழகத்தில் பணிபுரியும் பேராசிரியர்களுடைய இல்லங்களும் அணிசெய்யப்பட்டன; இல்லங்களைத் தெள்ளெனக் காட்டுவதுபோல் ஆங்கிலநாட்டுக் கொடிகள் பறக்கலாயின; ஆனால் அடிகளுடைய இல்லத்தில்மட்டும் ஆங்கிலநாட்டுக் கொடிக்கேற்பக் காங்கிரசின் மூவண்ணக்கொடி பறக்கலாயிற்று. இதனைக்கண்ணுற்ற அனைவரும் வியந்தனர்.

பட்டமளிப்பு விழாவில் கலந்துகொள்வதற்காக கவர்னர் சர். ஜோட்ஸ்பிரடறிக் ஸ்ரான்லி அங்கு வருவதற்கு இன்னும் சிலநாழிகைப்பொழுதுதானிருந்தது. அவர் அடிகளின் இல்லத்தில் பறக்கும் தேசீயக் கொடியைக் கண்டுவிட்டால் என்ன நினைப்பாரோ வென்று காவற் படையினர் (Police) அச்சங்கொள்ளலானார்கள். தேசியக் கொடி தொங்கும் இடத்தில் நாட்டின் விடுதலைக்கான திட்டங்களோ, அன்றி வேறு பொருட்களோ இருக்கலா மென்று பாடிகாவலர் எண்ணியபடியால் அடிகளின் இல்லத்தைச் சோதனை செய்யலானார்கள்.

சற்றுங் கலக்கமின்றி அமைதியாக உட்கார்ந்து கொண்டிருந்த அடிகளைக் கண்ட பாடித்தலைவன் வியப் புற்றான். "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்ற பொன் மொழியை அந்த பாடித்தலைவன் மறந்துவிட்டான் போலும். சோதனை யிட்டதனால் தோல்வியுற்ற பாடி காவலர்கள் காங்கிரசுக் கொடியை இறக்குவதற்கு அஞ்சிய வாறு வெளியேறினார்கள். இதனைக் கண்ணுற்றவர்களும், அறிந்தவர்களும் அடிகளின் தேசஅன்பைப் புகழ்ந்தனர்.

அன்று அடிகள் துணிந்து ஏற்றிவைத்த தேசியக் கொடிக்குமுன்னால், இன்று காவற்படையினர் பணிந்து வணங்கும் வரிசையை அவரது ஊனக்கண்கள் காண முடியாவிடினும், அவர் முக்காலக் காட்சியில் அன்று இஃது தென்பட்டே இருக்கவேண்டும். இல்லாவிடின் அடிகள் அன்று பாடித்தலைவன் முன்னிலையில் புன்முறு வல் செய்திருக்கமாட்டார். பல்கலைக் கழகத்திலே அடிகள் எவ்வாறு தேசிய உணர்ச்சியை ஊட்டியிருந்திருப்பா ரென்பதற்கு இச்செயல் ஓர் எடுத்துக்காட்டாகும்.

## பாரதி அன்பர்

அடிகள் தேசஅன்பர் மட்டுமல்ல, பாரதி அன்ப ருங்கூட. பாரதியென்றால் அடிகளுக்கு ஓர் புத்துணர்ச்சி பூத்துவிடும். "அவர்தான் தமிழன்; வீரத் தமிழன்; தேசியக் கவிஞன்; தமிழகத்தைத் தட்டி எழுப்பிய வீரன்!" என்றெல்லாம் வீரமுழக்கம் செய்வார். பாரதியைப்பற்றி அடிகள் ஆங்கிலமொழியிலே சிறந்த கட்டுரைகள் எழுதி யுள்ளார். அந்த வகையிலே ஓர் பகுதியைத் தமிழிலே தருகிறேன் :

> பாரதியார்மீது மக்கள் அன்புமழை பொழியக் காரணம், அவருடைய பாடல்களின் கவர்ச்சியும் பெருமிதமும் அவற்றில் ததும்பும் தேச உணர்ச்சி யுமே. வாழ்க்கையைப்பற்றி அவருடைய கவிதை களில் காணப்படும் பரந்த நோக்கம் எல்லா மக்களை யும் கவருவதாயிருக்கிறது. ஒரு மகத்தான நாக ரிகத்தைத் தொன்றுதொட்டு வழிவழியாகப் பெற் றுள்ள தமிழ்மக்கள், தங்களுடைய நவீனகால வரகவி யான பாரதியின் பார்வைகொண்டு உலகத்தை நோக் குவதுடன், குறுகிய வகுப்பு வாதத்தையும், அற்பச் சம்பிரதாயங்களையும், உதறி யெறிந்துவிட்டு சகல நன்மைக்கும், எழிலுக்கும், உண்மைக்கும் மூலதன மாக விளங்கும் தெய்வீகத்தை நோக்கி அதன் பாதை யில் முன்னேறிச் செல்வார்களாக.

பாரதி அன்பனாக அடிகள் திகழ்ந்தார் என்பதற்கு இன்னொரு நிகழ்ச்சியும் நோக்கற்பாலது.

[1]திருக்கோணேச்சுர மிலங்கும் திரிகோணமலையி லுள்ள இந்துக் கல்லூரியில் பாரதி படத்தைத் திறந்து வைக்கும் விழாவிற்கு அடிகள் தலைமை தாங்குவதாக ஏற்பாடாகியது. ஆனால் சில அசௌகரியங்கள் ஏற்பட்ட மையால் அன்று அடிகள்வர இயலாமற் போயிற்று. அடுத்த திங்கள் அடிகள் இந்துக் கல்லூரிக்கு வந்தார். கல்லூரியில் திறக்கப்பட்டிருந்த பாரதி படத்தை அடிகள் ஆவலோடு பார்த்துக்கொண்டு நின்றார்கள். அப்போது திருக்கோணமலையில் மிகவும் செல்வாக்குள்ள ஒரு பிர முகர் அங்கு வந்திருந்தார். அவர் பாரதி படத்தை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, தலைப்பாகை அணிந்திருக்கும் இவர் யாரெனக் கேட்டார்.

பிரமுகர் காற்சட்டை மேற்சட்டை அணிந்து மேல் நாட்டு நாகரிகத்தில் மூழ்கியவர். ஆங்கிலநாட்டுச் சரித் திரத்தையும், அங்குள்ள கவிஞர்களையும்பற்றிப் படித் திருப்பார். ஆனால் தமிழ்நாட்டைப்பற்றியும், இங்குள்ள கவிஞர்களைப்பற்றியும் அவர் அறிந்துகொள்ளவில்லை. அறிந் தாலும் உடனடியாக மறந்துவிடுவதை, அவர் மறக்கவில்லை. சில நாட்களுக்கு முன்னர்த்தான் நடந்த பாரதி விழாவிற்கு அவர் வந்திருந்தார். பாரதியைப்பற்றிக் காதாரக் கேட் டார். ஆனால் அது நினைவில் வைக்கவேண்டிய ஒரு விடயமாக அவருக்குத் தோன்றவில்லை. ஆகவே மறந்து விட்டு இன்று இந்தத் தலைப்பாக் கட்டியவர் யார் என்று கேட்டார்.

பாரதியை அறியாத ஒரு தமிழ்மகன் இருப்பதைக் காண அடிகளுக்குப் பொறுக்கவில்லை. "யாரிந்தப் பேதை"

---

1. பாரதியை விபுலானந்தரில் கண்டேன் என்ற தலையங்கத் தில், விபுலானந்த வெள்ளிவிழா மணிமலரில் சோ. இராஜகோபால் எழுதியதிலிருந்து.

என்று அவர் பாரதியின் மொழியிலே எண்ணியிருக்க வேண்டும். துறவியாக இருந்தாலும் கோபத்தின் கோடு அவரது முகத்தில் தோன்றத்தான் செய்தது. ஆனல் அது அனுதாபத்தினல் ஏற்பட்ட கோபம். "அவர்தான் கவி அரசர் பாரதி. தமிழகத்தை உய்விக்கவந்த தெய்வம்'' என்று சற்றுக் கடுகடுத்த குரலில் கூறினர். இவ்வளவிற்கும் காரணம் அடிகள் பாரதியார்மேல் வைத்த வற்ருத காதல். கவியின் உள்ளத்தைக் கவிஞன்தானே அறிய முடியும். வீரனின் வீரத்தை ஓர் வீரன்தான் புகழ வேண்டும். தேசபக்தனின் உணர்ச்சியை இன்னெரு தேசபக்தன்தான் உணரமுடியும்.

பாரதியின் பாடல்களை ஈழநாட்டில் பரவச்செய்த பெருமை அடிகளைச் சாரும். தமிழ்நாட்டில்கூட, சர்க்கார் அடக்குமுறைக்குக்கூட அஞ்சாது பற்பல இடங்களிலும் பாரதி விழாக்களுக்கு அடிகள் தலைமை தாங்கினர்கள். பாரதியின் காவியத்திலே, எழுத்துக்களிலே உள்ள சுவையை எத்தனையோ விதங்களில் அடிகள் தமிழகத்திற்கு ஊட்டியுள்ளார். அடிகள் முற்றத்துறந்த துறவியாக இருந்தாலும், விவேகானந்தரின் அடிச்சுவட்டைப் பின்பற்றியதனல், சிறந்த ஓர் தேச அன்பராக விளங்கினர். பாரதி அன்பராகவும் உலாவினர்.

## திருவாளர் கந்தசாமியார்

அடிகள் அண்ணமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்தகாலையில், அடிகளின் மனத்தைக் கவர்ந்தவர் திருவாளர் கந்தசாமிப் பிள்ளை அவர்களாகும்.

அடிகளின்கீழ் திரு. கந்தசாமி விரிவுரையாளராகப் பணிபுரிந்து வந்தார். இவரின் தனிப்பண்புகள் தனித்

தன்மை கொண்டவை; தாமுண்டு தம் கடன் உண்டென் றிருப்பவர்; வகுப்புகளில் பாடம் தொடங்குவதற்குச் சில நிமிடங்களுக்குமுன்னர் வருவார்; பாடம் முடிந்த வுடன் நேரடியாக வீட்டிற்குச் சென்றுவிடுவார்; வேறொரு வருக்கு வீண்தொல்லை கொடுப்பதோ, விலைமதிக்க முடி யாத நேரத்தை வீணுகப் போக்கடிப்பதோ, அன்றி வேறெந்த வம்புகளோ, இவரிடம் இல்லை; ஒரு புதுமை மனிதராகத் தோன்றினர். வகுப்புகள் ஆரம்பிப்பதற்கு முன்னதாக கழகத்தினுள் நுழைந்தாலும், ஏனையவர் களைப்போல் வாசகசாலையிலோ, விளையாட்டிடத்திலோ தாழ்வாரத்திலோ நின்று தமக்குத் தொடர்பில்லாதவை களில் கலந்துகொள்ளமாட்டார்.

சிறந்த குணங்களும், பெருந்தன்மைகளும் அமையப் பெற்ற கந்தசாமியைப்பற்றி யாருமே அறியவில்லை. அவ ரது திறமைகூட என்னவென்று தெரியாதிருந்தனர். ஆனல் அடிகளோ அவருடைய செயல்களில் ஊன்றிக் கவனஞ்செலுத்தி ஆராய்ந்தார். கந்தசாமியின் உள்ளத் தினுள் நிறைந்திருக்கும் புலமையை வெளிப்படுத்த அவ ருக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை என்பதை அடிகள் உணர்ந்தார். முன்னேற்றப் பாதையினுள் அவரை அழைத்துச்செல்வது தமது கடமையென அடிகள் முடிவு கட்டினர். அதன்பயனுக, மேல்வகுப்புகளுக்கு விரிவுரை கள் நிகழ்த்தும்படி அடிகள் ஏற்றஒழுங்குகளைச் செய்தார்.

கந்தசாமியின் உள்ளத்திலே மறைந்துகிடந்த அறிவுத் திறமை, அடிகளின் ஏற்பாட்டினுல் வெளிவரலாயிற்று. மாணவர்களும் அவரைப் பெருமைப்படுத்தினர்கள். ஏனைய விரிவுரையாளர்களும் பாராட்டலானர்கள். இதனல் உளம் மகிழ்ந்தார். தமக்கு உயர்வுதந்த அடிகளை அவர் மறந்து

விட்டவில்லை. தம் குருவாக எண்ணினர். தனியொரு ஒப்பில்லாத இடத்தை அடிகளுக்கு ஒதுக்கினர். அதே போல் அடிகளும் அவருடன் நெருங்கிப்பழகி நட்புரிமை கொண்டு நடந்தார்.

தனியொரு வழியிலே, தம்பாட்டிலே, தாமுண்டு தம்வேலையுண்டென்றிருந்தவரைப் பல்கலைக்கழகத்திற்குச் சிறந்த தமிழ்ஒளி விளக்காக அடிகள் மிளிரச்செய்தார். பின்னர் ஓர்நாள் அவர் இறைவன் திருவடி அடைந்தபோது, அவரின்மேற்கொண்ட ஆழ்ந்த நட்பினால், வேலூர் மடத்தில் இருந்தகாலையில், "கங்கையில் விடுத்த ஓலை" என்ற தலையங்கத்துடன் பாமாலை புனைந்து பெருமைப்படுத்தினர்.

இறைவனுடைய இணையடிகளை யெய்திய கந்தசாமியிடம் கங்கையைத் தூது அனுப்புவதாக, அடிகள் பாடிய கவிதைஅமுதைத் தமிழகம் மனம் உவந்தேற்றது. அதில் சில நாழிகையேனும் யாவரும் கலத்தல் சிறப்புடையதாகும். அவைகளை ஈண்டுத் தருகின்றோம்.

எழுத்தறிந்து கலைபயின்றோன் இன்றமிழின் இயனூல்
எத்தனையோ அத்தனையும் எண்ணியாழங் கண்டோன்
பழுத்ததமிழ்ப் புலமையினோர் பேரவையில் முந்தும்
பணிந்தமொழிப் பெரும்புலவன் கனிந்தகுண நலத்தான்;

சொல்வகையும் சொற்றொகையும் சொல்நடையும் உணர்ந்தோன்
சொலல்வல்லான் சொற்சோராத் தூயநெறி யாளன்
பல்வகைய நூற்கடலுட் படிந்துண்மை மணிகள்
பலவெடுத்துத் திரட்டிவைத்த பண்டாரம் போல்வான்;

மொழித்திறத்தின் முட்டறுத்து மூதனூலும் உணர்ந்தோன்
மொழிவதற மொழியென்னும் மூதுரையைத் தெளிந்தோன்
அழுக்கறுத்த தூயசிந்தை அந்தண்மை அடக்கம்
அணியிவைதாம் எனக்கொண்டோன் அறநெறியில் நின்றோன்;

மெய்ப்பொருளே பொருளென்ன விளங்கவைத்து முன்னோர்
விரித்துரைத்த அகமேழும் புறமேழும் பயின்றோன்
பொய்ப்பொருளை நச்சுபவர் புறங்கடைநோக் காதோன்
போதுபுனை மாதர்நலம் தீதெனவிட் டகன்றோன் ;

அவநெறியிற் செல்வோர்தாம் கரும்பிருக்க இரும்பை
அயிலுகின்ற மூடரென அறிந்துலகு துறந்து
தவநெறியில் தலைப்பட்டோன் அவாவின்மை யென்னும்
தனிச்செல்வந் திரட்டிவைத்த தாவில்புக ழாளன் ;

அன்பாண்ட புலமையினோர் எந்நாடும் நாடா
அடைந்துவத்தல் முறையெனினும் அமலனர சாண்ட
தென்பாண்டி நன்னாட்டிற் சோழவந்தா னூரைச்
சேர்ந்துதிகழ் சைவநெறித் திருமடத்தில் உறைந்தோன் ;

கந்தசா மிப்பெயரோன் வேட்களத்தி லென்னைக்
கண்டநாள் அன்பென்னுங் கயிறுகொண்டு பிணித்தான்
அந்தநாள் முதலாக நட்புரிமை பூண்டோம்
அண்மையில்யான் வடநாடு நண்ணியதை அறிந்தே ;

நம்மடிக ளுறைகின்ற தவப்பள்ளி யாது
நற்றவத்தோர் முகவரியா தெனவினவித் தெரிந்து
செம்மையுறுஞ் செய்திபொதி ஓலையொன்று விடுக்கச்
சிந்தை வைத்தான் எனவெனக்கோர் அன்பனறி வித்தான்.

அகநெகுமன் பினிலூறும் உரைபகரும் பொருட்டோ
ஆய்ந்தசில கலைமுடிபு தேர்ந்துணரும் பொருட்டோ
முகவரிபெற் றோலைவிட முயன்றனன்பே ரன்பன்
மூதறிஞ னெனவெண்ணி ஆதரமுற் றிருந்தேன் ;

ஓரிருநாள் கழியுமுன்னர் மார்படைப்பு நோயால்
ஊனுடலம் பாரில்விழ வானுலகு புகுந்தான்
ஆருயிர்நேர் நண்பனெனும் அவலவுரை செவியில்
அனற்பிழம்பாய்ப் புகுந்துளத்தை உருக்கிய தப்பொழுதில்,

பொங்கியெழுந் துயர்க்கனலைப் போக்குதற்கும் மாயப்
பொய்யுலகின் உண்மையினைப் புலங்கொளற்குங் கருதிக்
கங்கையெனுந் தெய்வநதிக் கரைப்புறத்தை யடைந்து
கல்லென்று சொல்லிவிழும் நீர்த்தரங்கங் கண்டேன்.

மேற்றிசைவான் ஈமத்தீ போற்சிவக்கப் பகலோன்
மெலிந்துமறைந் திடல்கண்டேன் நலிந்தவருள் ளம்போற்
காற்றுயிர்த்துப் பனித்திவலை தூற்றுதலைக் கண்டேன்
காரிருளின் கணமிரிய வானவெளிப் பரப்பில்,

ஐயிரண்டு நாள்வளர்ந்த வெண்மதியந் தோன்றி
அன்புசொரிந் திடல்கண்டேன் மன்பதையோர் வாழ்க்கைச்
செய்தியினைத் தேவரறி வாரெனலால் இவர்பால்
தேர்ந்திடுவன் எனமனதில் ஓர்ந்தொருபால் இருந்தேன்;

அக்கரையிற் காசிப்பூர்ச் சுடுகாட்டு நரிகள்
அழுகுரலி னொலிசெவியை யடைந்ததுநன் னீரின்
இக்கரையில் உதிர்சருகும் குச்சிகளும் அலையால்
எற்றுண்டு செயலொழிந்து கிடந்தனவெம் மருங்கும்.

நீர்த்திரையால் இழுப்புண்ட குச்சியொன்று கணமும்
நில்லாது மேலெழுந்தும் கீழ்விழுந்தும் அலைந்து
சீர்க்கரையில் எற்றுண்டு கிடந்தசெயல் நோக்கிச்
சிந்திக்கின் மானிடர்தம் வாழ்க்கையிது வென்றேன்.

இன்பவிளை யாட்டினிடை மேலெழுந்து குதிப்பார்
எமக்குநிகர் ஆரென்பார் இருகணத்தி னுளத்தில்
துன்பமுற மண்ணில்விழுந் திருகண்ணீர் சொரியச்
சோர்ந்தழுவார் மயக்கமெனும் சுழல்காற்றில் அலைவார்;

மரணமெனுந் தடங்கரையில் எற்றுண்டு கிடப்பார்
மறுபிறவித் திரைகவர வந்தியையுங் கருவி
கரணமுறும் உடலெடுத்து மண்ணுலகில் உழல்வார்
காதலிப்பார் எண்ணிறந்த வேதனையுட் புகுவார்;

என்றினைய சிந்தைசெய்து நீலவிதா னத்தில்
எழில்முகத்தின் சுடர்பரப்பி எழுமதியை நோக்கி
நன்றறிவார் கலைத்திறத்திற் கிலக்காய மதியே!
நன்மதியே! நாதர்சடை முடியுறையும் நலத்தோய்;

தாழ்வதும் மடிவதும் தரணியில்வந் துதித்தோர்
தாவில்புகழ் நலம்பெருக்கித் தண்ணளிசேர்ந் தனராய்
வாழ்வதும் எத்திறத்தால் வந்தனகாண் என்றேன்
வான்மதியம் எனைநோக்கி மானிடவ கேட்டி;

மாய்தலெனும் பேருண்மை பிறத்தலெனு முண்மை
வந்துதித்தோர் தொல்லுலகில் வளர்தலெனு முண்மை
தேய்தலெனு முண்மையிவை யாருமுளங் கொள்ளச்
சென்றுதேய்ந் திறந்துதித்து நின்றுவளர் கின்றேன்;

இன்றுயில்போற் சாக்காடும் இனிதுதுயின் றதன்பின்
எழுவதுபோற் பிறப்புமெனும் இபற்புலவ னுரையை
நன்றுணர்தி யெனக்கூறும் தண்மதியை நோக்கி
நரகமொடு சுவர்க்கமுந்தான் நண்ணுவதேன் என்றேன்;

நற்கனவு சுவர்க்கமுளம் நலியவருங் கனவு
நரகமிவை நல்வினையின் தீவினையின் விளைவாய்
உற்றவென அறிதியெனும் உரையையுளங் கொண்டேன்
உண்மைநண்பன் றனைநினைந்து பின்னுமுரை பகர்வேன்;

வருந்தித்தாங் கற்றகல்வி மாய்ந்துமறைந் திடுமோ
மறுமையிலும் உதவுமோ வான்மதியே! யென்றேன்
திருந்துகல்வி எழுமையுமே ஏமாப்புடைத் தென்றுரைத்த
செம்மொழியைத் தேர்தியென வெண்மதியம் விடுக்க;

மாணியென வாழ்க்கைமுற்றும் இலக்கணநூல் பயன்றேன்
வானகத்தும் அதுபயில்வான் எனுமுண்மை தெளிந்தோன்
பாணினிதொல் காப்பியன்சீர்ப் பதஞ்சலிவா மூலகு
படர்ந்தனனென் நண்பனெனும் பான்மையினை உணர்ந்தேன்.

தோற்றுவதும் மறைவதுவும் தொல்லியல்பென் றுணரத்
துயரகன்ற தெனினுமன்புத் தொடரகலா மையினல்
மாற்றமொன்று முரையாது வான்புகுந்தாற் கோலே
வரைவலென அன்புபொதி வாசகங்கள் எழுதி,

அறிவற்றங் காக்குமெனும் அறவுரையை யெழுதி
அறநெறியால் இன்பமெய்தும் அமைதியையும் எழுதி
உறுநட்பு நிலைபெறுமென் றுறுதிப்பா டெழுதி
ஓதுவிபு லாநந்தன் உரையிவையென் றெழுதி,

செல்வமலி விண்ணாட்டிற் செழுங்கலைத்தெய் வம்வாழ்
திருநகரில் தமிழ்வழங்குந் தெருவிலொரு மனையில்
அல்லலின்றி வாழ்கின்ற கந்தசா மிப்பேர்
அறிஞனுக்கிவ் வோலையென அடையாளம் பொறித்தேன்,

வேலைநீர் வையகத்தோர் அன்னத்தைக் கிளியை
மென்முகிலைத் தூதாக விடுத்தனர் யான்எழுதும்
ஓலைகொண்டு விண்புகுந்து நண்பனிடஞ் சேர்க்கும்
உதவியினைப் புரியவல்லார் யாவரெனக் கலங்கி,

தேவர்புகழ் கங்கையெனுஞ் செல்வநதி நங்கை
செஞ்சடைவா னவனிடத்தாள் இங்குமுறை கின்றாள்
மூவுலகுஞ் செலவல்லாள் எவ்வுயிரும் புரக்கும்
முதல்வியிவள் துணைபெறுவன் எனவிதயந் துணிந்தே,

வேறு

செம்பவளக் கொம்பினிடைச் சேர்ந்தமுத்து மாலையைப்போல்
எம்பெருமான் செஞ்சடையை எய்திநின்ற வானதியே!
எம்பெருமான் செஞ்சடைவிட் டிங்குவந்து தண்ணளியால்
வெம்பரிதித் தீயகற்றும் மின்னே! நினைத்தொழுதேன்;

மாற்றுயர்ந்த பொன்மலைமேல் வைத்தவெள்ளிக் கோல்போல
ஏற்றியல்வோன் பொற்சடையை எய்திநின்ற வானதியே!
ஏற்றியல்வோன் பொற்சடைவிட் டிங்குவந்து மக்கள்பசி
ஆற்ற உணவளிக்கும் அன்னாய்! நினைத்தொழுதேன்;

சுடர்கதிரைச் சூழ்ந்தொளிருந் தூவெண் முகில்போல
இடர்களைவோன் நீள்சடையை எய்திநின்ற வானதியே!
இடர்களைவோன் நீள்சடைவிட் டிங்குவந்து பூதலத்தோர்
தொடர்பிறவி வேர்களையுந் தூயோய்! நினைத்தொழுதேன்;

என வாங்கு,

மும்முறை நினைந்து முறைமையின் வணங்க
அம்மென் சிலம்புநின் றரற்றுஞ் சீறடி
செம்மல ரென்னத் திகழ அம்மலர்ப்
பாசடை கடுக்கும் பட்டி னியன்ற
தூசு செறியிடை துவள மாசில்
வாண்மதி முகத்திற் புன்னகை தவழ
மகரமீன் மிசை யிவர்ந்து
காரிடைத் தோன்றிய மின்னுக் கொடிபோல்
நீரிடைத் தோன்றி மறைந்தனள் பாரிடைத்
தெண்டனிட் டவளடி வணங்கி யண்டர்
நாட்டிடை வைகும் நண்பன் கையில்
ஈங்கிது சேர்கவென் றிரும்புனல் நீரில்
ஓலையை யிடலும் ஏந்திய வானதி
வேலையை நோக்கி விரைந்துசென் றதுவே.

அடிகளுக்கு எத்தனையோ பேர்கள் அறிமுகமாய் இருந்தார்கள். அவருள் மிகுதியானவர் நண்பர்களே. பலர் உயிர் நண்பர்களாகவும் இருந்தார்கள். என்றாலும் இவர்களில் யாரையேனும் பற்றி அடிகள் கவிதை இயற்றியவரல்லர்; போற்றிப் புகழ்ந்து பேசியவரல்லர்; அப்படியிருக்க, திரு. கந்தசாமியார் அவர்களைப்பற்றி அடிகள் கவிதை இயற்றுவதெனின், அடிகள் அன்னாருடன் எத்தகைய நட்புரிமை கொண்டிருந்தாரென்பது இனிது தெளிவாகிறது.

வேலூர் மடத்தில் அடிகள் இருந்தகாலையில், கந்தசாமி இறந்த செய்தியைக் கேள்வியுற்றவுடன் மிகவும் மனங்

கலங்கினர். ஆருயிர் நண்பன் என்று அலமந்தார். கந்தசாமி அவர்களின் திறமையை அடிகள் சொல்லும்போது பலருக்கு வியப்பு ஏற்படலாம்; அவைகள் புகழ்வார்த்தைகளல்ல; முற்றும் உண்மையான சொல்லோவியங்களேயாகும்; இன்றமிழின் இயனூல் எத்தனையோ, அத்தனையும் கற்றவர் கந்தசாமியார் என்று அடிகள் அழகாகக் கூறுகிறார்; அந்த முறையிலே அன்பர் கந்தசாமியாரின் திறமை நமக்குத் தெளிவாகிவிடுகின்றது.

## இசை ஆராய்ச்சி

மட்டக்களப்பின் தமிழ் வழிவழி வந்து தோன்றி ஈழநாட்டிற்கே புகழ் ஈட்டிய அடிகள், தமது பிறந்தநாட்டிலிருந்த நீரர மகளிரின் இன்னிசையிலே மகிழ்ந்தார். அதன் இன்னிசை யாழின் இன்னிசைபோல் சிறப்புடையதாக இருந்தது. ஆதலினால் யாழினுடைய இன்னிசையைப் பற்றி எண்ணமிடலானார். முன்னாளில் இலங்கையை ஆண்ட இராவணன், இறைவனை நோக்கி யாழ் வாசித்தான். அவனது யாழின் இன்னிசையிலே மயங்கிய இறைவன், இராவணனின் விருப்பத்தை நிறைவு செய்தார்.

திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்களை, அவரோடு உடன் இருந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர், யாழிலிட்டு இசைத்தார். அந்த யாழ் சகோடயாழ் என்று சொல்லப்படும். அதன் பழந்தமிழ்ப் பெயர் 'செம்முறைக் கேள்வி'யாகும். இத்தகை நிகழ்ச்சிகளால் அடிகள் யாழின் பெருமையைக் கண்டார்; உணர்ந்தார்; பழந்தமிழர் கையாண்ட யாழ் மறைந்துவிட்டது. அதனை ஆராய்ச்சி மூலமாகக் கண்டுணர்ந்து தமிழகத்திற்குக் கொணரும் வாயிலாக இசைஆராய்ச்சியிலே இறங்கினர்; அதன் பெரும்பயனைகத் தொடக்கத்திலே "பழந்தமிழர் இசையும்

பிறநுண் கலைகளும்" என்னும்பொருள்பற்றி ஓர் ஆராய்ச்சி விரிவுரை நிகழ்த்தினர்.

சொற்பொழிவை நிலைநிறுத்துவதுபோல் அடிகள் படங்கள்கூட வரைந்து சிறந்த விளக்கங்கொடுத்தார். இச் சொற்பொழிவைக்கேட்ட அறிஞர்கள் அடிகளைப் புகழ்ந்து பாராட்டினர்கள். அண்ணுமலைப் பல்கலைக்கழகத்திலும் இசை, அலங்காரசாத்திரம் முதலிய பொருள்கள்பற்றி விரிவுரைகள் நிகழ்த்தினர். திருச்சிராப்பள்ளி வானெலியி லும் அடிகள் இசைபற்றிய சொற்பொழிவுகள் ஆற்றினர். இவ்வாருக அடிகள் யாழ்பற்றிய ஆராய்வுகளை முன்னறி விப்பிற்காகத் தமிழகத்திற்கு விரிவுரைகள் வாயிலாக வழங்கினர். இப்பேச்சுக்கள் அனைத்தும் சுருக்கெழுத் தாளர்களால் கணிக்கப்பட்டு நாளிதழ்களில் வெளிவந்தன. பண்டையமக்களின் யாழ்களைத் தமிழகத்திற்கு மீட்டுக் கொணர்வதென்ற முழு நம்பிக்கையினல் நீண்ட ஆராய்வில் இறங்கினர்.

யாழ் சம்பந்தமான ஆராய்ச்சியில் முற்ருக இறங்குவ தற்கு, அடிகளின் அலுவன்முறை தடையாக இருந்தது. மேலும் பல காரணங்களை முன்னிட்டு இன்னும் சிறிது காலத்திற்குத் தமிழ்ப்பேராசிரியப் பணியை மேற்கொள் வது அடிகளுக்கு இயலாதுபோயிற்று.

தமது வளர்ப்புக் குழந்தையான சிவானந்த வித்தியா லயத்தை வளர்ப்பதற்காகவேதான் அடிகள் ஊதியம் பெற்ருர். இந்நாட்களில் வித்தியாலயமும் ஒருவாறு வளர்ந் தாயிற்று. இனித் தமிழ்ப்பணியிலே இறங்கிப் பண்டைய யாழை மக்களுக்கு அளிக்கவேண்டுமென்ற முதன்மையான முயற்சியினல் 1933-ம் ஆண்டு அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பணியைத் துறந்தார். அடிகள் பேராசிரியப்

பணியைவிட்டுத் துறப்பது மற்றையோர்க்கு முழு விருப்ப மாக இருக்கவில்லை. என்றாலும் அடிகள் தமிழகத்திற் களிக்கப்போகும் அரும்பெரும் ஆராய்ச்சியை முன்னிட்டுக் களிகூர்ந்து பிரியா விடைகூறி வழி அனுப்பிவைத்தார்கள்.

## மொழிபெயர்ப்பாசிரியர்

அடிகள் இயல் இசை நாடகமென்னும் முத்தமிழிலும் கல்வித்திறனடைந்து, ஆங்கிலமொழியிலே பட்டம்பெற்று, வடமொழியிலும் திறனடைந்ததுடன் நில்லாது அயல் நாட்டு மொழிகளான இலத்தீன், யவனம், வங்கம், சிங்களம், அரபி ஆகியவைகளையும் நலம்படக்கற்று அறிந்திருந்தார். மேலும் அடிகள் ஓவியம் வரைவதிலும் திறமையாளராகவிருந்தார். இவ்வாறாகப் பலமொழிகளிலே திறனடைந்திருந்தமையினாற்றான் அடிகளுக்கு மொழிபெயர்த்தல் ஓர் பொழுதுபோக்குப்போலிருந்தது. தமிழை ஆங்கிலத்திலோ அல்லது ஆங்கிலத்தைத் தமிழிலோ மொழிபெயர்ப்பதில் அடிகளுக்கு நிகர் அடிகளேயாவர். அந்தவகையிலே அடிகள் தமிழர் என்ற முறையில் தமிழின் பெருமையை உலகெங்கும் ஆங்கில மொழியிலே எடுத்துக் காட்டிப் பெருமையை ஈட்டினார்.

அடிகள் உரைநடைகளை மட்டும் மொழிபெயர்ப்பதில் நின்றுவிடவில்லை. செய்யுட்களையும் அதன் சிறப்புகள் குன்றாவண்ணம் மொழிபெயர்ப்பார். 'ராம கிருஷ்ண விஜயம்' என்னும் தமிழ்வெளியீட்டிற்கு ஆசிரியராக விளங்கியகாலையில் சுவாமி விவேகானந்தர் அருளிச்செய்த அரும்பெரும் நூல்களிற் பலவற்றைத் தமிழ்மொழியிலே மொழிபெயர்த்தார். பத்திரிகை ஆசிரியப் பணியை விட்ட காலையிலும் அடிகள் ஓய்வான வேளைகளில் பல நூல்களை

மொழிபெயர்த்துள்ளார். 'பிரபுத்த பாரதா' என்ற ஆங்கில வெளியீட்டின் ஆசிரியராக இருந்தகாலையில் தமிழர்நாகரிகம், தாயகம், தமிழ் இலக்கியம் ஆகியவற்றின் அரும்பெரும் உண்மைகளை ஆங்கிலமொழியிலே வெளிப் படுத்தி உலகமெங்கும் தமிழைப் பரப்பினார்.

அடிகள் ஆங்கிலப் புலவர்கள் யாத்துள்ள செய்யுட் களைத் தமிழ்ச்செய்யுள் நடையிலே யாத்துள்ளார். ஆங்கிலவாணி, பூஞ்சோலைக்காவலன் முதலியன அடிகளின் மொழிபெயர்ப்புத் திறமைக்குச் சிறந்த சான்றுகளாகும். மகாமகோபாத்தியாய பண்டிதமணி கதிரேசன் செட்டி யார் அவர்களுக்கு அளித்த மணிமலர் என்னும் பெரு மலரை அணிசெய்யும் 'ஆங்கிலவாணி' யெனும் கட்டுரை அடிகளின் ஆங்கிலப்புலமைக்கும், தமிழ்ப்புலமைக்கும் எடுத்துக்காட்டாகும். 'விவேகானந்த ஞானதீபம்' 'கர்ம யோகம்', 'ஞானயோகம்', 'நம்மவர்நாட்டு ஞான வாழ்க்கை', 'விவேகானந்த சம்பாசணைகள்' ஆகிய நூல்களை ராமகிருஷ்ண மடாலயத்தின் வாயிலாக அழகிய தமிழ்நடையில் மொழிபெயர்த்துள்ளார்; மேலும் பல நூல்களை மடாலயத்திற்கு மொழிபெயர்த்து உதவியுள் ளார்; அவைகள் இன்னும் அச்சிடப்பெறவில்லை.

தற்பொழுது மொழிபெயர்ப்பவர்கள் அடிகளின் மொழிபெயர்ப்புநூல்களைக் கற்றால் தமிழ்மொழிமரபு சிதைவுறாமல் மொழிபெயர்க்கப் பயின்றுகொள்ளலாம். அடிகள் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்ததுட னமையாது 'திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டு'மென்ற பாரதியின் ஆணைக்கிணங்க [1] 'தமிழ் இலக்கியத் தோற்றமும் வளர்ச்சி

1. The Origin and growth of Tamil Literature.

யும்', [1] 'தமிழ் நாட்டு நூல்களுள் ஒரு நூல்,' [2] 'ஒலி நூல்' முதலிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை ஆங்கிலத்திலெழுதி வெளியிட்டார். அடிகளின் தமிழ் மொழிபெயர்ப்பிற்கு எடுத்துக்காட்டாக கர்மயோகம் என்னும் நூலிலிருந்து ஓர் சிறு பகுதியைக் கீழே தருகிறேன்.

சில்லினுட் சில்லுச் சுழல்வதாகவுள்ள இவ்வுலகம் அச்சந்தரும் ஒருபொறி. இதனுட் கைவைத்தவர் பிடிபட்டவராவர்; சிலர் தொழில்களைச் செய்து நிறைவேற்றிய பின் ஆறுதலாயிருப்போமென்று விடாது செய்கிறார்; அவை முடிவதற்கு முன் வேறு சில தொழில்கள் அவரைப் பற்றுகின்றன; இங்ஙனமாக உலக வன்பொறி நம்மைக் கவர்ந்துகொண்டு செல்லுகிறது; இதனுள்ளிருந்து வெளிவர இரண்டு வழியுண்டு. ஒன்று, உலகிற்கும் நமக்கும் ஒரு தொடர்பில்லையென்று ஆசையறுத்து வெளியே நிற்றல்; இங்ஙனம் சொல்லுவது எளிதாயிருப்பினும் செய்வது மிகவும் இயலாதவொன்று. இரண்டுகோடி மனிதரில் ஒரு மனிதன்தானும் இங்ஙனம் செய்யவல்லவனல்லன். மற்றொருவழி கருமயோக உண்மையை உணர்ந்து உலகினுட் புகுந்து கருமஞ்செய்து உலக வன்பொறியைக் கொண்டே அதனினின்றும் வெளியேறுதல். இதனில் முதற்படியில் நின்று வெளியேறியவர் அடிகளே.

## சொற்பெருஞ் செல்வர் [3]

அதோ ரசியாவைப் பார் என்று ஆட்காட்டி விரலால் சுட்டிக்காட்டி வீரமுழக்கம் செய்கிறார் திருவாளர் சிங்க

1. The book of Books in Tamil Land (Thirukkural).

2. Phonetics.

3. விபுலாநந்த வெள்ளிவிழா மணிமலரில், ஆர். கே. சண்முக நாதன்.

நாதம். கடற்கரையில் ஒலி பெருக்கி ஆட்டம் போடுகிறது. நமது காதுகள் செவிடுபடுகின்றன. கடல் ஓசை மங்குகிறது. கைதட்டல் ஒலி வானைப் பிளக்கிறது. மறுநாள் இத்தனையும் காற்றுவாக்கில் போய்விடுகிறது. காரணம் என்ன? இது வெறும் ஆரவாரப்பேச்சு! சொற்பொழிவாளர் தொண்டைப்பலத்தைக் காட்டப் போடும் கூட்டம். காலில் ஒரு கட்டை. கழுத்தில் ஒருபட்டை. உடலில் ஒரு சட்டை. இடுப்பில் பொடிமட்டை. மூக்கில் ஒரு சொட்டை. கையில் ஒரு அட்டை. இத்தனை வேடங்களுடன் கொள்ளையடிக்கிறான் பூசாரியென்று கூச்சலிடுகிறார் சீர்திருத்தவாதி. இந்தப்பேச்சு காதோடுசரி. காதைத்தாண்டி மண்டையில் புகாது. ஏன்? வெறும் சொற்பந்தல்.

இனி நம் பெயர்போன புராணப் பிரசங்கியாரைப் பார்ப்போம். "கண்ணை இமையாமல் தேவர்கள் ராமனைப் பார்த்தார்கள்" என்று கம்பர் எங்கோ சொன்னாராம். இதை வைத்துக்கொண்டு கட்டடம் கட்ட ஆரம்பிப்பார்கள் புராணிகர்கள். இரண்டு கண்கள் இருப்பதனால் அல்லவா, எங்களால் இராமன் அழகை முழுதும் பார்க்க முடியவில்லை யென்று தேவர்கள் சொல்லிக்கொண்டு மூன்று கண்களையுடைய முக்கண்ணனிடம் சொல்லி முறையிட்டார்கள். அவரும் இவர்களுடன் சேர்ந்துகொண்டு எட்டுக் கண்களையுடைய பிரமாவிடம் சென்றார். பிறகு பன்னிரண்டு கண்களையுடைய முருகனிடமும், உடம்பெல்லாம் கண்களையுடைய இந்திரனிடமும், இரண்டாயிரம் கண்களையுடைய ஆதிசேடனிடமும் சென்று ராமன் அழகின் ஆழத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்று முடிப்பார். அத்துடன் நான்குமணி நேரமும் ஐந்துசெம்பு பசுப்பாலும் நாசம். இது உப்புப் புளிக்குதவாத வெறுங் கற்பனை விரிவுரை.

தான் வானத்தை வில்லாக வளைப்பேன். மண்ணைக் கயிறாகத்திரிப்பேன். உங்களுக்கு வசிக்க வீடுவேண்டுமா? பசிக்கு உணவு வேண்டுமா? அப்படியானால் எனக்கு ஓட்டுப் போடுங்களென்று படார் படாரென்று மேசை மேல் கையை மடித்துக்கொண்டு குத்துவார் பேச்சாளர். இது பேச்சா? ஓட்டுக்காகப் போடும் கூச்சல்.

அடிகளாரின் பேச்சு இவற்றிற்கெல்லாம் முரண் பட்டது; அதில் படாடோபம் கிடையாது. சொற்பந்தல் இருக்காது. கூறியது கூறல் என்னும் குற்றம் இருக்காது. தொண்டைகிழியக் கத்துதல் கிடையாது. சுருங்கச் சொன்னால், பேச்சு மூச்சைப்போக்குவதற்காக இருக் காது. ஒரு சொற்பெருஞ் செல்வராக விளங்கிய அடிக ளார் அமைதியாகவும், ஆணித்தரமாகவும், விடயங்களை எடுத்துச் சொல்வார். கூட்டத்தில் கரகோசம் பெறும் நோக்கம் அவருக்குக் கிடையாது. அத்தனை பேர்களும் கல்வி அறிவில் தேர்ந்தவர்களாகவேண்டுமென்ற அவா வுடன் சிறந்த விடயங்களைப் பொறுக்கி, வெகு தெளிவாக எடுத்துச்சொல்வார். கூட்டத்திற்கு வந்திருந்த அத்தனை பேரும் எல்லா விடயங்களையும் புரிந்துகொள்வார்க ளென்று சொல்லமுடியாது. அவரவர் கல்வி அறிவிற் கேற்ப விடயங்களைப் பொறுக்கிக்கொள்வார்கள். ஒரு சமயம் அடிகளார் தமது விரிவுரையில் அந்தக் காலத்து தமிழ்ப்பள்ளிக்கூடங்களின் நிலைமையைப்பற்றி வருத்தத் துடன் குறிப்பிட்டு ஒரு கதை சொன்னார்.

ஒரு தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் தேர்வு நடக்கிறது. தமிழ் ஆங்கில "வொக்கப்பிலேரி"யை வைத்து அரைகுறை யாகக் தமிழ் படித்துக்கொண்ட ஒரு ஆங்கிலேயர் பரி

சோதகராக வந்திருந்தார். தமிழை எழுத்துக்கூட்டி வாசிக்கத் தெரியுமேயொழிய வேறொன்றும் அவருக்குத் தெரியாது. தமிழ் ஆசிரியர் தேர்வு நடத்துவதைக் கவனித்தார். தாமும் ஓர் கேள்வி போட்டு வைப்போமே என்று ஆங்கிலேயர் எண்ணினர். பக்கத்திலிருந்த ஓர் புத்தகத்தை எடுத்தார். அது இலக்கணப் புத்தகம். புரட்டினர். 'குற்றியலுகரம்' என்றால் என்ன?' என்ற வினவாக்கியம் அதில் காணப்பட்டது. ஒருவிதமாக மூச்சைப் பிடித்துக்கொண்டு தட்டித்தடுமாறி 'குற்றியலுகாரமென்றால் என்ன?' என்று வகுப்பைப் பார்த்துக் கேட்டார். அவர் தமிழை உச்சரித்த மாதிரியில் மாணாக்கர்களுக்கு அவர் என்ன சொன்னர் என்றே தெரியவில்லை அரைவயிற்றுக் கஞ்சிக்காகப் பாடுபடும் தமிழாசிரியருக்கு இதை விளக்கிக் கூறினல் அந்த அரைவயிற்றுக் கஞ்சியிலும் மண் விழுந்து விடுமோ என்ற பயம். அப்படியிருந்தும் ஏதோ சொல்ல வாயெடுத்தார். "யூ சட் அப்" என்று அதட்டினர். தமக்குத் தமிழ் தெரியாதென்ற விடயம் எங்கே வெளியாகிவிடுகிறதோ என்ற பயம் ஆங்கிலேயருக்கு. எல்லா மாணாக்கர்களும் கப்சிப் என்று இருந்தார்கள். ஒருவன் துணிந்த மாணாக்கன். அதோடு அவனுக்கு விடயமும் விளங்கிவிட்டது. எழுந்தான். "நீங்கள் என்ன கேட்டீர்களென்று எங்களுக்குத் தெரியாது. உங்களுக்குக்கூடத் தெரியாது. எங்கள் தலையெழுத்து ஏதாவது சொல்லியழ வேண்டுமென்பதற்காகச் சொன்னேன். அவ்வளவுதான்." என்று கூறி விட்டு உட்கார்ந்து விட்டான். தான் கேட்ட கேள்விக்குச் சரியாகத்தான் பதில் சொல்லியிருப்பான் என்று நினைத்து அவனுக்குமட்டும் முழுப்புள்ளியையும் கொடுத்துவிட்டார். இதனல் அடிகளின் சொல்வன்மை புலனகிறது.

## தமிழ்மாநாட்டின் தலைமை

1942-ம் ஆண்டு ஆவணித்திங்கள் முதல் நாள் மதுரை மாநகரில் முத்தமிழ் மாநாடு ஆரம்பமாகியது. இம் மாநாடு இயல், இசை, நாடகமென்னும் முப்பகுதியாக வகுக்கப்பட்டு நடைபெற்றது. இதில் அடிகள் இயற் பகுதிக்குத் தலைமை தாங்கியதுடன் சிறந்த ஓர் விரிவுரை யையும் நிகழ்த்தினர். இவ்விரிவுரையை மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வெளிவரும் திங்கள் இதழ் தாங்கி வந்தது. அதிலிருந்து ஈண்டு ஓர் பகுதியைக் குறிப்பிடு கிறேன்.

காலநீரோட்டம் விரைந்து ஓடுகின்றது. தமிழர் பழங் காலத்துச் சிறப்பினை மாத்திரம் பறையறைந்துகொண் டிருப்பா ரெனின் நிகழ்காலத்தையும், எதிர்காலத்தை யும், முற்றிலும் இழந்த நீர்மையராதலுங்கூடும். சென்ற நூற்றாண்டிலே ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும், விஞ்ஞான நூல் மிகவும் விருத்தியடைந்து விளங்குகிறது. அந்த அறிவுச்செல்வத்தைத் தமிழ்மொழி பெறுவதற்கு ஆவன செய்தல் சிறந்த தமிழ்த்தொண்டாகும். இலண்டன் மாநகரிலுள்ள வேத்தவை (Royal Society) என்னும் அறிவுநூற் புலவர் குழுவானது நமது தமிழ்நாட்டிலே பிறந்து தமிழ்நாட்டுக் கலைக் கழகங்களிலே கல்வி பயின்று கணித நூலினும், விஞ்ஞான நூலினும் பெரும்புலமை படைத்த திரு. இராமனுசம், திரு. இராமன், திரு. கிருட்டி

னன் என்றின்னோருடைய் புலமையைப் பாராட்டி அவை யகத்தாராக்கிய செய்தி கேட்டு நாமெல்லாம் பெருமகிழ் வடைந்தோம். கணித விஞ்ஞான அறிவு நிரம்பிப் பூவுல கத்துப் பேரறிஞர் குழுவிலே, தலையணியிலிருக்கும் ஆற்றல் தமிழனுக்குண்டு என்பதை, அறிந்து கொண் டோம். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தாரின் முயற்சி யினலே, தமிழ்மொழியில் இயற்கைப்பொருள் நூல் (Physics) இயைபுநூல் (Chemistry) புதிய அளவை (Logic) என்றிவை வெளிவந்துவிட்டன. ஆட்சியும் குணமும் காரணமாகக் கலைச்சொற்கள் நாளடைவிலே செம்மையுறும் தன்மையன. அங்ஙனமாதலின் வட மொழி, தென்மொழி, மேற்றிசை மொழி யென்னும் முந்நீர மொழிகளும் இற்றைநாளில் அறிவுப்பெருங் கடலிலே கலத்தலை யாமெல்லாம் விருப்போடு ஏற்றுக் கொள்வோமாக.

தமிழ்நாடு தனக்குரிய ஆக்கத்தினைப் பெறுகிற நன்னளிலே அறிவுக் கடலிலிருந்து எழப்போகின்ற தமிழ் முகிலானது புன்மையாகிய உவர்த்தன்மையினை முற்றி லும் நீக்கித் தூய தமிழ்நீரினை நாடெங்கும் பொழியக் காண்போம். அந்நாள் மிகவும் அணுகி வருகிறதென்ப தற்கு இம்முத்தமிழ் மாநாடே சான்று பகருகின்றது. மூடநம்பிக்கையோடு கூடிய பௌராணிக மனப்பான்மை யென்னும் இருள் அகல்கின்றது. அறிவுக்கதிரோ னுடைய இளவெயிலானது நம்முள்ளத்திற்கு உவகையை யும் உடல் நலத்திற்குப் புதிய வலிமையையும் தருகிறது, புத்தம் புதிய நூல்கள் பலவற்றைப் புனைந்து தமிழ் அன்னையின் திருவடிகளிலே காணிக்கையாக வைப் போமாக.

சேரமுனிவன் செய்தளித்த சிலம்பினை யணிந்த அச் சீறடிகள், நம் நாவிலே களிநடம் புரிபவாருக. உறக்கம் நீக்கி விழித்தெழுந்த தமிழராகிய நாம் ஓய்வின்றி உழைத்து உலகனைத்தினும் நம் மொழிச்செல்வத்தைப் பரப்புவதற்கு முயல்வோமாக. தமிழ்மொழியை மரபு தவருது ஆராய்ந்து கற்ருேரும், அவ்வாறு கற்றுத் தேறிய வரை வழிபடுவோருமாகிய இருசாராருமே உண்மைத் தமிழ்த்தொண்டிற்கு உரியோராவர். 'கற்றலிற் கற்ருரை வழிபடுதல் சிறந்தன்று' என்னும் அறிஞருரையும் இவ் வுண்மையினையே வலியுறுத்துகின்றது. முறையாகக் கற்றலும் செய்யாது, கற்று வல்லாரை யடைந்து வழிபாடியற்றிப் பெறுதற்குரிய கேள்விச்செல்வமும் எய்தப் பெருது தமிழ்த்தொண்டு செய்ய முற்படுதல் பயனில் செயலாகும். முன்னேர்மொழிபொருளையும், மரபு பட்ட இலக்கண முடிபுகளையும், ஆராய்ந்தறிந்து கொள் ளாது நெறியறியா மாக்களை மயக்கி அவர்தம்மை நெறி யல்லா நெறியிற் புகுத்தி ஆரவாரிப்போர் செயலானது, குருடனைக் குருடன் வழி நடத்துவது போலாகும்.

அவைக்களத்திற் சொல்லுதற்குரிய வரம்பினமைந்த ஆங்கிலமொழியினை வேந்தன் மொழி (King's English) என அம் மொழிப்புலவர் விதந்து கூறுவர். அப்பரிசே யாமும் அவைக்களத்திற் செல்லுதற்குரிய வரம்பி னமைந்த தமிழினைப் "பாண்டியன் தமிழ்" என்போம். எது தமிழ் என விழைவார்க்கு பாண்டியன் தமிழே தமிழ் என்பது விடையாகும். அதுவே நிலைபேறுடையது; அறிஞர் போற்றற்குரியது. பொருள்வருவாய் ஒன் றினையே கருதி மனம் போனவாறு மரபுதவறி எழுதும் மொழிவழக்கானது மழைக்காலத்திலே தோன்றி அக் காலங்கழிய மறைந்து போகின்ற சிறுபூடுகளைப்போல

நிலைபேறில்லாதது. நிலைபேறுடைய உண்மை (Truth) அழகு (Beauty) செம்மை (Goodness) என்னும் இவை தம்மையே அறிஞரது உள்ளம் அவாவி நிற்கும். முத் தமிழுள் இயற்றமிழானது உண்மையினையும், இசைத் தமிழானது அழகினையும், நாடகத்தமிழானது செம்மை யினையும் சிறப்புற வெளிப்படுத்திக் காட்டுவன. பேருண் மையும், பேரழகும், வரம்பு கடந்த செம்மையும், இறை வனுக்குரிய குணங்களாகச் சமயநூல்களாற் கூறப் பட்டன. இவை தம்மை வெளியிட்டுரைக்கும் ஆற்றல் உடைமையினாலேதான் தமிழ்மொழிகள் தெய்வத் தன்மையுடையனவாகக் கருதப்பட்டன.

## கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் நட்பு

தமிழ்மொழியைப் பேணிவளர்க்க வேண்டுமென்ற நோக்கத்தோடுதான், முன்னாளில் முதல், இடை, கடைச் சங்கங்கள் தோன்றின. ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னர் சங்கம் நன்றாக இருந்தது. அக்காலை யில்தான் அரும்பெரும் நூல்களெல்லாம் தோன்றின. தமிழ்மொழியும் பலவகைச் சிறப்புகளைப் பெற்று மேலோங் கியது.

> சிறைவான் புனல்தில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும்
> உறைவா னுயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் தீந்தமிழின்
> துறைவாய் நுழைந்தனையோ வன்றி யேழிசைச் சூழல்புக்கோ
> இறைவா தடவரைத் தோட்கென் கொலாம்புகுந் தெய்தியதே.

என்னும் கவிதையினால் தமிழ்ச்சங்கத்தைபற்றி இனிது அறிய ஏதுவாகிறது. தமிழகத்தையே தன்னகத்தே கொண்டதாக முதல், இடை, கடைச் சங்கங்கள் திகழ்ந் தன. புலவர்கள் சங்கங்களை அழகு செய்தார்கள். தமிழ் மொழியையும் அழகுசெய்தார்கள். ஆதலினால்தான்

சங்கத்தமிழ் என்ற சிறப்புப்பெயரைத் தமிழ்மொழிபெற முடிந்தது.

உலகத்திலே சங்கங்களில் ஆராயப்பட்ட மொழி, தமிழ்மொழி ஒன்றேயாகும். சங்கத்தமிழ் என்று சொல்வதுபோல், சங்கத் தெலுங்கு, சங்க ஆங்கிலம், சங்க இந்தி என்று யாருமே சொல்வதில்லை. ஆதலினால் தமிழ்மொழியின் சிறப்பு எத்துணை பரந்ததென்பதற் கையமின்று. அக்காலையில் விளங்கிய தமிழ்ஆராய்ச்சிச் சங்கங்கள்போல் இந்நாட்களில் இல்லை. என்றாலும் தமிழ் மொழியை அழகுபடுத்த வேண்டுமுகத்தால் மதுரையிலே ஓர் தமிழ்ச்சங்கமும், திருநெல்வேலியிலே தென்இந்திய தமிழ்ச்சங்கமும், கரந்தையிலே ஒரு தமிழ்ச்சங்கமும் நிறுவப்பட்டுள்ளன. அரும்பெரும் புலவர்கள், அறிஞர் கள் ஒன்றுகூடி நூல்ஆராய்ச்சி செய்யவும், புதுநூல்களை எழுதவும், ஏனையவர்களின் நூல்களைச் சீர்தூக்கிப் பார்க்க வும் ஓர் சங்கம் தமிழகத்திற்கு இன்றியமையாததாகும். இக்குறையை இனிமேலாதல் தமிழகம் உணர்ந்து கொள்ளுமாக.

மதுரை, திருநெல்வேலி, கரந்தை ஆகிய இடங்களில், வளர்ந்துவரும் சங்கங்களும் தமிழ்மொழிக்கு அரும் பெரும் பணிகள் புரிகின்றன. ஒவ்வொரு சங்கமும், சங்கத்தின் வாயிலாக செந்தமிழ் நடையிலே, தனித் தமிழ் நடையிலே, திங்கள்தோறும் செய்தித்தாள்களை வெளியிடுகின்றன; ஆண்டுகள்தோறும் மாநாடுகளை நடத்துகின்றன; அந்த வகையிலே கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் இருபத்திரண்டாவது ஆண்டுநிறைவை மாநாடாக நடாத்தத் தீர்மானித்தனர்; முத்தமிழ் விரவிய இம் மாநாட்டிற்குத் தலைமைதாங்கிச் சிறப்பிக்கும்படி

அடிகளை வேண்டினர்கள். அடிகளும் அதற்கிணங்கி 1933-ம் ஆண்டு நடைபெற்ற மாநாட்டிற்குத் தலைமை தாங்கினர். இதன் பயனுக அடிகளுக்குக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் நட்பு ஏற்படலாயிற்று. தமிழ்ச் சங்கச்சார்பில் திங்கள் இதழான 'தமிழ்ப்பொழி'லுக்கு அடிகளைக் கட்டுரைகள் தந்துதவுமாறு கேட்டுக்கொண்டனர். அடிகளும் இடையிடையே பல தமிழ்ஆராய்ச்சிக் கட்டுரைகளினுல் தமிழ்ப்பொழிலை அழகுபடுத்தினர்.

## சைவசித்தாந்த மகாசமாசத் தலைமை

சமயம் உடலுக்கு உயிர்போன்றது; உயிர் இல்லாவிடத்து உடல் எவ்வாறு இயங்கும்? ஆதலினுல் மக்களின் வாழ்க்கைநெறியில் சமயம் இன்றியமையாததாகிறது. மனிதனுடைய வல்லமைகள், எண்ணங்கள் முதலியனவற்றை ஆராய்ச்சியாளர்கள் ஆராய்கின்றனர். ஆனல் அவர்கள் மனேநிலையை ஓரளவு கண்ட போதிலும் அதன் உயிர் நிலையை (Super Levels of Consciousness) அறியமாட்டாதிருக்கிருர்கள். இத்தகைய நிலையை அடைய வேண்டுமானுல் சமயத்திற்குச் செல்லவேண்டும்.

ஒருவர் மனத்தின் நுண்ணிய உயிர்நிலைகளையடைந்தே ஆங்கு நின்று சமய அனுபவத்தை உண்மையாக அனுபவிக்க முடியும். இத்தகைய உயரிய நிலையை எய்திய ஞானிகள் தாம்பெற்ற இன்பத்தைத் தாங்கள் அனுபவித்த வண்ணம் கூறி இருக்கிருர்கள். அவர்கள் நமக்கு விட்டுச் சென்ற பாடல்கள் மூலமாக இவைகளை இன்றும் காணக்கூடியதாக இருக்கிறது. நாம் இவைகளிலிருந்து சமயவாயிலாகப் பேரானந்தப் பெருவாழ்வைக் காண்கிறேம். மேலும் கடவுள் ஒருவர் உண்டென்றும் அவரே இவ்வுலகை ஆக்கிக் காத்து வருகிருரென்றும்

காண்கிறோம். இறைவன் கட்புலனுக்குப் படாதவனாக இருந்தாலும் தன் அடியார்களிடம் வைத்த அன்பினால் வெளிப்பட்டு நேரே காட்சி கொடுத்திருக்கிறான். இதனை மாணிக்கவாசகப் பெருமான்,

"சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியும் இல்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி."

என்று திருவாசக மூலமாகத் தருகிறார்; இவ்வாறாக இன்னும் பல ஞானியர்கள் இறைவனின் திருக்கோலத் தைக் கண்டு வியந்து பாடி இருக்கிறார்கள். நம் சைவ சமயத்தில் எத்தனையோ ஞானிகளின் குறிப்புகளும், பாடல்களும், இருக்கின்றன. சைவசமயத்தை வளர்ப்ப தற்காக எவ்வளவோ தொண்டாற்றினார்களென்பதைப் பழைய நூல்கள் பகர்கின்றன. காலம் ஒரேநிலையில் இருந்தால் நன்று. அதன் விரைந்த ஓட்டத்திலே வாழ்க்கை யில் மாற்றம் நிகழ்கின்றன. அதன் பயனாகப் பல சமயங் கள் இன்று தமிழகத்தில் நிலவக் காண்கிறோம்; ஒவ் வொருவரும் தம்தம் சமயத்தையே வளர்க்கப் பாடுபடு வதைக் காண்கிறோம்.

தனிப்பெருஞ் சிறப்புக்கொண்ட சைவசமயமானது வேற்றுநாட்டாரின் (ஐரோப்பியர்) மதங்களினால் சீர் குலையலாயிற்று. பொருளாசையில் மயங்கி, அறிவைச் சிதறவிட்டு மதம் மாறியதை வரலாற்று ஏடுகள் உரைக் கின்றன. சைவத்திற்குக் கெடுதல் ஏற்பட்டால் சைவர்

கள் வாளா இருப்பார்களா? தம் சமயத்தை நிலைநாட்ட முயன்றனர்; சைவசமய நெறிகளை ஓதுவிப்பாரானார்கள்; தமிழ்மொழியின் சிறப்பையும், தமிழரின் சமயத்தையும் உணர்த்தலானார்கள்; அதன் வாயிலாகத்தான் தென் இந்தியாவில் சைவசித்தாந்த மகாசமாசம் நிறுவப்பட்டு அது இன்று வரையும் மொழிக்கும், தமிழிற்கும் தொண்டாற்றி வருகிறது.

1935-ம் ஆண்டு மார்கழித் திங்கள் சைவசித்தாந்த மகாசமாச ஆண்டுவிழாவினை நடத்தத் திருவண்ணாமலையில் முயற்சி செய்யலாயிற்று. ஆண்டுவிழாவிற்குத் தலைமை தாங்க அடிகள் அழைக்கப்பட்டார். அடிகள் திருவண்ணாமலையின் எல்லையை அடைந்தவுடன் மக்கள் மலர்மாலை சூட்டி ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். இவ்விழாவில் கலந்து கொள்ளத் தாயகத்திலிருந்து சிறப்புடையாரும் பேச்சாளர்களும் வந்திருந்தார்கள். அன்னார் அடிகளாரை வரவேற்ற ஊர்வலத்தைக்கண்டு திருவண்ணாமலையே திரண்டு வந்துவிட்டதென்று போற்றிப் புகழ்ந்தார்கள். அடிகள் விழாவிற்கு தலைமை தாங்கித் தலைமை உரை வழங்கினார்.

## தமிழ் ஆராய்வுக்குழு உறுப்பினர்

அடிகள் பண்டைய மக்களின் யாழின்முறையைக் கண்டுபிடிப்பதிலே மிக்க காலத்தைச் செலவிட்டார்; புதிது புதிதாகக் கண்டவைகளை நூலிற்குத் துணையாகத் தொகுக்கலானார்; அவைகளிற் சிலவற்றை யாழ்ப்பாணன், தமிழிசை, சிலப்பதிகார அரங்கேற்றுகாதை, ஏழாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னரும் இருந்த தமிழிசை, பழந்தமிழகத்தின் சிற்பாசாரிகள், பரிசவேதி என்னும் முகவுரையின் கீழ் 1936-ம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்

கழகத்தில் விரிவுரைகள் நிகழ்த்தினர். இவ்விரிவுரைகளைப் பல்கலைக்கழக மாணவர்களுடன் பல அறிஞர்களும் கேட்டார்கள். அடிகளின் ஆராய்ச்சியைப் பாராட்டினர்கள். "நீங்கள் பழந்தமிழரின் யாழைக் கொண்டுவந்து விடுவீர்கள்," என்று பலர் அன்புரை கூறினர்கள். இக்காலையிற்றான் சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ஆராய்வுக்குழுவில் அடிகளும் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்.

அடிகள் தமிழ்ஆராய்ச்சி செய்ததுடன் கருநாடக இசையையும் ஆராயலானர். இசையின்இனிமையை யாழ் தானே அள்ளிஅள்ளிச் சொரிகிறது. ஆதலினல் யாழிற்குத் துணையான இசையை முறையாக ஆராயலானர். குறுகியகாலத்தினுள் திறம்பட ஆராய்ந்து பல முடிவுகளைக் கணித்துக்கொண்டார்.

## சொல்லாக்கக் கழகப் பொதுத்தலைவர்

1934-ம் ஆண்டு சென்னைத் தமிழரின் முதலாவது மாநாடு சென்னையிலே தொடங்கியது. இம் மாநாட்டில் கலைச்சொற்களை உருவாக்கி நூலாக்கவேண்டுமென்று ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. விஞ்ஞானக்கலையைத் தமிழர்கட்குத் தமிழ்மொழியிலே அளிப்பதற்கு தமிழ்ச் சொற்களில்லை. விஞ்ஞானச்சொற்கட்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைப் பலரும், பலவாருக ஆக்கினர்கள். ஆதலினல் கலைச்சொற்கள் ஓர் மணிப்பிரவாளமாக இருந்தது. இக் குறையைப் போக்கத்தான் சொல்லாக்கக் கழகம் ஒன்றை நிறுவி அதில் பல அறிஞர்களைச் சேர்த்துச் சிறந்த கலைச் சொற்களை ஆக்கவேண்டுமென்று சென்னை மாநாடு முடிவு செய்தது. அதன்பயனகச் சென்னையிலே "சொல்லாக்கக் கழகம்" என்ற நிலையம் ஏற்படுத்தப்பட்டது. இக்கழகத்தில் பல அறிஞர்கள் ஒன்றுகூடிக் கலைச்சொற்களை ஆக்கி

ளுர்கள். இக்காலையில் அடிகள் சொல்லாக்கக் கழகத்தில் பணிபுரிபவர்களுக்குப் பயன்படும்படியும், தமிழர்கட்கு உறுதுணை புரியும்படியும் பல கட்டுரைகளை வெளியிட்டதுடன், சொல்லாக்கக் கழகத்திலே விரிவுரையும் நிகழ்த்திஞர். மேலும் சிறந்த கலைச்சொற்களை ஆக்குவதற்கும் பணிபுரிந்தார்.

1936-ம் ஆண்டு சென்னை பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் தமிழ்க்கலைச்சொல்லாக்க மாநாடு தொடக்கமாகியது. இம்மாநாடு சொல்லாக்கக்கழகம் உருவாக்கிய கலைச்சொற்களை ஆராய்ந்து முடிவுகட்டுவதற்காகக் கூட்டப்பட்டது. தமிழ்க்கலைச் சொல்லாக்க மாநாட்டை திருவாங்கூர் சர் சி. பி. இராமசாமி ஐயர் திறந்துவைத்தார். மாநாட்டின் பொதுத்தலைவராக அடிகள் தலைமை தாங்கிஞர். அவரின் தலைமையிலே ஆக்கப்பட்ட கலைச்சொற்கள் தேர்வுக்கு எடுக்கப்பட்டன. வேண்டாதனவற்றை விடுத்துப் புதிய சொற்கள் சேர்க்கப்பட்டன. இதன் பயனுகத்தான் தற்போது சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம், கலைச்சொற்கள் என்ற நூலைத் தமிழகத்திற் களிக்க முடிந்தது.

தமிழ்மொழியிலே கலைச்சொற்கள் பிறப்பதற்கு மிகத் தொண்டாற்றிய உரிமை அடிகளுக்குரியதாகும். வளர்ந்துகொண்டு வரும் விஞ்ஞானத்தை, வளர்ந்து வரும் தமிழும் ஏற்கவேண்டியதாகிறது. ஆதலிஞல் ஆக்கப்பட்ட கலைச்சொற்கள் போதுமானதென்றிருக்க முடியாது. மேலும் மேலும் புதுக்கலைச் சொற்களை ஆக்கவேண்டி வந்துகொண்டே யிருக்கிறது. ஆதலிஞல் அப்பணியில் ஈடுபடுபவர்கட்கு அடிகள் நிகழ்த்திய கலைச்சொல்லாக்கச் சொற்பொழிவுகள் பெரிதும் வழிகாட்டியாக இருக்குமென்பது வெள்ளிடைமலை.

## கைலாய தரிசனம்

[1]இமாலயத்தில் கௌரீசங்கரசிகரத்தை எட்டிவிட்டால் உலகத்தின் முடிவை எட்டிவிட்டாரென்பது பொருள். இச்சிகரத்தை முதன்முதல் கண்டு பிடித்த மனிதன் ராதாகிருஷ்ணன் என்னும் இந்தியனே. இதன் உயரம் மூன்று மைல்கள். கண்கவரும் இயற்கைக் காட்சிகளும் புராண இதிகாசங்களை ஆதாரமாகக் கொண்ட புண்ணியத் தலங்களும் இதைச்சுற்றிலும் இருக்கின்றன.

பதரிநாத் என்னும் க்ஷேத்திரத்தைப் பற்றிக் கேள்விப்படாத இந்தியர் இருக்கமுடியாது. பதரிநாத் மலைச் சிகரத்தின் உயரம் 23210 அடி. இதன் உச்சிக்கு யாரும் போனதில்லை. வழியில் 10400 அடி உயரத்தில் ஒரு விஷ்ணு கோயில் இருக்கிறது இங்கே பதரிநாதர் எழுந்தருளி யிருக்கிறார். இந்தக் கோவில் ஸ்ரீநகரம் என்னும் பள்ளத்தாக்கில் ஸ்ரீநகருக்குப் போகும் வழியில் இருக்கிறது. இது புண்ணிய க்ஷேத்திரம் மட்டுமல்ல, அரசியல் முக்கியத்துவமும் பெற்றது. இதற்கப்புறம் இரண்டுமைல் தூரத்தில் நம் நாட்டின் எல்லை முடிந்து விடுகிறது. இந்தியாவும் சீனமும் சந்திக்கும் இடத்தில் பதரிநாத் இருக்கிறது. பௌத்தர்களாகிய சீனர்களுக்கும் இது யாத்திரைத்தலமாக விளங்குகிறது. பதரிநாதர் கோயிலை ஆக்கியவர் ஆதி சங்கராசாரியர். பனிக்காற்றின் மோதலினால் இந்தப் பழைய கோயில் இடிந்துவிட்டது. பிற்காலத்தில் இந்தக் காலக் கோவில்போல் இதைக் கட்டி இருக்கிறார்கள். இங்கே விஷ்ணு பாதத்திலிருந்து பீஷ்மகங்கையும், அதன்

1. மலைகளிற் பெரியது என்ற தலையங்கத்தில் 'மஞ்சரி' மார்ச் 53 இதழில் வெளியான கட்டுரை. எழுதியவர் கே. எ., மூலம் பிரஜாமத (கன்னடம்) பெங்களூர்.

துணை நதிகளும் தோன்றிப் பெருகுகின்றன. இவை அலக நந்தாநதியில் சேருகின்றன. கோயிலின் பக்கத்தில் ஒரு புஷ்கரணி இருக்கிறது. இதில் முழுகிப் பதரிநாதரைச் சேவிப்பது மிக விசேடமென்று பக்தர்கள் கருதுகிறார் கள். பொன் ஏனங்களிலே நாள்தோறும் பதரிநாதர்க்கு நைவேத்தியம் செய்கிறார்கள்.

இந்தக் கோயிலின் அருகே ஜோஷிமடம் இருக்கிறது. இது சிருங்கேரி சாரதா பீடத்தின் கிளையே. பதரிநாதர் கோயில் இந்த மடத்தைச் சேர்ந்தது. இன்றுஞ்சரி பதரீ நாதர் கோயிலுக்குத் தென்னாட்டினரே அர்ச்சகர்களாய் இருக்கிறார்கள். இவர்கள் மலையாளத்து நம்பூதரிகள். பூசைமுறைகள் எல்லாந் தென்னாட்டு வழக்கப்படியே இங்கு சிறப்பாக நடைபெறுகின்றன.

இந்தக் கோயிலுக்குப் போவது மிகக் கடினம். கடின மானவழி; உடம்பை மரத்துப் போகச் செய்யும் குளிர்; நாலடி நடந்தால் உட்கார வேண்டியிருக்கும்; ஆனால் சுற்றிலும் உள்ள இன்பமான இயற்கைக்காட்சி ஒரே நொடியில் களைப்பை மாற்றிவிடும்.

பதரிநாத்துக்குப் போகுமுன் ஜன்மோத்ரி, கங் கேத்திரி, கேதார்நாத் ஆகிய மூன்று புனிதத்தலங்களை யும் தரிசிப்பது முறை. பதரிநாத்தை விட உயரம் கேதார நாத். ஆனால் முதலில் கேதாரநாத் தரிசனம் பெற்றுப் பிறகு பதரிநாத்துக்கு வருதலே மிகப் புண்ணியம் என் கிறார்கள்.

ஜோஷி மடத்துக்கும் பதரிநாத்துக்கும் இடையே தபோவனமும் ரிஷிகேசமும் இருக்கின்றன. இங்கே கீழ்ப் பகுதியில் பெருமை வாய்ந்த முனிவர்கள் இருக்கிறார்க ளாம். பத்திரிகாசிரமம் பத்தாம் நூற்றாண்டு முதல் புகழ்

பெற்றது. த்போவனத்துக்கும் பதரிகாசிரமத்துக்கும் இடையில் கணக்கற்ற கோயில்கலைக் காணலாம். வழியில் அளகாநதி ஓடுகிறது. இங்கே உள்ள கோயில்களின் விக்கிரகங்களெல்லாம் மூளியாக இருக்கின்றன. இங்கிருந்து மூன்றுகல் தொலையில் கோபேசுவரர் கோயில். கேதாரநாதரைத் தரிசித்தால் கோபேசுவரரைப் பார்க்க வேண்டியதில்லை. ஒரே அச்சு; ஆனால் கோபேசுவரர் பின்னமாய் விட்டார். இங்கே இருந்து சிறிதுதூரம் முன்னேக்கிச் சென்றால் விஷ்ணுப்பிரயாகை இருக்கிறது. சுவேதகங்கை, அளகநந்தா, சரசுவதி ஆகிய மூன்று நதிகளும் இங்கே ஒன்று சேருகின்றன. பாகீரதிநதியும் இந்த இடத்துக்கு அருகிலேயே கங்கையுடன் சேருகிறது. விஷ்ணுப் பிரயாகையைச் சுற்றிலும் பெரிய பெரிய காடுகள் இருக்கின்றன. இதனால்தானே என்னவோ இந்த இடத்துக்குக் கோயில்களுக்குள் யவனர்கள் புகவில்லை. தேவஸ்தானங்கள் விக்கிரகங்கள் எல்லாம் பூரணமாய் இருக்கின்றன.

பதரிகாசிரமத்திலிருந்து இறங்கிவரும் வழியில் 6000 அடி உயரத்தில் புராதனமான கோயில்கள் காணப்படுகின்றன. அவற்றில் பாண்டுகேசுவரர் கோயிலும் ஒன்று. அவை கிரேக்கபாணியில் அமைந்திருக்கின்றன.

ஹனுமான்சட்டி என்னுமிடத்திலிருந்து ஒரு கல் தூரத்திலே பதரிநாதர் கோயில் தெரிகிறது. அண்மைக் காலத்தில் அலகநந்தா நதிக்கரையில் கிடைத்த புத்த விக்கிரகம் ஒன்றையும் பதரிநாதர் கோயிலில் நிறுவியிருக்கிறார்கள். அதனால் இந்தத்தலம் இந்து பௌத்தம் இருசமயத்தாருக்கும் யாத்திரைத்தலமாக விளங்குகிறது. பலருக்கொரு புண்ணியத்தலமாக விளங்கும் இமயத்தின் பகுதி

யில் பதரிகாசிரமத்தில் கால் வைக்கவும் பாபியும் சாது ஆவான். சூழ்நிலை அப்படிப்பட்டது. பதரிகாசிரமத்தில் கண்ணனுடைய விக்கிரகத்துக்கருகே உத்தவர் என்ற பக்தரின் விக்கிரகமும் இருக்கிறது.

பதரிகேதார்நாத் தலங்களுக்கு முன்வாயில் ஹரித்வாரம். இதற்கு மூன்று கல் தூரத்தில் கனகலதீர்த்தம் என்ற தலம் இருக்கிறது. இது தட்சவேள்வி நடந்த இடம். தாட்சாயணி யாக குண்டத்தில் குதித்த இடம். இதை சதீகுண்டம் என்கிறார்கள். இங்கிருந்து 30 கல்லில் ரிஷிகேசம் இருக்கிறது. புனிதத்தன்மையினாலும், இயற்கை வனப்பினாலும் மற்ற எந்த இடத்தையும் மிஞ்சும். இந்த இடத்தில் பல முனிவர் தவ இருக்கை அமைத்துக் கொண்டார்கள்.

ரிஷிகேசத்தில் நான்குதோள் லக்ஷ்மீ நாராயண மூர்த்தி எழுந்தருளி இருக்கும். இதற்கப்புறம் கங்கைக் கரையோரத்தில் அடிக்கொன்றுவீதம் பல தலங்கள் இருக்கின்றன. கமலேசுவர தலத்தில் ஸ்ரீராமர் வசித்த பொழுது கமலேசுவர லிங்கத்தை நிறுவினாராம். இன்னும் முன்னேறினால் கர்ணப் பிரயாகையைக் காணலாம். இங்கே கர்ணன் தவம் செய்ததாகச் சொல்லுகிறார்கள்.

பதரிநாத்தில் விருத்தபதரி, ஆதிபதரி, த்யானபதரி, பவிஷயபதரி, யோகபதரி, விசாலபதரி என்ற ஆறு கோயில்கள் இருக்கின்றன. கடைசியில் இருக்கும் விசால பதரியே புகழ் பெற்ற பதரிநாத தேவாலயம். ஆறுமாதம் பனி மூடிவிடுவதால் மற்ற ஆறுமாதங்களில் மட்டுமே பூசை நடக்கிறது.

கைலாசத்துக்கும், மானஸ சரோவரத்துக்கும் போகிறவர்கள் இதற்கப்புறம் வேறு வழியில் போகவேண்டும்.

ஜோஷிமடத்துக்கு அரைக்கல் தூரத்தில் ராமாநுஜா சாரியர் கட்டிய மடம் இருக்கிறது.

பதரி நாராயண விக்கிரகம் லக்ஷ்மியுடன் சேர்ந்து இருக்கிறது. இதன் உயரம் ஒரு அடி. சிம்மாசனத்தின் மேல் அமர்ந்திருக்கிற பாவனையிலுள்ள இந்த நான்கு தோள் மூர்த்திக்குச் சாத்தியிருக்கும் நவரத்தினாபரணங் களையும், விலைமதிப்பற்ற கிரீட ஹாரங்களையும், வேறு எந்த மகாராஜாக்களிடமும் காணமுடியாது. சர்வாபிஷேக அலங்காரம் மங்களாரத்தி முதலிய விசேஷங்கள் இந்த பதரிநாத மூல விக்கிரகத்துக்கு மட்டுமே நடக்கின்றன.

ரிஷீகேசத்துக்குச் சுமார் மூன்றரைக் கல் தூரத்தில் லக்ஷ்மண ஜூலா இருக்கிறது. இது லக்ஷ்மணர் தவம் செய்த இடமாம். மிக மனோகரமான பள்ளத்தாக்கு. மிக உயர்ந்த மலைகளின் இடையில் நெருக்கமான பள்ளத்தில் மிக நெருக்கடியுடன் இங்கே கங்கை ஓடுகிறது.

இங்கே லக்ஷ்மணர் ஆலயம் இருக்கிறது. முக்தியை விரும்புகிறவர்கள் இங்கே கங்கையில் குதித்து உயிரை விடுகிறார்கள்.

ஹரித்துவாரத்துக்குப் புராணகாலத்தில் மாயாவதி என்று பெயர். கேதார்நாத்துக்கு இது திட்டி வாசல். இந்தக் கோயிலையும் பனி காரணமாக ஆண்டில் ஆறேழு திங்களே திறந்திருப்பார்கள்.

கேதார்நாத்தின் வடபகுதியைப் புராணகாலத்தில் கேதாரகாண்டம் என்று சொல்லுவார்கள். பதரிகாசிரமக் கோயில்களைப்போல் இங்கும் ஐந்து கேதாரநாதர் கோயில் கள் இருக்கின்றன. கேதாரநாதர், மத்திய மகேசுவரர், துங்கநாதர், ருத்திரநாதர், கல்பேசுரர் என்பவைகள் ஐந்து

மூர்த்திகளின் பெயர். நாரதசிலா, நரசிம்மசிலா, வராக சிலா, கணேசசிலா, குபேரசிலா, மற்றும் தேவப்பிரயாகை, கர்ணப்பிரயாகை, விஷ்ணுப் பிரயாகை, இவற்றின் நடுவில் கேதார், பதரிநாதர்கள் கோயில்கள் கொண்டிருக்கிறார்கள்.

கைலாசம், மானசசரோவரம், கந்தமாதன மலைத் தொகுதிகளுக்கிடையில் அமைந்த இந்தப்பிரதேசம் இவை யெல்லாம் ஆரியர் நாகரிகத்துக்குப் பிறப்பிடமாய்த் திகழ் கின்றன. புராண தேவாலயங்களும், புண்ணிய க்ஷேத்தி ரங்களும் இதற்குச்சான்றாக இருக்கின்றன. இதற்கப்புறம் வெளுத்த பாகீரதி நதியும், கறுத்த அலகாநதியும் ஒன்று சேரும் காட்சி மிக வியப்பானது.

இதற்குப்பின் தேவப்பிரயாகை இருக்கிறது. ராவணனைக் கொன்றபின் இராமன் இங்கே தவஞ்செய்ததாக ஐதீகம். மலைகளின் இடையில் மனதைக் கவரும் முறை யில் இராமர் கோயில் அமைந்திருக்கிறது. பிறகு பாகீரதி யும், யமுனையும் தோன்றுமிடம் 1500. அடி உயரத்தில் இருக்கிறது. பாகீரதியுடன் ஜானவியும் சடை கங்கையும் சேருகின்றன. இந்தக் காட்சியை கண்டவர்கள் இதை மறக்கமுடியாது.

பின்பு ஜனகாசிரமும் கமலேசுவரர் கோயிலும் இருக் கின்றன. இந்தக் கோயிலை ஆதிசங்கரரின் மாணவராகிய பத்மப்பிரபர் கட்டினாராம். மந்தாகினியும், அலகநந்தா வும் இங்கே கூடுகின்றன. இதற்கருகில் அகஸ்தியாசிரமம் இருக்கிறது. இங்கிருந்து கேதார்நாத்துக்குப் போகும் வழியில் குப்தகாசியும், உத்தரகாசியும் இருக்கின்றன. சந்திரசேகரர், அர்த்தநாரீசுவரர் கோயில்களும், புகழ் பெற்ற காளிகோயிலும் அருகே இருக்கின்றன. காளி கோயிலில் துர்க்கை, இலக்குமி, சரசுவதி ஆகியோரின் அழகிய வடிவங்கள் இருக்கின்றன.

நாராயணகோடி என்னுமிடத்தில் அழகிய லட்சுமி நாராயணரைக் காணலாம். கேதாரநாதர் கோயிலுக்கு ஏழுகல் தூரத்தில் கௌரிகுண்டம் இருக்கிறது. மலைமகள் சிவபெருமானை மணந்த இடம். பிரமா புரோகிதர். இங்கே ஓர் அக்கினிக்குண்டம் இருக்கிறது. பார்வதி கல்யாணத்தன்று எரியத்தொடங்கிய புனித நெருப்பு இன்றும் இங்கே எரிந்துகொண்டிருப்பதாக ஐதீகம்.

இங்கே கணக்கற்ற வெந்நீர் ஊற்றுக்கள் இருக்கின்றன. குளிரில் இதில் நீராடுவது மிக இன்பமாக இருக்கும். இங்கிருந்து கேதார்நாத்துக்குப் போகும்வழி பனி மூடிப் பளிங்குத் தரைபோல் இருக்கும். ஆனால் அடிமேல் அடி வைத்து நடக்கவேண்டும்.

சுற்றிலும் பனிமூடிய நூற்றுக்கான சிகரங்கள். நாற்புறமும் அழகிய பள்ளத்தாக்குகள். சூரிய வெளிச்சம். கணக்கற்ற நீர்வீழ்ச்சிகள். அருவிகளும் நதிகளும் அப்படியே. தேவதாரு மரங்களின் கம்மென்ற வாசனை. ஒரே பனி மயம். காலின் கீழே நீரோட்டம். இவற்றையெல்லாம் பார்க்கும்போது மனிதன் அணுமாத்திரமென்று தோன்றும். கேதாரநாதர் கோயிலின் அருகே நின்று கவனித்தால் 23000 அடி உயரமுள்ள சிகரம் தென்படும். அதில் ஒருபுறம் மந்தாகினி நீர்வீழ்ச்சி. இது கங்கையைச் சிரத்திலணிந்த சிவபெருமானைப் போலவே தோன்றுகிறது. இந்த நீர்வீழ்ச்சியில் ஒரு குகையில் பிரம்மா தவம் செய்ததாகச் சொல்லுவார்கள். இன்னொருபுறம் மகா பந்தம் என்றவழி.

பாண்டவர்கள் உயிருடன் சுவர்க்கம் போக எண்ணி இந்த வழியிலேயே போனார்களாம். ஆதிசங்கரர் தம் 32-ம் வயதில் இந்த வழியாகவே சொர்க்கம் போனதாகத்

தெரிகிறது. கேதாரநாத்திலிருந்து பதரிநாத்துக்குக் காட்டுமார்க்கமாகப்போனால் 22 கல்தான். முன்காலத்தில் காலையில் கேதாரநாதருக்குப் பூசைசெய்த அர்ச்சகர்களே மாலையில் பதரிநாதருக்கு இந்த வழியாகப் போய்ப் பூசை செய்வார்களாம். சுற்றுவழி 101 கல் தொலை.

இந்தக் கோயிலுக்கு மேலே இயற்கை அன்னையின் கோயில் இருக்கிறதாம். சிவபெருமான் இங்கே எருமையின்மேல் அமர்ந்திருக்கிறாராம். பதரிநாத்தில் நடப்பது போல் இங்கே பூசை நடப்பதில்லை. யாத்திரிகர்களே பூசை செய்யலாம்.

இங்கிருந்து பதரிநாத்துக்கு வரும் வழியில் நின்று பார்த்தால் கேதாரநாத், பதரிநாத், கங்கோத்ரி, திரிசூலம், துரோணாசலம், நந்தாதேவி ஆகியவற்றின் சிகரங்களைக் காணலாம்.

இங்கே ஒருபுறம் இராவணன் தவஞ்செய்த இடம். மற்றொருபுறம் ஹரிஹரர் கோயில்; சற்றுக் கீழே வந்தால் கோபேசுவரத்தைக் காணலாம். இங்கே அடர்ந்த காட்டையும், வியப்பான பறவைகளையும், விலங்குகளையும் காணலாம்.

கோபேசுவரத்தில் கோபிநாதர் கோயிலும், ஈசுவரர் கோயிலும் இருக்கின்றன. இங்கே புகழ்பெற்ற பரசுராமருடைய கோடரி இன்னும் இருக்கிறது. இதன்கனந்தான் எவ்வளவு! இந்தக்காலத்து மனிதர் குறைந்தது 15 பேராவது சேர்ந்தால்தான் இதைத் தூக்க முடியும்.

கீழே இறங்கிவந்தால் கருட கங்கை இருக்கிறது. இங்கே கருடன் மகாவிஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்தானாம். இங்கிருக்கும் குளத்தில் நீராடி அதிலிருந்து

கல் எடுத்துவருவது யாத்திரிகர்கள் வழக்கம். இந்தக் கல் இருக்குமிடத்தில் தேள், பாம்பு முதலிய நச்சுயிர்கள் அணுகமாட்டா என்று சொல்லுகிறார்கள். இன்னும் கீழே வந்தால் ஜோஷி மடம்; இதை ஜோதிர்மடம் என்பதும் உண்டு. இங்கே நரசிம்மசாளிக்கிராமத்தைச் சங்கரர் நிறுவியிருக்கிறார். இதற்குச் சிறிது தூரத்தில் ஓர் அரசமரம் இருக்கிறது. வயது 1000 ஆண்டாம்; அதற்கருகே இருக்கும் குகையில் சங்கரர் தவம் செய்தாராம். அந்த மடம் சங்கரர் கட்டிய நான்கு மடங்களிலொன்று.

புண்ணியத்தலங்கள் நிறைந்த இமாலயத்தில் பார்த்த இடத்திலெல்லாம் நம் முன்னோருடைய நாகரிகத்தின் அடிச்சுவடு நிறைந்திருக்கிறது.

இக்கட்டுரையினால் கௌரிசங்கர (மௌண்ட் எவரெஸ்ட்) என்று போற்றப்படும் புண்ணிய பூமியின் மகத்துவம் தெள்ளிதிற் புலனாகிறது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள கைலாயத்தைத்தான் அன்றும் இன்றும் சைவ சமயத்தவர்கள் இறைவனின் இருப்பிடமாகக் கொள்ளுகிறார்கள். இதற்குப் போதிய சான்றுகள் நம் ஆகமங்களில் இருக்கின்றன. 'கைலாயதரிசனம் மனிதர்களுக்கு இலகுவில் கிட்டுவது அரிது. அப்படிக் கிட்டுவதானாலும் ஊனுடலுடன் செல்வது அருமையினும் அருமை,' என்று நம் முன்னோர்கள் கூறிப்போந்துள்ளார்கள். இத்தகைய கைலாயத்தைச்சுற்றி அடிக்கொன்றாகக் கோயில்கள் திகழ்கின்றன. சுருங்கச்சொன்னால் கைலாயமும், அதற்குச் செல்லும்பாதையும் இயற்கை வனப்புகளினால் சூழப்பட்டு, ஆலயங்களினால் அழகு செய்கின்றன. சிவபெருமான் திருமணம் செய்துகொண்ட இடம் இன்றும் காணக்கூடியதாக இருக்கிறது. இன்னும் பல புராணப்புதுமைகளைக்

கொண்டதாகக் கைலாயம் திகழ்கிறது. இன்றும் கைலாயத்திற்குச் செல்வது இலகுவானதல்ல. மழையினால் தாக்கப்படவேண்டும். குளிரினால் நடுங்கவேண்டும்; புயல் காற்றினால் அவதியுறவேண்டும்; பனிசெறிந்த பயங்கரப் பாதையில் செல்லவேண்டும்; இக் கஷ்டங்களைச் சகித்துக் கொண்டு கைலாய தரிசனம் செய்பவர்கள் சிறந்த பக்திமான் என்பதற்கையமின்று.

ஈழநாட்டிலே முதன்முதலாகக் கைலாய தரிசனம் செய்து வாழ்க்கையை அமரத்துவமாக்கிக்கொண்ட பெருமை அடிகளுக்குரியதாகும். அடிகள் கைலாயத்தைத் தரிசித்ததுடன் நில்லாது திபெத் நாட்டிற்கும் சென்று அங்குள்ள பௌத்த ஆலயங்களையும் தரிசித்தார்.

1937-ம் ஆண்டில் அடிகள் கைலாயமலைவரை சென்று புண்ணியத் தலங்களையெல்லாம் தரிசித்து, புண்ணியப் பெருமை நிறைந்த நதிகளில் நீராடி தமிழகத்திற்குத் திரும்பிச் சென்னைக்கு வந்தார். அடிகளைச் சென்னைப் பல்கலைக் கழகம் வரவேற்று உபசரித்ததுடன் நில்லாமல், தம் தேர்தலதிகாரிகளுள் ஒருவராகவும் சேர்த்துக் கொண்டது.

## இலக்கியச் சுவையிலீடுபடல்

கல்வியென்னும் கொடையை, தன்னலம் கருதாது, விருப்பு வெறுப்பின்றி மக்களினத்திற்கு அளிப்பவர்கள் ஆசிரியர்களாகும். ஆசிரியர்களை முன்னாளில் தெய்வத்திற்கு நிகராக மாணவர்கள் வழிபட்டனர். மக்கள் நன்னெறியில் வளர்வதற்குத் துணை புரியும் ஆசிரியர்கள் எந்நாளும் ஒரே நிலையான முறையில் ஊட்டாமல் மாணவர் தரத்திற்கேற்பவும், உளவளர்ச்சிக்கேற்பவும் கற்பிக்க

வேண்டும். இத்தகை ஆற்றலை நூல்கள் படிப்பதனுல் மட்டும் பெற்றுவிட முடியாது. நூல்களிலே வல்லுநர்க ளான அறிஞர்களுடைய சிறந்த விரிவுரைகளையும் கேட்க வேண்டும். ஆதலினுல்தான் "ஆசிரியர் விடுமுறைக் கழ கங்களை" ஏற்படுத்திச் சிறந்த அறிஞர்களைக்கொண்டு விரி வுரை நிகழ்த்தும் வழக்கம் எங்கும் இருக்கிறது. அதன் பயனுக 1939-ம் ஆண்டு கல்முனையில் ஆசிரியர் விடு முறைக்கழகம் ஒன்று நடந்தது. இக் கழகத்திற்குத் தலைமை தாங்கி "இலக்கியச்சுவை" பற்றி ஓர் விரிவுரை ஆற்றும்படி அடிகளைக் கேட்டுக்கொண்டார்கள். அதற் கிணங்கிய அடிகள் "இலக்கியங் கற்றலும் இலக்கியச் சுவையிலீடுபடலும்" எனும் பொருள்பற்றி செந்தமிழ் நடையிலே ஒரு விரிவுரை ஆற்றினுர். அந்த விரிவுரை 1939-ம் ஆண்டு விடுமுறைக் கழகத்தில் பங்குபற்றுபவர்க ளுக்களித்த இலவச வெளியீடொன்றில் வெளியிடப்பட் டிருந்தது. அதிலிருந்து அடிகளின் சிறந்த விரிவுரை யைக் கீழே தருகிறேன்.

பரந்துபட்ட தமிழ் இலக்கியம் என்னும் பரவையி னுள்ளே, சங்கமிருந்து தமிழாராய்ந்த நல்லியற்புலவர் வகுத்தமைத்த பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும், பதி னெண் கீழ்க்கணக்கு என்பனவும் பின்னரெழுந்த சிந்தா மணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சூளாமணி, நீலகேசி என்பனவும், கொங்குவேண்மாக்கதையும், மூவர் தமிழும், திருவாசகமும், திருக்கோவையாரும், நாலாயிரத்திவ்வி யப்பிரபந்தமும், பெரியபுராணம், இராமாவதாரம், கந்த புராணம், வில்லிபாரதம் என்பனவும், திருவிளையாடற் புராணமிரண்டும், ஆரியப்புலவர் பாகவதமும், காசிகாண் டமும், நைடதமும், இரகுவம்சமும், தேம்பாவாணியும், சீருப்புராணமும், இரட்சணிய யாத்திரிகமும், சிறுபிரபந்

தங்களென நின்றவற்றுள்ளே குமரகுருபரரும், சிவப்பிரகாசரும், மீனாட்சிசுந்தரரும், சுப்பிரமணிய பாரதியாரும் வகுத்தமைத்தனவும் தமிழ்மாணவராலே பயிலப்பட்டுவருகின்றன. இவையாவும் செய்யுள்நடைஇலக்கியங்கள். உரைநடை இலக்கியங்கள் தமிழில் அருகிநடப்பன. நக்கீரனார்கண்ட களவியலுரையும், பரிமேலழகியாரீந்த திருவள்ளுவருரையும், நச்சினார்க்கினியருவந்தளித்த சிந்தாமணிஉரையும், அடியார்க்குநல்லார் வழங்கிய சிலப்பதிகாரவுரையும், பெரியவாச்சான் பிள்ளை உதவிய பிரபந்த உரையும், ஆறுமுகநாவலர் அன்பினோடருளிய பெரிய புராண வசனமும், திருவிளையாடற்புராண வசனம் என்பனவும், இந்நாளிலே தமிழுக்கு வரம்பாகித் தென்றிசைக் கலைச்செல்வர், பெரும்பேராசிரியர், எழுத்தறிபுலவர் என உலகு புகழ நீடுநின்று தமிழ்த்தொண்டாற்றிவரும் சாமிநாதரருளிய மீனாட்சிசுந்தரர் சரிதம், உதயணன் கதை, பௌத்த தர்ம சங்கம் என்பனவும், சிந்தாமணி சிலப்பதிகார மணிமேகலைக் கதைச்சுருக்கங்களும் உரைநடை இலக்கியங்களாகி நிலவுகின்றன.

இலக்கியம் இவையெனக் கண்டோம். இனி இலக்கியச்சுவையாவது யாது? அச்சுவையிலீடுபடுவதற்கு வேண்டிய மனப்பழக்கம் யாது? இலக்கியங் கற்றற்கு இயைந்த கருவிகள் யாவை என்றின்னோரன்ன வினாக்களுக்கெல்லாம் விடையிறுத்தல் வேண்டும். கற்றுவல்ல ஆசிரியர் கழகத்தின் முன்னிலையிலே குறைமொழி உரைப்பினும் சார்புநலம்பற்றி நிறைமொழியாகக் கொள்ளப்படுமென்னுந் துணிவினோடு ஒருசில கூறத்துணிந்தேன். ஆசிரியத் தொழிலுக்கு மனநூற்பயிற்சி இன்றியமையாத சாதனமாகுமன்றோ? ஆதலினால் முதற்கண் மனநூலாருழைச் சென்று அவர் அரிதிற் கண்டுணர்ந்த ஒருசில முடிவுகளைப்

பெறுதல் இன்றியமையாததாயிற்று. மனமானது வெளிப்பட்டு தோன்றுமிடத்து அறிவு, இச்சை, துணிவு என முத்திறப்பட்டு நிற்குமென்பது மனநூலார் கண்ட முடிவு. அறிதல், இச்சித்தல், துணிதல் என்னும் முத்திறச் செயலும் தெளிவு, இனிமை, உறுதி என்னுங் குணங்களை அவாவி நிற்பன. இவை முறையே உண்மை, அழகு, நன்மை யென்னும் குணிகளைச்சார்வன.

உண்மை உணர்த்தும் நூல்கள் பூத பௌதிக விஞ்ஞான நூல்களும், தருக்கநியாய தத்துவ நூல்களும்; அழகு உணர்த்துவ இசையோவிய நூல்கள்; நன்மை, யுணர்த்துவ அறநூல்கள். உண்மை அழகு, நன்மையாகிய அனைத்தும் உணர்த்துவ நல்லிசைப் புலவரளித்த இலக்கியநூல்கள். இவை செய்யுள் எனப்படும்.

ஏனைய கலைத்துறைகள் உள்ளத்தின் ஒவ்வொரு திறத்தினைப்பற்றி நிற்கச் செய்யுள் மாத்திரம் உள்ளம் முழுவதையும் பற்றி நிற்கும். ஆதலினால் மதிப்பிடற்கரியதொரு நிறைவினையும் மலர்ச்சியையும் உள்ளத்திற்கு அளிக்கும். இந்நலத்தினை நல்லியற்புலவர் செய்யுளில் வைத்துக்காட்டுதல் மேற்கொள்வாம். பலப்பல இலக்கிய நூலினுள் ஒன்றினையே எடுத்துக்கொள்வோம்.

பாரதத்திற்குக் காப்பியத்தலைவன் யாவன்? கண்ணபிரான் என்பாரும், அருச்சுனன் என்பாரும், உதிட்டிரன் என்பாரும், சுயோதனன் என்பாருந் தம்முள்ளே முரணிநிற்க, ஈண்டுக்குறிப்பிட்ட அனைவரையுந் தனது அன்பினாற் பிணித்த அங்கர்கோனாகிய கன்னன் காப்பியத் தலைவனாவானென்பாரது கூற்று வலிமையுற்று நிற்கிறது.

'பெண்மைக் கிரதி யெனவந்த பெண்ணு ரமுதே பேருலகில்
உண்மைக் கிவனே வலிக்கிவனே உறவுக் கிவனே உரைக்கிவனே
திண்மைக் கிவனே நெறிக்கிவனே தேசுக் கிவனே சிலைக்கிவனே
வண்மைக் கிவனே கன்னனெனு மன்னன் கண்டாய் மற்றிவனே.'

எனத் திரௌபதியின் செவிலித்தாயார் கூற்றாகக் கவி கூறுகின்றார்.

"எத்தலங்களினும் மீகையாலோகை வாகையா லெதிரிலா வீரன்" நாகாயுதத்தினை மறுகாலு மேவாது பார்த்தனது சரமாரிக்கிலக்காகி நின்ற வெல்லையிலே. முதல்வனாகிய கண்ணபிரான் வஞ்சவேதியன் வடிவங் கொண்டு வந்து, "வறுமையால் வாடினேன் இக்கணத்து எனக்கு இயைந்ததொன்று அளிப்பா" யென இரந்து நின்றான்.

"என்றுகொண் டந்த வந்தண னுரைப்ப
விருசெவிக் கமுதெனக் கேட்டு
வென்றிகொள் விசயன் விசயவெங் கணையால்
மெய்தளர்ந் திரதமேல் விழுவோன்
நன்றென நகைத்துத் தரத்தகு பொருணீ
நவில்கென நான்மறை யவனும்
ஒன்றிய படிநின் புண்ணிய மனைத்தும்
உதவுகென் றலுமுள மகிழ்ந்தான்."

"ஆவியோ நிலையிற் கலங்கிய தியாக்கை
அகத்ததோ புறத்ததோ வறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெலா நயக்கும்
பக்குவந் தன்னில்வந் திலையால்
ஓவிலா தியான்செய் புண்ணிய மனைத்தும்
உதவினேன் கொள்கநீ யுனக்குப்
பூவில்வா ழயனு நிகரல னென்றாற்
புண்ணிய மிதனினும் பெரிதோ."

"என்னமுன் மொழிந்து கரங்குவித் திறைஞ்ச
இறைஞ்சலர்க் கெழிலேயே றனையான்
கன்னனை யுவகைக் கிருத்திஞ னோக்கிக்
கைப்புன லுடன்தரு கென்ன
அன்னவ னிதயத் தம்பின்வா யம்பா
லளித்தலு மங்கையா லேற்றான்
முன்னமோ ரவுணன் செங்கைநீ ரேற்று
மூவுல கமுமுடன் கவர்ந்தோன்."

குருச்சேத்திரப் போர்க்களத்திலே போர் தொடங்கிய பதினேழா நாளன்று நடந்த இத் தெய்வக் காட்சியை அகக்கண்ணால் நோக்குவோமாக. பொழுது மேற்றிசையிலே இரண்டுவிற்கிடை உயரத்திலே நிற்கிறது. சூரியனது பொன் போன்ற கிரணங்கள் புதல்வனது ஆகத்தினைமெல்லெனத்தழுவி நிற்கின்றன. அருச்சுனனது ஆயிரம் அம்புகள் துளைத்த துளைகளினின்றும் பாய்கின்ற செங்குருதி சூரிய குமாரனது உடலத்திலே ஆயிரங்கிரணங்கள் போலத் திகழ்கின்றது. இரு பெருவீரர்களது இரதத்தில் பூட்டிய குதிரைகளும் செயலற்று நிற்கின்றன. கண்ணபிரான் விசயனை "செருவொழிதி" யெனக் கையமர்த்திக் கன்னனை நோக்கி வருகின்றான். வேதியன் வடிவமாக வந்த கண்ணபிரான் இரத்தலும் கன்னன் இதயத்தில் பாய்ந்துகிடந்த அம்பினை வாங்கி அங்கு பாய்ந்த செந்நீரே நீராகத் தான் புரிந்த புண்ணியமனைத்தினையும் தானஞ் செய்கிறான். பெற்ற கண்ணபிரானாகிய வேதியன் "வேண்டிய வரங் கேள்" என்கின்றான். இது கேட்ட கன்னன்,

"இல்லையென் றிரப் போர்க்கில்லை யென்றுரையா
இதயநீ அளித்தருள்"

என்கின்றான். கருணை வள்ளலாகிய கண்ணபிரான் உளமுருகிக் கண்களினின்று சொரிந்த நீரினாலே கன்னனை

நீராட்டித் தனது தெய்வ வடிவோடு அவன் கண்களிக்கக் காட்சியளிக்கின்றார்.

"சமரமா முனையிற் றனஞ்சயன் கணையாற்
சாய்ந்துயிர் விடவுஞ் செங்கண்
அமலநா ரணனைக் காணவும் பெற்றேன்."

எனக் கூறிக் கன்னன் அகம் மகிழ்கின்றான். பின்னும் அவன் கண்ணபிரானை நோக்கி,

"தருமன்மகன் முதலான அரிய காதற்
றம்பியரோ டமர்மலைந்து தறுக ணாண்மைச்
செருவிலென துயிரனைய தோழற் காகச்
செஞ்சோற்றுக் கடன்கழித்தேன் தேவர் கோவுக்
குரைபெறுநற் கவசமுங்குண் டலமு மீந்தேன்
உற்றபெரு நல்வினைப்பே றுனக்கே தந்தேன்
மருதிடைமுன் தவழ்ந்தருளுஞ் செங்கண் மாலே
மாதவத்தா லொருதமியன் வாழ்ந்த வாறே."

எனக் கூறுகின்றான். இவ்வெல்லையிலே தாயாகிய குந்தி தேவி போர்க்களத்தினை யடைந்து இறந்துபடுகின்ற கன்னனை மார்புறத்தழுவி

"ஓரைஞ்சு பேருளரா லறந்த வாத
உதிட்டிரனு தியநாகக் கொடியோ னாதி
ஈரைஞ்சு பதின்மருளர் தம்பி மார்கள்
இங்கிதங்க ளறிந்தடைவே யேவல் செய்யப்
பாரஞ்சு மொருகுடைக்கீழ் நீயே யாளும்
பதமடைந்தும் விதிவலியாற் பயன்பெ றாமற்
காரஞ்சு கரதலத்தா யந்தோ வந்தோ
கடவுள்தம் மாயையினாற் கழிவுற் றாயே."

எனக்கூறி அழுதரற்றுகின்றாள். இத்தகையதோர் காட்சியினை ஹோமர் எழுதிய வீரகாவியங்களிலும் காண்டலரிது. மனமெனும் இந்திர மாஞாலத் தேரிலேறிக் காலவெல்லை

யையும் தேசவெல்லையையும் கடந்து தீர்த்தயாத்திரை புரியும் அருச்சுனன் என்னும் தவசியுடனே பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரைக்கணித்தாயுள்ள ஒரு பூஞ்சோலையை அடைவோமாக.

"குன்றிலிள வாடைவரும் பொழுதெல்லா
மலர்ந்ததிருக் கொன்றை நாறத்
தென்றல்வரும் பொழுதெல்லாஞ் செழுஞ்சாந்தின்
மணநாறுஞ் செல்வ வீதி"

பலப்பலவாக அமைந்த மதுரை மாநகரினைக் காக்கும் பாண்டியன் மகள்,

"சோதியரிச் சிலம்பரற்றத் துணைநெடுங்கண்
செவியளப்பத் தொடித்தோள் வீசி
ஆதியர விந்தையென"

விளையாட்டிற்கு ஆங்கு வருகின்றாள். அவளது,

"பச்சென்ற திருமுகமுஞ் சேயிதழும்
வெண்ணகையும் பார்வை யென்னும்
நச்சம்பு மழுதூற நவிற்றுகின்ற
மடமொழியும் நாணும் பூணும்
கச்சின்கண் டங்காத கனதனமும் நுண்ணிடையும்"

பார்த்தனது மனத்தினைக் கொள்ளை கொள்ளுகின்றன.

"வண்டானந் திரிதடத்து வரிவண்டி
னினம்பாட மயில்க ளாடத்
தண்டார்மெய்க் கிளிக்கூட்டஞ் சான்றோர்க
ளுரைபயிற்றத் தமிழ்கள் மூன்றும்
கொண்டாடி யிளம்பூவைக் குழாந்தலைசாய்ந்
துளமுருகுங் குன்றி னுங்கட்
கண்டாளக் குமரனைத்தங் கொடிக்கயலைப்
புறங்காணுங் கண்ணி னாளே."

"செந்திருவை யனையாளுந் திருமாலை
யனையானுஞ் சிந்தை யொன்றாய்
வந்திருவர் விலோசனமுந் தடையின்றி
உறவாடி மகிழ்ச்சி கூர்ந்து
வெந்துருவ மிழந்தமதன் மீளவும்வந்
திரதியுடன் மேவுமா போற்
கந்தருவ முறைமையினாற் கடவுளர்க்குங்
கிடைக்காத காமந் துய்த்தார்."

ஆங்கது நிகழ்ந்தபின்னர் அரசன் தனது புதல்வியது குறிப்பினை யறிந்து மணவினைக்கு வேண்டுவன புரிந்தான்.

"கோமடந்தை களிகூரப் புகழ்மடந்தை
களிகூரக் கொற்ற விந்தை
மாமடந்தை களிகூர மணவினையொப்
பனைக்குரிய மடந்தை மார்கள்
பூமடந்தை யனையாளைப் பூட்டியவெண்
தரளமணிப் பூண்க ளாலே
நாமடந்தை நிகராக்கி நாயகன்றன்
வலப்பாக நண்ணு வித்தார்."

மணவினை நிகழ்ந்தபின்னர் ஒத்த காதலராகிய அவ்விருவரும்,

"நோக்கியகண் ணிமையாம னோக்கி நோக்கி
நுண்ணியமென் புலவியிலே நொந்து நொந்து
தேக்கியசெங் கனியிதழா ரமுதுண் டுண்டு
சேர்த்தியகைந் நெகிழாமற் சேர்ந்து சேர்ந்து
தூக்கியபொற் றுலையினநு ராக மேன்மேற்
றொடரவரும் பெரும்போகந் துய்த்தார் முன்னைப்
பாக்கியம்வந் திருவருக்கும் பலித்த தல்லால்
பாயனலத் திப்படியார் பயன்பெற் றாரே."

எனக் கவி கூறிச் செல்கிறார்.

இனிப் போர்க்களத்திலும், பூஞ்சோலையிலும் யாம் கண்ட காட்சிகளை ஒப்பவைத்து நோக்கி இலக்கியச் சுவை எத்தகையது என ஆராயப் புகுவோம்.

போர்க்களத்திலே பெருமிதச்சுவை தலையாய சுவையாகி நிற்கும். செயற்கருஞ் செயல்களைக்கண்டு இறும்பூதெய்தும். உள்ளத்திலே மருட்கையென்னுஞ் சுவை தோன்றும். எள்ளி நகைக்கின்ற நகையும் அசைவு கண்டிரங்கும் அவலமும், பகைமேற்செல்லும் வெகுளியும், இகழ்ந்துரையாடும் இளிவரலும், அஞ்சத்தக்கன கண்டுழி நிகழும் அச்சமும், வெற்றியாலெய்திய உவகையும், ஏனைய சுவைகளும், போர்க்களத்திலே தோன்றுதற் குரியன.

பூஞ்சோலைக் காட்சியினுள்ளே "காதலிருவர் கருத்தொப்ப ஆதரவுபட்ட உவகையும்" இனிய நகையும் வியப்பின்பாலதாகிய மருட்கையும், பிரிவு நோக்கிய அச்சமும், பிரிவாலெய்திய அவலமும், பெருவரவின் பொருள் குறித்தெழுந்த சுவையினால் மாத்திரமன்று; பாவினகத்து எழுத்துக்கள் அமைந்து நின்ற தாளவிகற்பங்களினாலும் கவிஞர் தமது உள்ளக் குறிப்பினை வெளிப்படுத்துவர்.

"வளவன்பதி முதலாக வயங்கும்பதி தோறும்
துளவங்கம ழதிசீதள தோயங்கள்ப டிந்தே
இளவண்டமி ழெழுதேடுமுன் னெதிரேறிய துறைசூழ்
தளவங்கமழ் புறவஞ்செறி தண்கூடல்பு குந்தான்."

என்னும் செய்யுளின்பின்,

"குன்றிலிளவாடை வரும்போதெல்லாம்" என்னுஞ் செய்யுள் வருகிறது. இடையின எழுத்துப் பயின்று மெல்லென்னு நீர்மையாகி நிற்கும். "துளவங்கம ழதிசீதள தோயம்" "இளவண்டமி ழெழுதேடு" "தளவங்கமழ் புறவம்" என்னும் சொற்றொடர்களின் நயத்தை நோக்குக.

தண்ணென்னும் நீர்த்துறையினையும், முல்லைமலர்களின் நகையினையுங்கண்டு இறும்பூதெய்தி நிற்பேமிடையே இளவாடைக் காற்றும், மலயத்துதித்த மந்தமாருதமும் வருதல்போல அடுத்த செய்யுள் வருகின்றது.

தனதந்தன தனதந்தன தனதந்தன தான என்னுஞ் சந்தத்தின்பின்னர் தந்தான தனதான தனதந்த தன தான தனனதான "வண்டானந்திரிபொழிலில் வரிவண் டினிம்பாட மயில்களாட" என்னுஞ் சந்தந் தோன்றித் தென்றற்காற்றினையும், வசந்தகாலத்தையும் நினைவூட்டி உவகையளிக்கின்றது.

பதினெட்டாம் போர்ச்சருக்கத்திலே துரியோதன னும் வீமனும் கதாயுத்தஞ் செய்யும் வேளையிலே வீமன் மரபுதவறித் துரியோதனனைத் தொடையிலடித்ததைக் கண்ட பலராமன் வெகுண்டெழுதலையும், கண்ணபிரான் இடைநின்று விலக்குதலையும் கூறுகின்ற பாகத்திலே செயல்விரைவினை நோக்கிச் சந்தமானது ஒவ்வொரு பாடலிலும் விகற்பித்துச் செல்வது உளங்கொண்டு உவப் புறு நீர்மையது.

1. தந்த தானன தானன தானன
2. தனதனத் தனத்த தானதன
3. தனனதன தான தானன தானன
4. தனண தனண தனண தனண
5. தந்தன தனன தனன தானன
6. தத்த தனதன தத்தன தானன
7. தந்த தானன தானன தானன
8. தனதந்த தானன தானன தானன
9. தான தனனதன தந்த தானன
10. தனன தன்னதன தந்த தானன
11. தனத்தன தனததன தானன தானன
12. தனதன தனத்தன தந்ததா னந்தன்
13. தனத னத்தன தனதன தானன
14. தானன தனந்தன தனன தாண தனன.

என வேறுபட்ட சந்தங்களினாலே அப்பாடல்கள் நடக் கின்றன.

இனி "நோக்கிய கண்ணிமையாமல்" என்னும் செய்யுளினுள்ளே "நோக்கி நோக்கி" "நொந்து நொந்து" "உண்டு உண்டு" "சேர்ந்து சேர்ந்து" என்னும் மடக்குகள் எத்துணை யழகொடு பொருந்தி நிற்கின்றன.

"கோமடந்தை களிகூர" என்னுஞ் செய்யுளிலமைந்த மடக்கினையும் நோக்குக.

"கண்ணினுஞ் செவியினுங் நுண்ணிதினுணரும் உணர்வுடைய மாந்த"ராகிய கவிகளுக்கு இயற்கையினுள்ள அற்புதக் காட்சிகள் தத்தங் கருத்தினை வெளியிட்டுரைக்கும். திரௌபதியினது சுயம்வரமண்டபத்தினை நாடிப் பஞ்சபாண்டவர் சென்றனர். இளவேனிற்காலத்துக் குயிலின்னோசை அவர் செவிப்படுகின்றது. அக்குயில் என்ன செய்தியுரைத்தது என்னுமுண்மை கவிக்குப் புலப்படுகிறது.

"மாக்குர லளக வல்லி வதுவையி னழகு காணத்
தாக்குர லடிகொள் யானைத் தரணிப ரெவரும் வந்தார்
வீக்குகள் மிளிர்பொற் பூணீர்! விரைவுடன் வம்மி னென்று
கூக்குரல் விளிப்ப போலுங் கோகிலக் குரலுங் கேட்டார்."

ஓசையும் சுவையும் ஒத்து நடப்பதற்கு எடுத்துக்காட்டாக இச்செய்யுளை நோக்குக.

"பூபால ரவையத்து முற்பூசை
பெறுவார் புறங்கானில் வாழ்
கோபால ரோவென் றுருத்தங்
கதித்துக் கொதித்தோ தினன்
காபாலி முனியாத வெங்காம
னிகரான கவினெய்தி யேழ்
தீபால டங்காத புகழ்வீர
கயமன்ன சிசுபால னே."

இதன்கணமைந்த வெகுளிச் சுவையை நோக்குக.

"உருத்தங்கதித்துக் கொதித்தோதினன்" என, வல்லொற்றுமிக்கு வருவது இச்சுவைக்குப் மிகப் பொருத்த முடையதாகும்.

" வாரடவுனக் கியாதுதா னர்தம்
மகளடுக்குமோ வானமாதர் தோள்
சேரடாமலங் துயிரை மெய்யினைத்
தின்றுதேவரூர் சேரு விப்பன்யான்
போரடாதுன்னே டாளி யேறுபுன்
பூனைதன்னுடன் பொரநினைக்குமோ
பாரடாவெ னுண்மையை யரக்கர்கைப்
பட்டபோதில்யார் பாரில் வைகினர்."

இடும்பன் கூற்றாகிய இப்பாடலினும் வல்லொற்று மிக்குவருதலை நோக்குக.

" கரியணிக்குளெக் கரிகள் புண்படா
கடவுதேரிலெத் தேர்க லக்குறா
பரியணிக்குளெப் பரிது ணிப்புறா
பாகர்தம்மிலெப் பாகர் வீழ்கலார்
நரனும்வெற்றிகூர் வசவு முற்றபோர்
நவிலுகிற்கினும் நாந டுங்குமால்
இருதளத்தினும் இருவ ரம்பினும்
எவுனதபே ரெந்த மன்னரே."

என்னுஞ் செய்யுளை நோக்குக.

வாளபிமன்னு பட்டபின்னர் கடோற்கசன் கூறிய இவ்வுரையை நோக்குக.

" இருவரெதி ரெதிர்தம்மி லிகல்பொருத
லுலகியற்கை யாருங் கூடிப்
பருவமுறாத் தனிக்குதலைப் பாலகனுக்
காற்றமற் பறந்து போனீர்
ஒருவனெடுந் தேரளிக்க ஒருவன்மலர்க்
கைதுணிக்க ஒருவன் பின்னைப்
பொருவனென அறைகூவிப் பொன்றுவித்தா
னிதுகொண்டோ புகல்கின் றீரே.

வரைக்குவமை பெறுதடந்தோள் வீமன்மக
　　னிப்படியே மதியா னாகி
உரைக்குமொழி கேட்டிருந்த உரகமணிக்
　　கொடிவேந்த னுருத்து நோக்கி
இருக்குமெழி லவைக்கேற்ப வியம்பாமற்
　　றன்மதத்தா லியம்பு கின்ற
அரக்கிமக னுடனொன்றும் கழறேலென்
　　றனனிருந்த வரசர் யார்க்கும்;

அந்தவுரை மீண்டவன்கேட் டாங்கவனே
　　நகைத்துரைப்பா னரக்க ரேனுஞ்
சிந்தனையில் விரகெண்ணார் செருமுகத்தில்
　　வஞ்சகமுஞ் செய்யா ரையா
வெந்திறல்கூர் துணைவருக்கு விடமருத்தார்
　　நிரைக்கழுவில் வீழச் செய்யார்
உந்துபுன லிடைப்புடையா ரோருரி
　　விருப்பகற்று ருரையுந் தப்பார்;

செழுந்தழல்வாழ் மனைகொளுவார் செய்ந்நன்றி
　　கொன்றறியார் தீங்கு பூணார்
அழுந்துமனத் தழுக்குரு ரச்சமுமற்
　　றருளின்றிப் பொய்ச்சூ தாடார்
கொழுந்தியரைத் துகிலுரியார் கொடுங்கான
　　மடைவித்துக் கொல்ல வெண்ணார்
எழுந்தமரின் முதுகிடா ரிவையெல்லா
　　மடிகளுக்கே யேற்ப வென்றான்.

இப்பாடலிலே நகையும் இளிவரலும் தோன்றிநின்றன.

நின்றனையே யெனைக்காத்து நீயேகென்
　　றியானுரைப்ப நெடுந்தே ரூர்ந்து
சென்றனையே யிமைப்பொழுதிற் றிகிரியையு
　　முடைத்தனையே தெவ்வ ரோட
வென்றனையே சுயோதனன்றன் மகவுடனே
　　மகவனைத்தும் விடங்கா லம்பிற்
கொன்றனையே நின்னாண்மை மீண்டுரைக்கக்
　　கூசினையோ குமர ரேறே.''

இதனுள் அவலச்சுவை தோன்றுகின்றது. மன்னைக் காஞ்சிச் செய்யுளுள்ளே 'னகரமெய்' பெருவரவிற்றாதலை நோக்குக.

> " அஞ்சின மஞ்சின மென்றுவி ரைந்துய
> ரண்டர்ப ணிந்திடவுந்
> துஞ்சின மின்றென வன்பணி யின்கிளை
> துன்பமு ழந்திடவும்
> வஞ்சம னங்கொடு வஞ்சக னின்றிடு
> வஞ்சனை நன்றிதெனு
> நெஞ்சில்வெ குண்டுல கொன்றுப டும்படி
> நன்றுநி மிர்ந்தனனே."

முன்னிரண்டடியிலும் அச்சச்சுவை. பின்னிரண்டடியிலும் வெகுளிச்சுவை. வில்லிபாரதத்தினை இந்நாளில் யாம் மறந்திருக்கின்றோம். ஒருகாலத்தில் மட்டக்களப்பிலே வில்லிபாரதமானது கோயில்களிலே படித்துப்பயன் சொல்லும் நூலாக இருந்தது. ஆசிரிய வகுப்பிற்கும் அஃது இன்றியமையாத பாடமாயிருந்தது. சங்கநூல்கள், காப்பியங்கள், இராமாயணம், கந்தபுராணம், பெரியபுராணம் என்றிவற்றைப் படிப்பதற்குமுன் மாணவர்கள் பாரதத்திற் பயிலலாம். அப்பயிற்சி மேலிலக்கியக் கல்விக்குச் சிறந்த அத்திவாரமாகும். இலக்கணச் சுருக்கமும், ஒரு சில கீழ்க்கணக்குநூல்களும் பயின்றபின் பாரதத்தை எடுத்துக்கொள்ளலாம்.

சந்தச்செய்யுட்களைச் செம்மையாக வாசிப்பதற்கு ஒருசிறிது சந்தவிருத்தத்தின் இலக்கணத்தை அறிந்திருக்கவேண்டும். தன தான, தத்த தந்த எனச், சந்தக் குழிப்புகளை எழுதப்பயின்று கொண்டாற் போதும். தெளிவுபெற வாசிக்கவேண்டும். ஓசைக்காக ஒருமுறையும், பொருளுக்காக மற்றொரு முறையும் வாசிக்கலாம்.

செய்யுளிற் குறிப்பிட்ட இடங்கள், மக்கள், சந்தர்ப்பம், நிகழ்ச்சி அகக்கண் ணோக்குதல் வேண்டும். செய்யுளிற் குறிப்பிட்ட பேச்சு, ஓசை இவற்றை அகக்காதினால் கேட்க வேண்டும். சுவையோடுகூடிய மெய்ப்பாடு வாசிப்போரது உடலத்தில் ஒருசிறிது தோற்றுதல் வேண்டும். சுருங்கக் கூறுமிடத்து உள்ளத்தின் முத்திறமாகிய அறிவு, இச்சை, துணிவு என்பன தெளிவு, இனிமை, உறுதி யென்னுங் குணங்களை மருவி, உண்மை, அழகு, நன்மையென்னு மிவற்றிலீடுபட்டுநிற்க, கண்ணுஞ்செவியும் ஆனந்தமுறக் கண்டுங் கேட்டும் இறும்பூதெய்த உடல் செயலற்றுப் பரவசப்பட்டு நிற்கும் எல்லையிலே வானவர்நாட்டின்பம் ஓரளவிற்கு வந்தெய்தும். ஆங்கது பற்றியன்றோ "தேவ ரனையர் புலவர்" என ஆன்றோர் கூறினர். "வண்டானந் திரிதடத்து" என்னும் பாடலினை ஆராய்வாம்.

தமது அகக்கண்முன்னே ஓர் அழகிய மலையும் மரங்க ளடர்ந்த இளஞ்சோலையும், அகன்ற தடாக மொன்றுங் காணப்படுகின்றன. தடாகத்திலே வெள்ளிய சிறையை உடைய நீர்ப்பறவைகள் திரிகின்றன. அலர்ந்த செந்தா மரை மலர்மீது ஒலிசெய்யும் வண்டினம் படிகின்றன. மரக் கிளைகளிலே கிளிகளும், நாகணவாய்ப்புட்களும் காணப்படு கின்றன. இவ்வழகிடையே வனப்புமிக்க ஆடவனொரு வனும் மடவரலொருத்தியும், ஒருவரை யொருவர் வியப் போடு நோக்குகின்றனர். இம் மடவரலது கண்கள் கயல் மீனினை வென்ற தோற்றத்தை யுடையன. இக்காட்சியி னாலே பற்றப்பட்ட அகக்கண் பிறிதொன்றினை நோக்காது, குறித்த காட்சியிலே படிந்துகிடக்கின்றது. வண்டுகளி னது இனிய ஓசையும், கிளிகளும் நாகணவாய்களும் மொழியும் தமிழினோசையும், மந்தமாருதத்தின் மெல்

லென்ற ஓசையும் மலையினின்று விழுகின்ற அருவியி னோசையோடு கலந்து அகச்செவியை நிறைக்கின்றன. கிளியும் நாகணவாயும் சான்றோருரையினையும், முத்தமி ழினையும் விளம்புகின்றன என்றமையினாலே, பாண்டி நாடு தமிழுக்கு உறையுள் என்பதும், சான்றோர் வாழும் பழம்பதி என்பதும் உய்த்துணர வைக்கப்பட்டது. “தங் கொடிக் கயலைப் புறங்காணுங் கண்ணினாள்” என்றமை யினாலே, ஆங்குத் தோன்றிய மேதகவுடையாள் பாண்டிய மன்னனது செல்வப்புதல்வி யென்பதும் பெறப்பட்டது. இவ்விருவரது உள்ளமும் ஒருவழிப்பட்டு நின்றமையைக் கண்கள் தடையின்றிக் காட்டினமையின் இவர் தமது நோக்குப் பொதுநோக்கன்று, அன்புநோக்கென்பது பெறப்பட்டது. உயர்குலத்துதித்தன ராதலினாலே நிறை யழிந்து ஒருவரையொருவர் தீண்டினாரல்லர். இவர் தம் கண்ணிணைகள், உறவாட, இருவர் மனமும் ஒருமித்தன வென்பது, என் றிவ்வழியாராயுமிடத்து இச்செய்யுளி லமைந்து கிடந்த தெளிவும், இனிமையும், உறுதிப்பாடும் உள்ளத்தை நிறைத்து மகிழ்ச்சியைத் தருகின்றன. இதுவே இலக்கியச் சுவையி லீடுபடுதலாகும்.

## பிரபுத்த பாரத ஆசிரியர்

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்தேர்வாளருள் ஒருவராக அடிகள் திகழ்ந்ததுடன் ஈழநாட்டின் பலதிக்கு களுக்கும் சென்று தமிழிற்கும் சமயத்திற்குமாக அரும் பெருந் தொண்டுகளைச் செய்தார். இந்நாட்களில் வட நாட்டவர்கள் நடத்தி வந்த ‘பிரபுத்தபாரத’ என்னும் இதழிற்கு ஆசிரியராக நியமிக்கப்பட்டமையினால் இமய மலைச் சாரலில் உள்ள மாயாவதி ஆசிரமத்திற்குச் செல்வ தற் காயத்தமானார்.

பிரபுத்த பாரதத்தின் ஆசிரியப் பதவியை அடிகள் தாங்குவது ஈழநாட்டிற்கே தனியொரு மதிப்பை ஈட்டு மென்பதற் கையமின்று. பொதுவாகச் செய்தி இதழ்களின் பணியில் இந்திய நாட்டவர்களே சிறந்தவர்களாவார். தொடக்ககால எல்லையிலே இலங்கையில் இதழாசிரியப் பணிக்காக இந்திய நாட்டவர்களையே வரவழைப்பது வழக்க மாகும். இந்த வழக்கத்திற்கு முரணாக அடிகள் இலங் கையிலிருந்து இந்தியாவிற்கு இதழாசிரியராகப் பணி புரியச் செல்வதென்றால் இலங்கைக்கே தனி மதிப்பாகும். இம்மதிப்பை ஈட்டிக்கொடுக்கப் போகும் அடிகளைப் பாராட்டும் முகமாக இலங்கையின் பலபாகங்களிலுமிருந்து அழைப்புகள் அடிகளுக்குக் கிடைக்கலாயிற்று.

எல்லா அழைப்புக்களுக்கும் செல்வதற்கு அடிகளுக் குப் போதிய ஓய்வுநேரங் கிடைக்கவில்லை. ஆதலினால் சிறப்பாகக் கொழும்பு, யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, திரிகோணமலை ஆகிய இடங்களில் நடைபெற்ற வரவேற்புக் கூட்டங்களுக்குச் சென்றார்.

அடிகளின் பிறந்த இடமான மட்டக்களப்பில் நடை பெற்ற கூட்டத்திற்கு, அடிகளை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். அடிகள் கடமை ஏற்கப் போகும் சிறந்த பணியினைப் பல அறிஞர்களும் பாராட்டிப் பேசினார்கள். இதேபோல் திரிகோணமலையிலும் மதிப்பான ஓர் வரவேற் பளிக்கப்பட்டது.

யாழ்ப்பாணத்து வைத்தீசுவர வித்தியாலயத்தில் டாக்டர் எஸ். சுப்பிரமணியம் அவர்களின் தலைமையின் கீழ் அடிகளுக்கு ஓர் உபசாரக் கூட்டம் நடத்தப்பட்டது. யாழ்ப்பாணத்துப் பல அறிஞர்களும் புலவர்களும் அடி களைப் பாராட்டி விரிவுரைகள் நிகழ்த்தினார்கள். பின்னர்

அடிகள் 1939-ம் ஆண்டு ஆவணித்திங்கள் 3-ம் நாள் மாயாவதி ஆசிரமத்திற்குப் புறப்பட்டார்.

அடிகள் பிரபுத்த பாரத ஆசிரியப் பதவியை ஏற்றுப் பலரும் பாராட்டக் கூடிய வகையிலே பணி ஆற்றினார். தமிழ்நூல்களிலே பொதிந்து கிடந்த அரும்பெருந் தத்துவங்களை யெல்லாம் அடிகள் ஆங்கிலத்திலே இதழ்வாயிலாக வெளியிட்டுத் தமிழின்பெருமையை வளம்படுத்தினார். பல திங்கட்காலமாக ஆசிரியப்பணியை மேற்கொண்ட அடிகள் மேலும் தங்கியிருக்க விரும்பவில்லை. தாம் எடுத்துக்கொண்ட ஆராய்ச்சிப் புதையலான யாழ்நூலிற்கு வேண்டிய செய்திகள் சேகரிக்கத் தமிழ்நாட்டிலே பல திங்கட்காலம் சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டிய நிலைமை முன் வந்தது. ஆதலினால் அடிகள் இதழாசிரியப்பணியைத் துறந்து தமிழகம் திரும்பினார்.

எட்டுத்திங்கள்வரை அடிகள் தமிழ்நாடெங்கும் சென்றார். அடிகள் வரப்போகும் செய்தியை முன்கூட்டியே அறிந்த தமிழ்ச்சங்கங்கள், இலக்கியக்கழகங்கள், சமயநிலையங்கள், இன்னும் தமிழ்மொழிக்காகத் தொண்டாற்றும் கழகங்களெல்லாம் அடிகளைப் பெருமைப் படுத்தி அவரின் விரிவுரைகளுக்கெல்லாம் ஏற்பாடு செய்தன. பிரயாண காலத்தில் அடிகளுக்கு உடல்நலம் குன்றி இருந்தாலும் அதனைப் பொருட்படுத்தாது தமிழ்நாட்டுப் பிரயாணத்தைச் செய்யலானார். இப்பிரயாணத்தினால் அடிகள் தமது ஒப்பற்ற யாழ்நூலிற்கு வேண்டிய ஆதாரங்களையெல்லாம் சேகரித்துக்கொண்டார்.

## இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர்

அடிகள் தமிழ்நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டிருப்பதைச் செய்திஇதழ்கள் மூலமாக அறிந்த

இலங்கை அன்பர்கள், இலங்கைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்பேராசிரியப் பணியை ஏற்றுத் தமிழ் அன்னைக்குத் தொண்டாற்றும்படி வேண்டினார்கள். அடிகள் அவர்களின் அழைப்பைப் பொருட்படுத்தாது தமிழ்நாட்டுச் சுற்றுப் பிரயாணத்திலே ஈடுபட்டிருந்தார்கள். இதனால் மனம் நொந்த அன்பர்களும், இலக்கியக்கழகங்களும் ஒன்று சேர்ந்து ராமகிருட்டிண சங்கத்தாரிடம் முறையிட்டனர். எவ்வாறுதல் அடிகளைப் பேராசிரியப் பணியை ஏற்கச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதன் பயனாக 1943-ம் ஆண்டின் இறுதிக்காலத்தில் அடிகள் இலங்கைப் பல்கலைக்கழகத்தின் பேராசிரியப் பணியை ஏற்றுக் கொண்டார்.

அடிகள் பணிபுரிய முன்வந்தது ஈழநாட்டு மக்களின் பாக்கியமே என அன்பர்கள் கருதலானார்கள். ஆதலினால் அடிகளைப் பாராட்டும் முகமாக ஓர் விழாவினை ஏற்பாடு செய்வதன் பொருட்டு, திரு என். நடராசா, கே. சி. திரு. கே. கனகரத்தினம், திரு. ஏ. சபாரெத்தினம். திரு. அருள் தியாகராசா ஆகியவர்கள் சலியாது உழைத்ததின் பயனாகக் கொழும்பு நகரசபை மண்டபத்தில் ஓர்பாராட்டுக் கூட்டம் தொடங்கப் பட்டது.

கூட்டத்திற்குப் பாராளுமன்ற உறுப்பினர்களும், அமைச்சர்களும் அரசியல்துறைத் தலைவர்களும், விரிவுரையாளர்களும், அறிஞர்களும், புலவர்களும் வந்திருந்தனர். தமிழகத்தின் பலபாகங்களிலுமிருந்து பல அன்பர்கள் வாழ்த்துச் செய்திகள் அனுப்பினார்கள். கூட்டத்திலே டாக்டர் ஐவர் ஜென்னிங், திரு எஸ். நடேசன், ஜனாப் டி. விஜயா, திரு. சி. டப்ஷி கன்னங்கரா ஆகியோரும் மேலும் பல அறிஞர்களும் அடிகளைப் பாராட்டிப் பேசி

ணர்கள். இறுதியில் அடிகள் இலங்கைப் பல்கலைக்கழகத்துத் தமிழ்ப் பேராசிரியப் பணியை ஏற்றது இலங்கைவாழ் தமிழ்மக்களின் பெரும்பாக்கியமே என அனைவரும் பாராட்டினர்கள்.

## தேர்வாளர்

அடிகள் பேராசிரியப் பணியுடன் மேலும் பல தொண்டுகள் புரியும் அலுவல்களை மொழிக்காகவும் மொழியின் வளர்ச்சிக்காகவும் ஏற்றார்.

கல்விப்பகுதி பாடநூற்சபை, பரீட்சைச்சபை, கல்விஆராய்ச்சிச்சபை முதலியவற்றின் சிறந்த உறுப்பினராக விளங்கினர். இந்நாட்களில் அடிகள் இலங்கைக் கல்விக்காகச் செய்த உதவி போற்றுதற்குரியதாகும். இலங்கைப் பாடசாலைகளில் போதிப்பதற்காக அரசாங்கம் பாடத்திட்டமும் பொழிப்பும் என்ற நூலினை ஆக்கி அதனை நடைமுறையில் கொண்டுவரவேண்டு மென்னும் நியதியையும் கொண்டுவந்தது. இந்த நூலிலே அடிகள் இசை என்ற பாடத்தினை எல்லா வகுப்புகளுக்கும் அமைத்துக் கொடுத்தார்.

வகுப்புப் பரீட்சைகளில் சமயமும் ஓர் பாடமாக அரசாங்கம் ஏற்படுத்திய காலையில் சமயத்திற்கு ஓர் பாடத்திட்டம் அமைத்துக் கொடுத்த பெருமை அடிகளைச் சாரும். இவைகளுடன் அடிகள், இலங்கை அரசாங்கம் நடத்தும் தேர்வுகளுக் கெல்லாம் ஓர் தேர்வாளராகவும் பணிபுரியலானர்.

கல்விக்காக அடிகள் தன்னலங்கருதாது உழைத்தார்; அதன் பயனாக அடிகளுக்குத் தாயகமெங்கும் தனியொரு மதிப்பு வளரலாயிற்று; அடிகள் அன்று

மாணவர்களுக்காக ஆக்கிக்கொடுத்த திட்டம் இன்றும் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் உறுதுணைபுரிகிறதைக் காணுந்தோறும் அடிகளின் யாழ்நூல் நம் மனதிலே இன்பக் கூத்தாடல் புரிவதில் ஐயமின்று.

## செழுங்கலைநியமமும் வடமொழிக்கல்வியும்

அடிகள் எத்தனையோ கட்டுரைகள் எழுதியுள்ளார்கள். அனைத்தும் சிறந்தவைகள்தான். அந்தவகையிலே செழுங்கலைநியமத்துடன் வட மொழிக்கல்வியை இணைத்து எழுதிய கட்டுரை மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் உறுதுணைபுரியுமென்பதற் கையமின்று. ஆதலினால் அக்கட்டுரையை இங்குக் குறிப்பிடுதல் சாலவும் சிறப்புடைத்தாகும்.

சிந்தாதேவியாகிய நாமகள் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் செழுங்கலைநியமங்கள் (Universities) கல்வித்துறை அனைத்தினுக்கும் இருப்பிடமாவன. "கல்வி கரையில, கற்பவர் நாள்சில" என்பது ஆன்றோர்வாக்கு ஆதலின், கலை பயில்வோன் தனக்கு இயைந்த கலைத்துறை இதுவெனத் தேர்ந்துணர்ந்து, அத்துறையில் நிரம்பிய புலமைபெற முயலுதல் முறையாயிற்று. "அறம்பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே" என்றலின், அறிவுடை மாந்தர் கற்றற்குரியன அறநூல், பொருணூல், இன்பநூல், வீட்டுநூல் என, நால்வகைப்படுவ என்பது தெளிவாகின்றது. இவை தம்மை வடமொழியாளர் தர்மசாத்திரம், அர்த்தசாத்திரம், காமசாத்திரம், மோட்ச சாத்திரம் என்பர். பண்டையோர் வகுத்த இந்நால்வகையினை இக்காலத்துச் செழுங்கலைநியமங்கள் எவ்வாறு பகுத்துணர்த்துகின்றன என்பதைச் சுருக்கமாக ஆராய்ந்து நோக்குவாம்.

ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படுத்தி முன்னோராய்ந்த அறநூலினை இக்காலத்துச் செழுங்கலை நியமங்கள் நீதிநூல் (Law) ஒழுக்கநூல் (Moral Science) எனப்பகுத்து ஆராய்ந்து வருகின்றன. முதல், கரு, உரி எனத் தொல்லாசிரியர் வகுத்த பொருட் பகுதிகள் இந்நாளில் மிக விரிவெய்தி நடக்கின்றன. நிலநூலும் (Geography and Geology) வானநூலினை (Astronomy) யுள்ளிட்ட கணிதநூலும் (Mathematics) பூதநூலும் (Physics) இயைபுநூலும் (Chemistry) முதற் பொருட்பால. தாவரநூல் (Botany) விலங்கியல்நூல் (Zoology) என்றிருதிறத்தாகிய உயிர்நூலும் (Biology) மன்பதை நூலும் (Anthropology) தொன்மை நூலும் (Archaeology) பயிர்த்தொழில் நூலும் (Agriculture) பொறியியல் நூலும் (Engineering) என்றின்னன வெல்லாம் கருப் பொருட்பால. அரசியலமைச்சியல்நூல் (Politics) பொருளியல்நூல் (Economics) போர்த்தொழில்நூல் (Military Science) என்றித் தொடக்கத்தன புறத்திணை உயிர்ப்பொருட்பால. இயல் (Literature) இசை (Music) நாடகம் (Drama) என முத்திறப்படுத்தி நம்முன்னோர் ஆராய்ந்த அழகுக்கலையாகிய இன்பநூலானது இயல் வாய்ந்த மொழிகள் பலவற்றையும், ஓவியம், சிற்பம் என்றித்தகைய அழகுக்கலைகளையும் தன்னுளடக்கி நடக்கின்றது. வீட்டுநூலானது தெய்வநூல் (Divinity Theology) என்னும் பெயரோடு மேற்றிசைச் செழுங்கலை நியமங்கள் சிலவற்றில் கிறித்துவ மதத்தின் ஆதார உண்மைகளை விளக்கி நிற்கிறது.

இயல்வாய்ந்த மொழிகள் இன்பநூற் பால என மேலே குறிப்பிட்டாம். இக்காலத்தில் உலகவழக்கினுள்ள செவ்விய மொழிகள் பலவுள. பொதுமக்களி

டையே வழக்கற்ற வெனினும், அறிஞ ரவைக்களத்து நிலைபெற்று நிற்பனவாய்ப் பழைமையும் செழுமை யும் வாய்ந்த செம்மொழிகளுஞ் சிலவுள. "செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர்" வகுத்த காவியங்கள் நாற்பொருளும் பயக்கும் நலனுடையவாதலின், அத்தகைய காவியங்களை யுடையவாகிய மொழிகள் கலைமாச் செல்வத்தைத் திரட்டி வைத்த கருவூலங்களாக மிளிர்கின்றன. பண்டைக் காலத்தி லிருந்த யவனர் வழங்கிய கிரேக்கமொழியும், உரோமர் வழங்கிய இலத்தீன்மொழியும் மேனாட்டு நாகரிகத்திற்கு அடிப்படையாகிய கருத்துக்களைத் தம்மகத்து அடக்கி நிற்பதோடு, இக்காலத்தில் மேனாட்டில் வழங்கும் மொழி களின் இலக்கணவமைதிக்கும் மொழிவளத்திற்கும் கருவி யாகியும் நிற்பன. ஆதலினாலன்றோ, மேனாட்டிலுள்ள செழுங்கலைநியமங்களில் இவ்விரு பழைய மொழிகளும் பெரிதும் விரும்பிக் கற்கப்படுகின்றன.

சமஸ்கிருதமும், பிராகிருதமாகிய பாளியும் இந் நாட்டு மக்கள் விரும்பிக் கற்றற்குரிய பழைய மொழி களாம். மேனாட்டு மாணவர் கல்வி நிரம்புதற்கு எவ்வாறு இலத்தீன், கிரேக்கு முதலிய பழைய மொழிகளைப் பயின்று கொள்ளுகின்றார்களோ, அவ்வாறே இந்நாட்டு மாணவர் சமஸ்கிருதம், பாளி என்னும் பழைய மொழிகளைப் பயிலுதற்குரியர். ஈழநாட்டிற் பரவியுள்ள நாகரிகத்திற்கு அடிப்படையாகித் தமிழ் சிங்களமொழிகளின் இலக்கண வமைதிக்கும் வளத்திற்கும் கருவியாகி நிற்பன இம் மொழிகளே. தமிழில் எழுத்தாராய்ச்சியும் சொல்லாராய்ச் சியும் செய்தற்கு வடமொழி அறிவு இன்றியமையாது வேண்டப்படுவது. காவ்யாதர்சம் என்னும் வடமொழி அலங்காரநூலின் மொழிபெயர்ப்பே தமிழ்த் தண்டியலங்

காரம் என அறியுமிடத்து, அணியிலக்கண ஆராய்ச்சிக்கு வடமொழியறிவு வேண்டப்படுவதென்பது தெள்ளிதிற் புலனாகிறது. வடமொழி விருத்த விகற்பங்கள் பல தமிழில் வந்து வழங்குவ வாதலின், யாப்பாராய்ச்சிக்கும் வடமொழி வேண்டப்படுவதேயாம். பொருளாராய்ச்சிக்கு வடமொழி மாத்திரமன்று பிறமொழியும் வேண்டப்படுவ.

சுன்னாகம் திரு. அ. குமாரசாமிப் புலவரவர்கள் காலம் வரையும் தமிழ்ப் பெரும்புலவர்கள் வடமொழி கற்றும், வடமொழி நூல்களை மொழிபெயர்த்தும், வடமொழி மரபு பற்றிப் புத்திலக்கண நூல்களை எழுதியும் தமிழுக்கு ஆக்க மளித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களை யுள்ளிட்ட சைவநூற் பெரும்புலவர்கள் சைவாகம புராணங்களை மூலமொழியிற் பயிலும் நோக்கமாக வடமொழியினை விரும்பிக் கற்று அம் மொழியினும் பாண்டித்திய முடையோராயிருந்தார்கள். இந்நாட்டு மாணவர் அண்மைக் காலம் வரையும் ஆங்கிலநாட்டுச் செழுங்கலைநியமங்களோடு தொடர்புடையவராயிருந்தமையின் ஆங்கிலம், பிரெஞ்சு, இலத்தீன், கிரேக்கு முதலிய மொழிகளைப் பயிலவேண்டிய வராயிருந்தனர். இப்பொழுது புதிய யுகம் பிறந்து விட்டது. இலங்கையர் தமக்கென ஒரு செழுங்கலை நியமத்தினை அமைத்துக்கொண்டனர். தமிழ், சிங்களம், சமஸ்கிருதம், பாளி என்னும் மொழிகள் இலங்கைச் செழுங்கலைநியமத்திலே முதன்மையெய்தி நிற்கின்றன. சிங்கள மாணவர்கள் தங்கள் தாய்மொழியோடு சமஸ்கிருதம் பாளியாகிய இரு மொழிகளையும் பயின்று உயர்தரப் பரீட்சைகளிலே சிறந்தமுறையாகத் தேறுகின்றார்கள். தமிழ்மாணவர்களும் அவ்வாறு தேறிப் பெருமை யடையும் பொருட்டுத் தாய்மொழியாகிய தமிழோடு வடமொழியும் பயிலுதல் நலமாகும்.

# அ. யாழ்நூல் அரங்கேற்றம் - - -

அடிகள் பத்தாண்டுகள் இடைவிடாது முயன்று, பல ஆராய்ச்சிகள் செய்து இயற்றிய இசைத்தமிழ் நூலாகிய யாழ்நூலைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்து ஆதரவில் திருக்கொள்ளம்பூதூர்த் திருக்கோயிலில் ஆளுடைப் பிள்ளையார் முன்றிலில் சர்வஜித்து ஆண்டு ஆனித் திங்கள் 6-ம் 7-ம் (20, 21-6-1947) நாட்களில் இனிது நிறைவேறியது.

தமிழகத்தின் பல இடங்களிலுமிருந்து புலவர்களும், அறிஞர்களும் அங்கேற்று விழாவினுக்கு வந்திருந்தனர். அன்னார்களுள் இசைப்பேராசிரியர் சாமிநாத பிள்ளை, கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, திரு. டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார், திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை, திரு. சோமசுந்தர பாரதி, சுவாமி சித்பவானந்தர் முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்களாகும். ஈழநாட்டிலிருந்து பல அன்பர்களும் வந்திருந்தனர்.

சர்வஜித்து ஆண்டு ஆனித் திங்கள் ஐந்தாம் நாளான (19-6-47) வியாழக்கிழமை திருகோயில் வரிசைகளுடன் இயற்றமிழ்ப் புலவர்கள், இசைத்தமிழ்ப் புலவர்கள், அறிஞர்கள் புடைசூழ, அடிகளைத் தெற்குக் கோபுரவாயிலாகத் திருக்கோவிலிற்கு அழைத்துவந்தார்கள். அந்த அழைப்பின் ஊர்வலத்திலே பண்டைத்தமிழரின் மறைந்தொழிந்த யாழ்களை, அடிகளின் யாழ்நூலின் கணக்குப்படி முளரி யாழ், சுருதிவீணை, பாரிசாதவீணை, சதுர்தண்டிவீணை என்னும் இசைக்கருவிகளை அலங்காரமாகத் தாங்கிச் சென்றனர்.

நாச்சியார் முன்னிலையில் அடிகள் இயற்றிய நாச்சியார் நான்மணிமாலை வித்துவான் ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்களாற் படிக்கப்பட்டு நிறைவேறியது. பின்னர் அனைவரும் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை வழிபட்டு ஆளுடைப்பிள்ளையாருடன் அடிகள் அரங்கேற்றுவிழா மண்டபத்திற்குச் சென்றார்.

தேவார இன்னிசைப்பண்ணுடன் அரங்கேற்றுவிழா தொடங்கியது. கோனூர் சமீன்தாரும் திருக்கொள்ளம்பூதூர்த் திருப்பணிச்செல்வரும், கரந்தைத் தமிழ்ச்சங்கத்துப் புரவலருமான, திரு. பெ. ராம. ராம. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் அனைவரையும் வரவேற்குமுகமாகப் பேசலானார்.

## வரவேற்புரை

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞான சம்பந்தப் பிள்ளையார் திருநாளாகிய இந்த நல்ல நாளிலே திருக்கொள்ளம்பூதூர்த் திருக்கோயிலாகிய இவ்வருள் நிலையத்திலே தமிழ்அன்னையின் திருப்பணியிற் பெரு விருப்புடைய இயற்றமிழ்ப் புலவர்களும், இசைப்புலவர்களும், தமிழன்புகெழுமிய ஏனைய தமிழ்ப்பெருமக்களும் ஒருங்கு குழுமியிருக்கும் இவ்வழகிய தோற்றம் தமிழ் அன்னையின் திருவோலக்கச்சிறப்பினை இனிது புலப்படுத்தி என் உள்ளத்திற்குப் பெருமகிழ்ச்சி தருகின்றது. ஞானத்தின் திருவுருவாகிய ஞானசம்பந்தப் பிள்ளையார், திருக்கொள்ளம்பூதூர்ப் பெருமானைப் பாடிப் போற்றும் பெரு விருப்பினால் இங்கு எழுந்தருளி வந்தகாலத்து ஆற்றிலே பெருவெள்ளம் ஏற்பட்டு ஓடத்தினைச் செலுத்துவோர் இல்லாத நிலையிலே, கரையில் நின்ற ஓடத்தினைக் கட்டவிழ்த்து,

“ கொட்டமே கமழுங் கொள்ளம்பூதூர்
நட்ட மாடிய நம்பனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே.”

என்னும் இன்னிசைத் திருப்பதிகத்தினைப் பாடி, தம் நாவலமே கோலாகச் செலுத்தி ஆற்றுவெள்ளத்தைக் கடந்து, இத்திருக்கோயிற் பெருமானைக்கண்டு மகிழ்ந்தது போல, நம் அருட்டிரு விபுலாநந்த சுவாமிகளும், பிள்ளை யார் அருளிய இன்னிசைச் செழும்பாடல்களை, இசைத்து நல்லிசை வளர்த்த திருநீலகண்ட யாழ்ப்பாணரது இசைக்கருவியாகிய செம்முறைக்கேள்வி யென்னும் சகோடயாழின் இயல்பினைக்காண விரும்பிக் காலமென் னும் பேராற்று வெள்ளத்தினைத் தம் கணிதநூற் புலமை யாகிய கோலினாலே கடந்து பண்டைத்தமிழர் இசைக் கருவியாகிய யாழின் இயல்பினையும், அக்கருவியில் இசைக் கப்பெற்ற இசைத்தமிழ்த் திறங்களையும் கண்டு மகிழ்ந்து அம்மகிழ்ச்சியால் விளைந்த பயனைத் தமிழகம் பெற்றுய்தல் வேண்டுமென்னும் பெருங்கருணையினாலே இசைத்தமிழ் நூலாகிய யாழ்நூலை இயற்றியுள்ளார்கள்.

முடியுடை மூவேந்தர்களாலும், குறுநிலமன்னர்களா லும், வள்ளல்களாலும் போற்றி வளர்க்கப்பெற்ற தமிழ் மொழியானது புலவர், பாணர், கூத்தர் என்போரால் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றுதுறைகளிலும் வளர்ச்சிபெற்றுத் திகழ்ந்தது. பண்டைத் தமிழர்களுடைய மன மொழி மெய்களின் ஆற்றலை மிகுவித்து விளக்கிய இம் முத்தமிழ்த்துறையினைப் பிற்காலத்தே உரிமை யிழந்த மக்கள் பேணுதொழிந்தனர். அவர்களாற் பேணப் படாது மறைந்துபோன முத்தமிழில், இசைத்தமிழ் என்னும் அருங்கலைநிதியத்தைத் தேடித்தொகுத்து

உருப்படுத்தி வழங்கியபெருமை யாழ்நூலாசிரியராகிய நம் சுவாமிகளொருவருக்கே உரியதாகும்.

தமிழன்னையின் கலைத்திறங்களாகிய பழம்பணி புதுக்கியும், புதுப்பணி குயிற்றியும் தமிழகம் தன்னரசு பெற்று உழைத்தற்கேற்ற ஊக்கத்தினை அடிகளார் அருளிய யாழ்நூல், தமிழ்மக்களுக்கு வழங்குவதாகுமென்னும் துணிபுடையேன்.

தமிழ்மக்கள் தன்னரசுபெற்ற உரிமையொடும் வாழ்ந்த முன்னாளில் முத்தமிழ்த்துறையின் முறைபோகிய வித்தகப் புலவர்கள் இயற்றிய தமிழ்நூல்கள், அரசர் பேரவைகளிற் சிறப்புடன் அரங்கேறின என அறிகிறோம். ஆசிரியர் தொல்காப்பியனாரால் இயற்றப்பெற்ற முழுமுதல் நூலாகிய தொல்காப்பியம், நிலந்தருதிருவிற் பாண்டியன் அவையில் அதங்கோட்டாசான் என்னும் பேராசிரியர் முன்னிலையிலே, அரங்கேறியதென அறிகிறோம். தமிழரது அரசியல் உருப்பெற்றுவரும் இக்காலத்தே, நம் சுவாமிகள் இயற்றிய இசைத்தமிழ்நூலாகிய யாழ்நூலானது முழு முதற் கடவுளின் பேரவையாகிய இத்திருக்கொள்ளம் பூதூர்த் திருக்கோயிலிலே இயலிசைத்தலைவராகிய ஆளு டைய பிள்ளையார் திருமுன்னிலையிலே அரங்கேற்றப் பெறுகின்றது. ஆயிரம் ஆண்டுகளாக நம் முன்னோர் பெறாத பெரு மகிழ்ச்சியினை யாழ்நூல் அரங்கேற்று விழா வினைச் சிறப்பிக்கவேண்டும் என்னுந் தமிழார்வத்தால், தமிழகத்துப் பல்வேறு இடங்களினின்றும் வந்து குழுமிய தமிழ்ப்பேரறிஞர்களாகிய உங்கள் அனைவரையும் என் உள்ளங்கனிந்த அன்புடன் வரவேற்கின்றேன்.

யாழ்நூலாசிரியராகிய சுவாமிகள் தாம் பதினான்கு ஆண்டுகளாக ஆராய்ந்து கண்ட இசைமுடிபுகளை நம்ம

ஞோர்க்கு எடுத்துரைக்கும் பெருவிருப்புடன் இன்று இங்கு எழுந்தருளப்பெற்றது, தமிழ் மக்களின் தவப்பேறேயாகும். நமது நிகழ்காலச் செயலாகிய இப்பேற்றினால், நம் தமிழகத்தின் சென்றகாலத்தின் பழுதிலாத்திறமும், இனி எதிர் காலத்தின் சிறப்பும் நமக்கு இனிது புலனாகின்றன. சுவாமிகள் கண்டுணர்த்திய கணக்கின்படி புதுவதாக அமைக்கப்பெற்ற முளரியாழ், சுருதிவீணை, பாரிசாத வீணை, சதுர்தண்டிவீணை என்னும் இசைக்கருவிகள் இங்குள்ளன. அரங்கேற்றுவிழா நிகழும் இவ்விரண்டு நாட்களிலும், யாழ்நூலாசிரியராகிய நம் சுவாமிகள் பண்டைத் தமிழர் கண்டுணர்ந்த இசைநுட்பங்களை எடுத்து விளக்குவார்கள்.

அதன்பின்னர் அண்ணல் அடிகளார் தமது நுண்ணிய பேரறிவாகிய மத்தால் இசைக்கடல் கடைந்து, நம்மனோர்க்கு எடுத்தளித்த இன்னமிர்தமாகிய பழந்தமிழிசை உருவங்கள் சிலவற்றை சங்கீத கலாநிதி திரு. பொன்னையா பிள்ளையவர்களின் புதல்வராகிய சங்கீதபூசணம் திரு. க. பொ. சிவானந்தம் பிள்ளையவர்கள் அடிகளார் கருத்தின்படி புதிய இசைக்கருவிகளில் இசைத்துக் காட்டுவார்கள்.

தமிழகத்தாரால் நன்கு மதிக்கப்பெற்ற பெரும் புலவர்களும், இசைவாணர்களும் எமது வேண்டுகோட்கிணங்கி இவ்வரங்கேற்று விழாவினைச் சிறப்பிக்க முன் வந்துள்ளனர்.

நல்லிசை ஞானசம்பந்தர் அருளிய தேவாரத் தமிழில் ஈடுபட்டு, இத்திருக்கொள்ளம்பூதூர்த் திருப்பணியினை ஆர்வத்துடன் நிறைவேற்றிய எனது தந்தையாரவர்களின் பேரன்புக்குரிய நிலையமாகிய இத் திருக்கோயிலிலே, இசைத்தமிழ்நூலாகிய யாழ்நூலினை அரங்கேற்ற இசைந்த

கரந்தைத் தமிழ்ச்சங்கத்தாருக்கு என் உள்ளமார்ந்த நன்றி உரியதாகுக.

எமது வேண்டுகோட் கிணங்கித் தமக்குரிய பல்வகை அலுவல்களையும் பொருட்படுத்தாது செந்தமிழ்த்தாயின் திருவடித்தொண்டினையே பெரிதெனக் கருதி, இவ்விழாவிற்கு வந்துள்ள பெருமக்களனைவருக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

யாழ்நூல் அரங்கேற்றுவிழாவினைச் சிறப்பிக்கவந்த பெரியோர்களுக்கு வேண்டும் இட வசதிகளை இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப, எங்களால் இயன்ற அளவு செய்துள்ளோம். உபசரித்துப் போற்றும் வகையில் எங்களையறியாது குறைபாடுகள் இருத்தல் கூடும். அவற்றை உளங்கொள்ளாது இவ்விழாவினை நன்கு சிறப்பித்தருளும்படி தமிழ்ப் பெருமக்களை வேண்டிக்கொள்கிறேன்.

## யாழ்நூல் தோன்றிய விதம்

திரு. சிதம்பரம் செட்டியார் அவர்கள் இவ்வாறு தமது வரவேற்புரையினை நிகழ்த்தியபின்னர், அடிகள் இசை விளக்கம் பற்றி விரிவுரையாற்றி, யாழ்நூல் வந்த வரன் முறையையும் அதன் சிறப்பியல்புகளையும் பற்றிக் கூறினர்.

அடிகளின் விரிவுரையின் சுருக்கமாக அடிகள் யாழ் நூலிற்கு முன்னுரை எழுதியுள்ளார். அதில் நூலின் வரன்முறையும், தமிழர்களின் தனிப்பெருஞ் சிறப்பும் பொதிந்து கிடக்கின்றன. மேலும் வாழ்ந்துவரும் தமிழர்களும், வாழவேண்டிய தமிழர்களும் ஆற்றவேண்டிய பணியினை அடிகளே தமக்குரியதான இனிய நடையிலே முகவுரையில் கூறியுள்ளார். அம் முகவுரை இங்கு விரிதல் சிறப்புடையதாகும்.

நூலெழுதுவோர் மரபின்வண்ணம் இதுவரையுந் தன்மைப்பன்மையில் வழங்கியதனை நிறுத்திக்கொண்டு தன்மை யொருமையில் நின்று கூறும் இச் சின்மொழிகளுக்கு அறிஞர் செவிசாய்த்தருள்வார்களாக.

ஐயிரண்டு ஆண்டுகளாக நேரங் கிடைக்கும்போதெல்லாம் முயன்று, குருவருளினாலும் இவ்வாராய்ச்சி நூலினை ஒருவாறு எழுதிமுடித்தேன். யாழ்க்கருவி யொழிந்த பிற இசைக்கருவிகளைக் குறித்தும், இசையிலக்கணம், இசைப் பாட்டிலக்கணம், இசைக்கலை வளர்ச்சி யென்னும் பொருள்களைக் குறித்தும், ஆராய்ந்து கண்ட முடிபுகள் சில கையிலுள்ளன. காணவேண்டியன இன்னும் பலவுள. இறைவன் திருவருள் பாலிப்பானாயின் ஏற்ற காலத்திலே அம் முடிபுகள் மற்றொரு நூலாக வெளிவருதல் கூடும்.

இவ் வாராய்ச்சி நடந்துகொண்டிருக்கும்பொழுதே, மதுரைத் தமிழ்ச்சங்கத்திலும், சென்னைப் பல்கலைக் கழகத்திலும், யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட பாசா விருத்திச் சங்கத்திலும், பிற கல்விக்கழகங்களிலும் இப்பொருள் பற்றிய விரிவுரைகள் செய்ய நேர்ந்தது. அவ்வுரைகளைக் கேட்ட அறிஞர் பலர் இவ்வாராய்ச்சி நூலுருவாதலை விரும்பி, எழுதி முடிக்கும்படி என்னைப் பணித்தார்கள். அப்பணிப்பினை மேற்கொண்டு கரந்தைத் தமிழ்ச்சங்கத்து வெளியீடாகிய தமிழ்ப்பொழிலிலே விக்கிரம ஆண்டு மாசித்திங்கள் முதலாகப் "பண்ணும் திறனும்" "குழலும் யாழும்" "எண்ணும் இசையும்" "பாலைத்திரிபு" "சுருதிவீணை" என்னுந் தலைப்பெயர்களைத்தந்து இவ் வாராய்ச்சியினைத் தொடர்பாக எழுதிக்கொண்டு வந்தேன்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்து வெளியீடாகிய செந்தமிழ்ப் பத்திரிகையிலும், "சங்கீத மகரந்தம்" "இசைக்

கிரமம்'' "எண்ணலளவை'' என்னும் தலைப்பெயர்க் கீழ்ச் சில பொருளுரைகளை வெளியிட்டேன். அண்மையில் திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்திலே இரு முறையும், சென்னைநகர் ஒலிபரப்பு நிலையத்திலே ஒரு முறையும் இப் பொருள்பற்றிப் பேசினேன். தமிழ்ப்பொழிலிலும், செந்தமிழிலும், வானொலிப் பேச்சுக்களிலும் வெளியிட்ட உரைகளும் கருத்துகளும் இந்நூலிற் சேர்க்கப்பட்டன. சேர்த்துக்கொள்ள அநுமதித்த அதிகாரிகளுக்கு எனது நன்றியுரியது.

என்னை இப்பணியிலே பெரிதும் ஊக்கிய கரந்தைத் தமிழ்ச்சங்கத் தலைவர் தமிழவேள் திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் இதன் நிறைவு பேற்றினைக் காணுமுன் பிரிந்து சென்றமையினை நினைக்கும்போது என்னுள்ளம் பெரிதும் துயருறுகின்றது. அவர்களது அன்பிற்குரிய நிலையமாகிய இத்தமிழ்ப் பெருமன்றத்திலும், இதனைச்சார்ந்திருக்கும் அகத்தியர் திருமடத்திலும் இருந்து இந்நூலினை எழுதி முடித்தமை அவர்களது பிரிவினலெய்திய மனத்துயரை ஓரளவு நீக்கிவிட்டது.

ஆயிரம் ஆண்டுகளாக மறைந்துகிடந்த அருங்கலை நிதியத்தின் பெருமையினையும், அதனைத் தேடிக் காணப் புகுந்த எனது சிறுமையினையும் ஒப்பவைத்து நோக்கும் சான்றோர் என்னை எள்ளி நகையாடுதல் இயல்பேயாம். வையமென்னை இகழவும், மாசெனக்கெய்தவும், இவ்வாராய்ச்சியினை யான் எழுதத் துணிந்து, பொய்யில் காட்சிப் புலமையினோராகிய இளங்கோவடிகள் தமிழ்த் தெய்வத்தின் திருவடிகளுக்கு அணியாகப் புனைந்த தெய்வக் காவியமாகிய சிலப்பதிகாரத்தின் மாட்சிமையினை என்னுலியன்றவரை உலகிற் றமிழ்நூல்களிலே பரந்து

கிடக்கும் இசைநூன் முடிபுகளை என்போன்ற தமிழ் மாணவர்கள் ஓரளவிற்கு உணர்ந்துகொள்ள இவ்வா ராய்ச்சி உதவுமாயின், எய்தும் பயனும் பெறுதற்குரிய பேறும் அதுவேயெனக் கொண்டு உளமகிழ்வுறுவேன்.

தமிழ்நாடு செய்த தவப்பயனாகத் தோன்றிச் சங்க நூற் செல்வத்தை தமிழுலகிற்கீந்த அறிவுக்கொடைப் பெருவள்ளலும், பெரும் பேராசிரியர், தென்னாட்டுக் கலைச்செல்வர், எழுத்தறிபுலவர் என்னும் சிறப்புப் பெயர் களுக்குச்சிறப்பளித்த பெரும் புலவருமாகிய சாமிநாதையர் அவர்கள் சிலப்பதிகாரத்தினை முதன்முறையாகக் காண்ப தும், என் கையினாலே அதனைத் தீண்டுவதும், எனக்குப் பேருவகையினைத் தரும் செயல்களாக இருந்தன.

அஃதன்றியும் ஈழநாட்டின் குணபாலிலே என்முன் னோர்க்கு உறைவிடமாகிய காரேறுதீவிலே, கடல்சூழ் இலங்கைக் கயவாகு மன்னன் வழிவந்த மன்னர்களாலே நிறுவப்பட்ட பழமையான கண்ணகியார் கோயில் ஒன்று உளது; அதன் வழியாகவும் சிலப்பதிகாரத்தின் மீதுள்ள ஆர்வம் பெருகியது.

கொழும்பு மாநகரிற் கல்விகற்கும் காலத்திலே இலங் கையரசினராலே பெருமதிப்புப் பெற்ற கலைச்செல்வரா கிய கைலாசபிள்ளை முதலியாரவர்களைச் சந்தித்துச் சிலப் பதிகாரத்தைப் பாடங் கேட்கும் பேற்றினைப் பெற்றேன். பரம்பரைக் கலைவாணர் குலத்திலே யுதித்த முதலியாரவர் கள் பழைய இசைமரபு தவறாது கம்பீரமான குரலிலே மங்கலவாழ்த்துப் பாடலினைப் பாடங்கேட்டதும் இன் னும் என் அகச்செவியிலே ஒலித்துக்கொண்டிருக்கிறது.

1924-ம் ஆண்டிலே மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் ஆண்டுவிழாவிற் கலந்துகொள்ளவும் "நாடகத்தமிழ்"

என்னும் பொருள்பற்றி ஒரு விரிவுரை செய்யவும் வசதி ஏற்பட்டது. சங்கத்துக் கௌரவ காரியதரிசியாராகிய திரு. டி. சி. சீனிவாச ஐயங்காரவர்கள் அவ்விரிவுரையினை நூலுருவாக்கித் தரும்படிபணித்தார். "மதங்க சூளாமணி" எனப் பெயரிட்டு, எழுதிக்கொடுத்தேன். சிலப்பதிகாரத்திலுள்ள நாடகநூன்முடிபுகளை ஓரளவிற்கு விளக்குகின்ற அந்நூலினைச் சங்கத்தார் உவந்தேற்று வெளியிட்டார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலே தமிழ்ப் பகுதித் தலைவராகவிருந்த காலத்திலே இசைப்பகுதிக் கல்விமுறையினையும் மேற்பார்வையிடுங் கடமை ஏற்பட்டது. அக்காலத்திலே தஞ்சைத்திருவாளர் க. பொன்னையாபிள்ளையவர்களிடம் கருநாடக சங்கீதமென இந்நாளில் வழங்கும் இசையினது அமைப்பினை ஓரளவிற்கு அறிந்துகொண்டு இவ்வாராய்ச்சியினைத் தொடங்கினேன்.

1936-ஆம் ஆண்டு மாசித்திங்களிலே பழந்தமிழரின் இசை, சிற்பம், கலையறிவு என்னும் பொருள்பற்றிச் சென்னைப் பல்கலைக்கழகத்தின் ஆதரவிலே ஆறு விரிவுரைகள் செய்தேன். அவ்விரிவுரைகளும் 'இந்து' என்னும் ஆங்கிலப் பத்திரிகையிலே வெளிவந்தன. அவற்றைக் கண்ட அறிஞர் பலர் ஆங்கிலத்திலே நூலுருவாக்கித்தரும்படி என்னைக் கேட்டார்கள். ஈழநாட்டிலே ஸ்ரீஇராமகிருஷ்ண சங்கத்து தமிழ்ப்பாடசாலைகள் பதினேழினை நடத்தும் பொறுப்பு என் முழு நேரத்தையும் பற்றினமையினாலே இசையாராய்ச்சி ஓரளவிற்குத் தடைப்பட்டு நின்றது.

பின்பு திருமடத்துப் பெரியோர்கள் இமயமலைச் சாரலிலுள்ள அத்துவைத ஆச்சிரமத்திற்குச் சென்று பிரபுத்தபாரதா என்னும் ஆங்கில மாத வெளியீட்டினுக்கு

ஆசிரியராக இருக்கும்படி பணித்தார்கள். தமிழ்த்தொண்டு செய்தற்கு வேண்டிய வசதி இமயத்திலேற்பட்டது. மலை மகளாகிய எம்பெருமாட்டியின் திருவருளினாலே இசையா ராய்ச்சியும் ஒருவாறு நிறைவேறியது. வெளியிடுங்கால மும் வந்து கைகூடியது.

எனது பிரிய நண்பரும் கோனூர் சமீன்தாரும் ஆகிய திருவாளர் பெ. ராம. ராம. சிதம்பரஞ்செட்டியா ரவர்கள் இந்நூல் சிறந்த முறையிலே வெளிவருவதற்கா வன எல்லாஞ் செய்தார்கள். திருக் கொள்ளம்பூதூர்த் திருப்பணிச் செல்வராகிய, தந்தையாரைப் போல அறிவும், ஒழுக்கமும், அறம் வளர்க்கும் சிந்தையும் வாய்க்கப்பெற்ற இத்தமிழ் அன்பர், சௌந்தரநாயகி சமேத வில்வவன நாத ருடைய திருவருளினாலே எல்லா நலன்களும் எய்தப் பெற்று நீடுவாழ்வாராக.

## திரு. கந்தசாமியின் பாராட்டு

அடிகள் நூலின் வரன்முறைமைபற்றியும், யாழ்க ளின் விளக்கமும் கொடுத்தபின்னர், யாழ்நூல் அரங் கேற்றுவிழாவை ஆக்கிய கரந்தைத் தமிழ்ச்சங்கத்து அமைச்சராகிய திரு. கந்தசாமியவர்கள், அடிகள் கண்டு பிடித்துதவிய யாழ்களின் பெருமையினை யெடுத்துக்கூறி இசைக்கருவிகளை ஆக்கித்தந்த அடிகளாரைப் பாராட்டி னார். அந்தப் பாராட்டுரையுடன் நின்றுவிடாமல் யாழ் நூலினுக்கு அரியதோர் முகவுரையும் எழுதியுள்ளார். முக வுரையிலே அடிகளாரின் திறமை தெள்ளிதிற் புலனாகிறது. அடிகளார் தமிழகத்திற்களித்த அளப்பருஞ் செல்வமா கிய யாழின் வரன்முறையும் தேங்கிக்கிடக்கிறது. ஆதலி னால் அமைச்சரின் முகவுரையிலிருந்து சில பகுதியினை ஈண்டுக் குறிப்பிடுதல் பொருத்தமுடைத்து.

சென்ற பத்தொன்பதாம் நூற்ருண்டில் 1892-ஆம் ஆண்டானது இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்த் திறனையும் தமிழறிஞர் தெரிந்து வளர்த்தற்கு வழிசெய்த சிறப்புடைய யாண்டாகும். சங்கநூற் செல்வத்தைத் தமிழுலகிற்கு வழங்கிய பெரும் பேராசிரியராகிய உ. வே. சாமிநாதையர் அவர்கள் சேரமுனிவர் அருளிய முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தினை, அவ்வாண்டிலேதான் முழு உருவத்துடன் வெளியிட்டார்கள். அந்நூலினைக் கண்ணுற்ற தமிழ்ப்புலவர் பலரும் தமிழராது அறிவுப் பெருஞ்செல்வத்தைத் தாம் பெற்றமை கருதி மகிழ்ந்தாராயினும், அந்நூல் வாயிலாக இளங்கோவடிகள் உலகிற்கு வழங்கியருளிய இசைத்தமிழின் இயல்பினை உள்ளவாறு உணர்ந்து இசைத்து மகிழும் வாய்ப்பின்றி மயங்குவாராயினர். சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்குநல்லார் காலத்திலேயே இசை நாடகத்தமிழ் நூல்களாகிய தொன்னூல்கள் பலவும் வழக்கற்று மறைந்தன என்பது அவரது உரைப்பாயிரத்தாற் புலனும். சிலப்பதிகாரமாகிய பழுதற்ற முத்தமிழின் பாடற்கு விரிவுரை எழுதிய உரையாசிரியர்கள் காலத்திருந்த இசை நுணுக்கம் முதலிய இசைத்தமிழ் நூல்களும் இக்காலத்துக் கிடைத்தில. இனி அந்நூல்களின் உதவிகொண்டு அடியார்க்கு நல்லார் எழுதிய உரைப்பகுதிகளினுல் காணப்படவில்லை. இந்நிலையில் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் அருமையாகப் பொதிந்துவைத்த இசைக்கலை நுட்பத்தினை யாம் உணர்தல் எவ்வாறு எனத் தமிழறிஞர் பெரிதுங் கவல்வாராயினர். இக்கவற்சி நீங்கச் சிலப்பதிகாரம் வெளிவந்த 1892-ஆம் ஆண்டிலேயே அந்நூலிற் பொதிந்துள்ள இசைத் தமிழ் நுட்பங்களை இனிதெடுத்து விளக்குதற்குரிய முத்தமிழ்ப்புலவர் ஒருவரை இறைவன் திருவருள் தோற்றுவித்தது.

ஈழநாட்டின் கிழக்குப்பகுதியில் மட்டக்களப்பிலுள்ள காரேறுமூதூரில் வாழ்ந்த வேளாண்செல்வராகிய சாமித் தம்பியார்க்கும், அவர்தம் மனைத்தக்க மாண்புடையாராகிய கண்ணம்மையார்க்கும் தவப்புதல்வராக 1892 மார்ச்சு 29-ஆம் நாளில் முத்தமிழ்ப் புலவராகிய அருட்டிரு விபுலாநந்த அடிகளார் தோன்றினார்கள்.

இமயமலைச் சாரலிலுள்ள அத்துவித ஆச்சிரமத்திற்குச் சென்று 'பிரபுத்த பாரதா' என்னும் ஆங்கில மாத வெளியீட்டிற்கு ஆசிரியராக அமர்ந்து, தொண்டாற்றும் பொறுப்பு விபுலாநந்த அடிகளார்க்கு உரியதாயிற்று. இமயத்தில் தங்கி இருந்தபொழுது, பல்லாண்டுகளாக ஆராய்ந்துவந்த இசைத்தமிழ் ஆராய்ச்சியினைத் தொடர்ந்து முடித்தற்கேற்ற வசதி ஏற்பட்டது. பின்னர் ஈழநாட்டுப் பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பேராசிரியராகத் தொண்டாற்ற இயைந்தமை, இவ்விசையாராய்ச்சி நிறைவுபெறுதற்குப் பெருந்துணை செய்தது. தமிழ்த்தெய்வத்தின் திருவருளால் பழந்தமிழ் யாழ்க்கருவியினை மீண்டும் உருவாக்கிப் பண்டையோர் வளர்த்த இசைநலங்களையெல்லாம் இசைத்துக்கேட்டு மகிழ்தற்குரிய—இசைத்தமிழ் முதல் நூலாக யாழ்நூல் என்னும் இவ்வரும்பெரு நூலினை அடிகளார் தமிழகத்துக்கு வழங்கியுள்ளார்கள்.

'நரம்பின் மறை'யெனத் தொல்காப்பியரும், 'இசையோடு சிவணிய யாழின் நூல்' எனக் கொங்குவேளிரும் குறிப்பிட்ட யாழ்நூற் பொருள், இருந்த இடம் தெரியாது மறைந்தொழிந்த இந்நாளிலே விழுத்தகு பெரும்புலமையினாலும், தம் உயிர்க்குயிராய் உள்நின்றுணர்த்திய திருவருளுணர்வினாலும் பண்டைத் தமிழ்நூல்களிலுள்ள அரும்பொருள்களை நுண்ணிதிற் கண்டுணர்ந்து, இவ்விசைத் தமிழ்நூலினை நிறைவு செய்துள்ளார்கள். சிலப்பதிகாரத்

தில் அரங்கேற்று காதையினுள்ளே, யாழ்ஆசிரியன் அமைதி கூறும் இருபத்தைந்து அடிகளுக்கு இயைந்த தொரு விரிவுரையாக இவ் யாழ்நூல் அமைந்துள்ளது.

இசைத்திறமனைத்தும் பிறர் கருதுமாறுபோல முனிவர் முதலியோரால் ஒருகாலத்துத் திடீரெனப் படைக்கப் பட்டன. ஆகமங்கள் தோன்றி மண் தோன்றாக்காலத்தே வில்லோடு முதல் தோன்றி, மூத்த குடிமக்கள் காலந் தொடங்கி, நாளும் நாளும் சிறுகச்சிறுக வளர்ந்து, பண் பட்ட வரலாற்றினை இவ் யாழ்நூல் தெளிய விளக்குவ தாகும். அன்றியும், இசைத்தமிழ் நூல்களெல்லாம் வழக் கற்று மறைந்தன எனப் பழைய வரலாறு கூறி இரங்கிய கவற்சியினை நீக்கி, அங்ஙனம் இழந்த பெருநிதியத்தை மீண்டும் செயற்றிறம்உணர்த்தும் நூலாகவும் இந்நூல் திகழ்கின்றது.

இதுகாறும் சிலப்பதிகாரத்தைப் பயில்வோரனைவரும் அதன்கட் கூறப்பெற்ற இசைப்பகுதிகள் நீங்கலாகப் பயில் வது வழக்கம். பல்கலைக் கழகத்தாரும், சிலப்பதிகாரத் தைப் பாடமாக அமைக்குங்கால் அரங்கேற்று காதை நீங்க லாகப் பாடத்திட்டத்தினை வகுத்து வருவது வழக்கம். இங்ஙனம் புலவர்களாலும் பல்கலைக் கழகத்தாராலும் அறி தற்கு இயலாதனவென ஒதுக்கப்பெற்ற இசைநூற் பொருள்களை விளங்க எடுத்துரைக்கும் இசைத்தமிழ் முதல் நூலாக இவ் யாழ்நூல் வெளிவருவது தமிழகத்தாரது நற் பேறேயாகும்.

ஆயிரம் ஆண்டுகளாக வழக்கற்று மறைந்த இசைத் தமிழாகிய அருங்கலைநிலையத்தின் பெருமையினையும், அதனைத் தம் நுண்ணுணர்வால் ஆராய்ந்து கண்டுணர்ந்த பல்வகைக் கலைகளும், இவ்விசை நூலாராய்ச்சிக்குத் துணை

செய்தன என்னும் உண்மை இந்நூலைப் பயில்வார்க்கு எளி
திற் புலனாம். முத்தமிழ்ப்புலமை வித்தகராகிய இளங்கோ
வடிகள் தம் இளமைப்பருவத்தே அரசியற் செல்வத்தைத்
துறந்து "சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து அந்தமில்
இன்பத்து அரசாள் வேந்து" எனக் கண்ணகியாரால்
பாராட்டப்பெறும் சிறப்பெய்தி செந்தமிழின் முத்திறனும்
செழிக்கச் சிலப்பதிகாரத்தை யியற்றியருளியதுபோலவே
வெறுத்துத் துறவுநிலையில் நின்று அரும்பெறல் நூலாகிய
இவ் யாழ்நூலினைத் தமிழுலகுக்கு உதவியுள்ளார்கள்.
அடிகளாரை இவ் விசைத்தமிழாராய்ச்சியிற் பெரிதும்
ஊக்கிய செந்தமிழ்ப்புரவலர், தமிழவேள் உமாமகேசு
வரம் பிள்ளையவர்களின் அன்பிற்குரிய நிலையமாகிய கரந்
தைத் தமிழ்ச்சங்கத்தின் சார்பாக இவ் யாழ்நூல் வெளி
வருவது பெரிதும் பொருத்தமுடையதேயாகும்.

இலங்கைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்பேராசிரிய
ராகத் தமிழ்த்தொண்டு செய்துவருகின்ற அடிகளார்
பண்டைத்தமிழில் இசைநலன் உலகமெல்லாம் பரவும்
வண்ணம் இவ் யாழ்நூலினை ஆங்கிலமொழியில் மொழி
பெயர்த்து வெளியிடுவதுடன் ஞாலமளந்த மேன்மைத்
தெய்வத் தமிழ்ப்புலமை உலகமெல்லாம் பரவ, ஆங்கிலத்
திலும் தமிழிலும் இன்னும் இதுபோன்ற ஆராய்ச்சிநூல்
களை இயற்றித் தமிழகத்துக்கு உதவியருள வேண்டு
கிறேன்.

புலமைக் கருவூலமாகிய அடிகளாரருளிய யாழ்நூற்
பொருளினைத் தமிழறிஞர் யாவரும் நன்கு பயின்று நாளும்
இன்னிசையால் தமிழ்வளர்த்து, நலம் பெறுக எனத்
தமிழ்த்தெய்வத்தின் திருவடிகளை வாழ்த்தி வணங்கு
கின்றேன்.

"இன்னிசைதேர் யாழ்நூ லிசைபரப்பி ஞன்புலமை
மன்னு விபுலாநந்த மாமுனிவன்—தொன்மைத்
தமிழ்ப்புலமை மல்கத் தமிழ்வளர்த்து வாழ்க
இமிழ்கடல்சூழ் ஞாலத் தினிது."

## விழா நிறைவேற்றம்

சென்னை மாகாணக் கல்விஅமைச்சராக இருந்த திரு. தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார், திரு. ஆர். பி. சேதுப்பிள்ளை ஆகியோர் அடிகளின் சலியாத உழைப்பை யும், தமிழகத்தில் மறைந்த யாழ் மீண்டும் கிடைப்பதற் காக ஆற்றிய அரும்பெரும் பணியினையும் பாராட்டிப் பேசினுர்கள். தமிழ்மக்களின் கைகளிலே யாழ்நூல் என்றென்றும் வீற்றிருக்கச்செய்த அடிகளாரைத் தமி ழகம் ஒருபோதும் மறவாதென்று அறிஞர்கள் பாராட்டிப் பேசலானுர்கள்.

சங்கீத பூசணம் திரு. க. பொ. சிவானந்தம் பிள்ளை யவர்கள், அடிகளார் கண்டு அறிந்து அளித்த பாரிசாத வீணையிலும், சதுர்தண்டி வீணையிலும் சங்கராபரணம், அரிகாம்போதி, பந்துவராளி, மாயாமாளவகௌளை, தான மூர்த்தி, காயகப்பிரியா, தவளாம்பாரி முதலிய தாளவரம்புகளை இசைத்துக்காட்டி விழாவிற்குத் தனிச் சிறப்பளித்தார்.

பண்டையயாழின் ஒலியைப் பரப்பி ஆளுடையபிள்ளை யாரைக் கௌரவித்ததின் மூகமாக அடிகளார், திரு. சிவானந்தம் பிள்ளையவர்களுக்கு "வீணை வித்தகன்" என்னும் விருதினைச் சூட்டிப் பெருமைப்படுத்தினுர். திரு. அவிநாசிலிங்கம் செட்டியார் 'வீணை வித்தக'னெனும் விருதினைப் பொற்பூவுடன் சூட்டிப் பெருமைப்படுத்தினுர். அத்துடன் முதலாம்நாள் விழா இனிது நிறைவெய்தியது.

மறுநாள் அடிகளார் இசைத்தமிழ்ப்புலவர்கள் கூடிய பேரவையில் வந்தமரவும், இரண்டாம் நாள் விழா ஆரம்பமாகியது. நாவலர் சோமசுந்தர பாரதியார், யாழினால் தமிழகம் அடைந்த பெருமையினையும், அதனால் அடிகளாரின் பணி பரவிய முறைமையினையும் தமது விரிவுரையில் குறிப்பிட்டார். மேலும் யாழ்நூல் கிடைக்கப் பெற்றது தமிழகத்தின் பாக்கியமேயென்று அடிகளாரைப் பாராட்டினார்.

பின்னர்க் குமரன் ஆசிரியர் திரு. சொ. முருகப்பனாரும் அடிகளாரைப் பாராட்டிப் பேசினார். 'அடிகளாரது முத்தமிழ்ப்புலமையினால் மறைந்தொழிந்த யாழ் மீண்டும் தமிழகத்திற்குத் கிடைத்தமை பெரும்பேறே' என்று பாராட்டியதுடன், அடிகளார்க்கு ஓர் பாமாலை சூட்டு முகத்தால் சிறந்த விரிவுரையினையும் நிகழ்த்தினார்.

தமிழ்ப் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அடுத்து, அடிகளாரையும் அவர் கண்டுபிடித்த யாழினையும், அதனால் தமிழகம் பெற்ற பயனையும் சிறப்பாக எடுத்துக்காட்டி, அடிகளாரின் ஒப்புயர்வற்ற ஆராய்ச்சியினை வியந்து பாராட்டிப் பேசினார்.

கடைசியாக வித்துவான் ஔவை. துரைசாமிப் பிள்ளை, அடிகளின் இடைவிடாத பதினான்காண்டாராய்ச்சி யாழ்நூலுருவாகத் தமிழர்கட்குக் கிடைக்கப்பெற்றது பெரும்பேறே என்ற முறையில், மொழிக்கு அடிகளார் ஆற்றிய தொண்டுகளை விரிவாக எடுத்துரைத்தார்.

பிற்பகல் விழாவிலே சென்னைப் பல்கலைக்கழக இசைப்பேராசிரியர் சாம்பமூர்த்திஐயர் அடிகளாரின் யாழ்நூலிற்கண்ட சில ஆழ்ந்த உண்மைகளை எடுத்துக் காட்டிப் பேசினார். அன்னார் யாழ்நூலில் எடுத்துக்

கொண்ட பொருளைப் பின்னர் அடிகளார் தமது விரிவுரையில் விளக்கிக் கூறினார்.

தமிழ் விற்பனர்களின் பேச்சுக்களில் ஆழ்ந்திருந்த அவையினோரை, வீணைவித்தகர் சிவானந்தம்பிள்ளையவர்கள், யாழ்நூலிற்கண்ட கணக்கின்படி யமைந்த சுருதி வீணையில், பண்டைத்தமிழர் இசையுருவாகிய ஏழ் பெரும் பாலைகளைக் கிரகசுவரம் மாற்றி இசைக்கும் முறைமையினை இசைத்து அனைவரையும் இசைவெள்ளத்தினுள் ஆழ்த்தினார்.

இசையில் மயங்கி இருந்தவர்களை வித்துவான் வெள்ளைவாரணனார் யாழ்நூற்பெருமை பற்றிப் பேசி அடிகளாரைப் பாராட்டினார். இறுதியாகக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்து அமைச்சரான திரு. கந்தசாமியவர்கள் யாழ்நூல் அரங்கேற்றுவிழாவிற்கு வந்திருந்து சிறப்பித்த பெருமக்களுக்கும், யாழ்நூலை வெளியிட்ட திரு. சிதம்பரஞ் செட்டியாருக்கும், அன்னாரின் குடும்பத்தினருக்கும், விழாவிலே சொற்பொழிவுகள் ஆற்றிய அறிஞர்களுக்கும், இசைவெள்ளத்தினைப் பெருக்கெடுத்தோடச் செய்த கலாமணியவர்களுக்கும், கரந்தைத் தமிழ்ச்சங்கச் சார்பில் நன்றி கூறியதுடன், யாழ்நூல் அரங்கேற்றுவிழா இனிது முடிவெய்தியது. அன்றிரவு ஆளுடைப்பிள்ளையாரை எழுந்தருளச் செய்து தெருவீதி உலாவுடன் விழா பூர்த்தியாகியது.

---

## க௰. மறைவு - - - - -

யாழ்நூல் அரங்கேற்றுவிழா இனிது நிறைவெய்தி யதைக் கண்ட அடிகளார், பின்னும் சில நாட்கள் யாழ் நூல் சம்பந்தமாகத் தாயகத்தில் தங்கியிருந்து 1947-ம் ஆண்டு ஆனித்திங்கள் ௩௦-ஆம் நாள் கொழும்பு மாநகரம் திரும்பினார்.

யாழ்நூல் அரங்கேற்று விழாவிற்குப் புறப்படுவதற்கு முன்னரே அடிகளாரின் உடல் நோயுற்றிருந்தது. அந் நோயினைப் பொருட்படுத்தாது தாயகம் சென்று யாழ்நூலை அரங்கேற்றினார். முன்னரே, சோர்வடைந்திருந்த உடல், விழாவில் கலந்து, யாழ்நூலின் தொடர்பான முயற்சிகளில் ஈடுபட்டிருந்ததனால், கொழும்பு வந்துற்றபோது நோய் சற்று உரங்கொண்டது. இதனால் அடிகளாரின் உடம்பு சோர்ந்ததே தவிர, எண்ணப்பாங்கிலும், மனதிலும் எவ் வகைச் சோர்வும் ஏற்படவில்லை. ஆதலினால் யாழ்நூலினை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பதற்கு வேண்டிய முயற்சி களில் ஈடுபடலானார். அம்முயற்சியுடன் நின்றுவிடாமல் சைவசித்தாந்த நூல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதற் கும், உலகப் பொதுநூலான திருக்குறளுக்கு ஓர் புதிய உரையினை எழுதுவதற்காகவும் வேண்டிய முயற்சி எடுத் தார். களைப்படைந்திருந்த உடம்பிற்கு இம்முயற்சிகள் மேலும் களைப்பை உண்டாக்கியது. ஆதலினால் நோயின் தாக்குதலுக்கு அடிகளார் ஆளாகினார்.

அதன் பயனாகக் கொழும்பு மருத்துவ விடுதி யொன் றில் சிகிச்சை பெறலானார். அடிகளாரின் உடம்பினை

நன்கு ஆய்ந்த மருத்துவர்கள், பூரண ஒய்வும், அமைதி நிறைந்த சூழ்நிலையும் வேண்டுமென்றனர். ஆகவே ராமகிருட்டிண மடாலய அன்பர்கள் தக்கதோர் அமைதி குடிகொண்ட இடத்தினை அடிகளார்க்கு ஏற்படுத்தினார்கள்.

எந்த அமைதி வேண்டுமென்று பலரும் பாடுபட்டனரோ, அந்த அமைதியினை அடிகளாரின் உயிர் நாடியது. இன்னும் பல காலம் நிலைத்து வாழ்ந்து தமிழ்மொழிக்குப் பணிபுரிய வேண்டுமென விரும்பிய மக்களிடம், பிரிய மனமின்றி அடிகளார் 1949-ம் ஆண்டு ஆடித்திங்கள் 19-ம் நாள் சனிக்கிழமை இரவு ஒன்றரை மணிக்கு நிலைப்பான பிரியாவிடை பெற்றுக்கொண்டார். யாழ்நூலைத் தந்து தமிழகத்திற்குப் பெருமை ஈட்டிய அடிகளார், தமது ஐம்பத்தைந்தாவது அகவையில் இறைவன் திருவடி நீழலை யெய்திவிட்டார்.

தமிழ்த்தாய் கண்ணீர் விட்டுக் கதறினள்; தமிழ் அன்பர்கள் அழுது புலம்பினார்கள்; அடிகளாருடன் சேர்ந்து பழகியவர்கள் வாய்விட்டு அரற்றினார்கள். அந்த வகையிலே, அடிகளாரின் உற்ற மாணவர்களுள் சிறப்பெய்திய பண்டிதர் வி. சி. கந்தையா அவர்கள் இசைத் தமிழிலே அழுது புலம்பினார். இரங்கற் பாடல்கள் என்னும் பகுதியில் காண்க.

இலங்கையின் சோதி மறைந்துவிட்டதென்று அன்பர்கள் அரற்றினார்கள். மட்டக்களப்பின் வீரப் புதல்வன் மண்ணுலகைத் துறந்துவிட்டானென்று கிழக்கிலெங்கும் சோகக்குரல்கள் எழுந்தன. அனைவரையும் பரதவிக்கவிட்டு அடிகளின் ஆருயிர் இறைவனுடன் இரண்டறக் கலந்துவிட்டது.

1949-ம் ஆண்டு ஆடித்திங்கள் 19-ம் நாள் ஒன்றரை மணிப்பொழுது இலங்கைக்கோர் மகத்தான ஈடுசெய்ய முடியாத செயலைக்கொடுத்துவிட்டது. மறுநாள் ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் மூன்றுமணி அளவில், அடிகளின் பூதவுடல் வெள்ளவத்தையிலுள்ள இராமகிருட்டிண மடாலயத்தில் எல்லோருடைய காட்சிக்காகக் கொண்டுவரப் பட்டது.

மலர்மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட மடாலய மண்டபம் அன்று அமைதியாகக் காணப்பட்டது. எந்தப் பொழுதிலும் பொலிவுடன் விளங்கும் அம்மண்டபம் அன்று துன்பக்கடலில் ஆழ்ந்து கிடந்தது. மண்டபத்தின் நடுவிலே வெள்ளைநிறப் பேழையில் அடிகளின் உடல் வைக்கப்பட்டது.

பொதுமக்கள் தங்களது கடைசி வணக்கத்தை மலர்களாலும், மலர் வளையங்களாலும் செலுத்தினார்கள். அடிகளார் இறைவனுடன் இரண்டறக்கலந்த செய்தி தீவெங்கும் பரவியது. அதனால் பற்பல இடங்களிலிருந்த தமிழ் அன்பர்களும், மட்டக்களப்பிலிருந்த அடிகளாரின் உறவினரும் மடாலயத்திற்கு வந்தனர்.

இலங்கைப் பல்கலைக்கழக மாணவர்களும், பேராசிரியர்களும் அடிகளாரின் உடலைக் காவல்காக்கும் முகமாக மடாலயத்தின் வெளிப்புறத்தில் சூழ்ந்திருந்தனர்.

அடிகளாரின் நல்லுடலை மதிப்பாகக்கொண்ட மணி மண்டபத்தில் தேவார திருவாசகங்களின் இன்னிசை முழக்கம் யாண்டும் நிறைந்து பெருகியது. அடிகளார் உடலை அவர் பிறந்த நாட்டிற்குக் கொண்டுபோகவேண்டிய ஏற்பாடுகள் நடைபெற்றன. அந்த வேளை அடிகளாரைப் பற்றிப் பல அன்பர்கள் மனங்கசிந்து அழுதழுது பேசி

னூர்கள்; அன்னூர்களுள் சிறப்பாக திரு. கே. எஸ். அருள் நந்தி அவர்கள் கண்ணீரைச் சோரவிட்டு ஒவ்வொரு வார்த்தையாக அடிகளாரின் பிரிவைப்பற்றி எடுத்துரைத் தார்.

அடிகளார் நம்மை விட்டகன்றுவிட்டார். அதனால் இலங்கைக்கு மட்டுமன்றி இந்திய நாட்டிற்கும் ஈடுசெய்ய முடியாத நட்டமாகும் என்ற வகையிலே அடிகளாரின் தொண்டுகள் பலவற்றை எடுத்துக்காட்டித் தாங்கமுடி யாத வருத்தத்தோடு உரைத்தார்.

அடிகளார் இறைவனடி சேர்ந்தகாலையில்தான் நாமக் கல் கவிஞர் இலங்கை வந்திருந்தார். அடிகளாரைக்கண்டு உரையாடலாமென்ற நோக்குடன் வந்தவரை அடிகளாரின் உயிரற்ற உடல்தான் வரவேற்றது. ஆதலினால் கவிஞர் அடிகளாரைக் குறித்து மிக்க துன்பத்துடன் பேசலானார்.

ஈழ வளநாட்டிலே, பாலும் தேனும் ஓடும் மட்டக் களப்பின் பேறாகத் தமிழ் நாட்டிற்குப் பெருமை கொடுத்த சுடர் இன்று அணைந்துவிட்டது; அடிகளாரின் பிரிவு, தமிழன் எங்கெங்கு வாழ்கிறானோ அங்குள்ளவர்களுக் கெல்லாம் ஈடுசெய்யமுடியாத நட்டமாகும். அடிகளாரின் மறைவுக்கு உண்மையாகத் துக்கப்படவேண்டியவன் நானேதான். அடிகளாரை நான் திருச்சி வானொலி நிலையத்தில் கவி அரங்கம் நடைபெற்றபோது காண நேர்ந் தது. அவருடன் அளவளாவினேன். ஈழநாட்டிற்கு அவசியம் ஓர் தடவை வந்துதானாகவேண்டு மென்று கேட் டுக்கொண்டார். அதற்கிணங்க வந்தேன். நான் வந்த வேளையில் அடிகளார் நோய்வாய்ப்பட்டிருப்பதாக நண்ப ரொருவர் கூறினார். இன்றோ அடிகளார் சுவர்க்கவாசம் செய்யப் புறப்பட்டுவிட்டார். அவர் பிரிவு நமக்கு அளவிட

முடியாத துக்கமேதான். என்றாலும் அடிகளாரின் ஞாபகார்த்தமாக அவர் விட்டுச்சென்ற சேவைகளை நாம் பூர்த்தி செய்யவேண்டும்.

அடிகளார் துறவொழுக்கத்தை மேற்கொண்டிருந்தும் தாய்மொழியாம் தமிழ்மொழிக்கும், அரும் பெருங் கலைகளுக்கும் சிறந்தவகையிலே பணிபுரிந்தார். பல மொழிகளிலே பாண்டித்தியம் பெற்றிருந்தார். ஆதலினால் அந்த மொழிகளிலே தமிழின் பெருமையை எங்கும் பரப்பினார். தமிழிற்கு அழியாத வெற்றி ஈட்டிக்கொடுத்தார்.

அடிகளார் தமது பெயரை யாழ்நூலிலே பொறித்து விட்டார். பண்டைத்தமிழர்கள் கண்டுணர்ந்த யாழ் மறைந்தொழிந்தது. அதனைத் - தமிழகத்திற்கு மீண்டும் வழங்கிய பெருமை அடிகளார்க்கு மட்டுமே உரியதாகும்.

ஆங்கிலப் புலவரான சேக்ஸ்பியரின் நாடகக்கலையை ஆங்கிலத்தில் எவ்வாறு அடிகளார் சுவைத்து மகிழ்ந்தாரோ அதேபோல் தமிழிலும் சுவைத்து மகிழத்தந்த 'மதங்க சூளாமணி' என்னும் நூல் தமிழர்களால் பெரிதும் மதிக்கப்பட்டது. வாழ்நாள் முழுதும் தமிழிற்குத் தொண்டு புரிந்து வெற்றிகண்ட அடிகளாரின் ஆத்மா சாந்தியடைய ஈசனைப் பிரார்த்திப்போமாக.

இவ்வாறு கவிஞர் தம் உள்ளத்துணர்ச்சியை வெளியிட்டபின்னர், தென்காசியைச் சேர்ந்த திரு. அருணாசலம் பிள்ளையவர்கள் உருக்கத்துடன் அடிகளாரைப் பற்றிப் பேசலானார்.

மாலை ஆறுமணிப்பொழுதில் அடிகளாரின் நல்லுடல் இருந்த பேழையை, மலர்மாலைகளினால் அழகுறுத்திய ஊர்தியிலே வைத்து ஊர்வலமாகக் கோட்டைப் புகை வண்டி நிலையத்திற்குக் கொண்டு சென்றார்கள்.

புகைவண்டி நிலையத்திலே அடிகளாரின் உடலைக் கடைசிமுறையாகக் காணப் பல அன்பர்கள் குழுமி நின்றார்கள். எல்லோருடைய வணக்கத்துடன் அடிகளாரின் உடலம் புகைவண்டியில் வைக்கப்பட்டது. டாக்டர் கணபதிப்பிள்ளை, சுவாமி நடராசானந்தர், சுவாமி சித்தாத்மானந்தர், திரு. இராசவரோதயர் முதலியோர்களும் பல்கலைக்கழகத்துப் பல மாணவர்களும் வண்டியில் ஏறிக் கொண்டார்கள். அடிகளாரின் பிறந்த நாடான மட்டக்களப்பை நோக்கி வண்டியும் நகரலாயிற்று.

திங்கட்கிழமை காலை மட்டக்களப்புப் புகைவண்டி நிலையத்திலே எள் போட்டாற்கூட விழ முடியாதவாறு மக்கள் கூடி இருந்தார்கள். தங்களது நாட்டின் உத்தமப் புதல்வருக்கு இறுதிவணக்கம் செலுத்தப் பல திக்கிலுமிருந்து அன்பர்கள் திரளாக வந்திருந்தனர். எண்ணிக் கணக்கிட முடியாத மக்களின் கூட்டத்தை, மட்டக்களப்பின் சரித்திரத்தில் முதல்முறையாக அன்றுதான் காண முடிந்தது. தமிழகத்தின் பெருமைக்கு வித்திட்ட முத்தமிழ்ப்புலவரின் புகழைப் பேசாதவர் அன்றில்லை. எங்கும் விபுலாநந்தர், சுவாமி, புலவர் என்ற வார்த்தைகளே தென்றலிலே திரிந்தன.

அன்றைய மக்கள்கூட்டத்தில் தமிழர்கள் மட்டும் நிறைந்திருக்கவில்லை. மட்டக்களப்பைத் தாயகமாகக் கொண்ட முஸ்லீம்கள், பௌத்தர்கள், கிறித்துவர்கள் ஆகிய அனைவரும் சாதி சமய பேதமின்றிக் கலந்து கொண்டனர். மட்டக்களப்பு நகரிலிருக்கும் பதினொன்கு பள்ளிக் கூடங்களின் மாணவ மாணவிகளும், ஆசிரியர்களும் பாதையின் இருமருங்கிலும் அணிவகுத்து நின்றனர். வணிக நிலையங்கள் அனைத்தும் மூடப்பட்டன. சிற்றுண்டிச்

சாலைகளெல்லாம் அடைக்கப்பட்டன. நீதிமன்றம் அரசாங்க அலுவலகங்கள் வழக்கத்துக்கு முன்னதாகவே மூடப்பட்டன. எங்கும் கறுப்புக்கொடிகள் பறந்தன. தூயவெள்ளைநிற ஆடையிலே துக்கத்தினைத் தெள்ளெனக் காட்டும் கறுப்புச் சின்னங்கள் பொருத்தப்பட்டிருந்தன. மட்டக்களப்பு தன் அருமருந்தன்ன நற்புதல்வரை வருத்தத்தோடு வரவேற்க முற்பட்டது.

வழக்கமான நேரத்திற்கு வரும் புகைவண்டி, அன்று தாமதமாகிக் காலை பத்துமணி அளவில் வந்து சேர்ந்தது. புகைவண்டி நிலையத்திலிருந்தே ஊர்வலம் தொடங்கியது. அடிகளாரின் உடலம் தாங்கப்பட்ட பெட்டியின் முன்னும் பின்னுமாக ஏறத்தாழ நான்குகல் தொலைவரை மக்கள் தொடர்ந்து வந்துகொண்டிருந்தனர்.

மட்டக்களப்பு ஆசிரியகலாசாலை மாணவ மாணவிகள் பேழையின் முன்னும் பின்னும் தொடர்ந்தவாறு தேவாரம், திருவாசகம், சிவபுராணம் முதலியன ஓதினார்கள். இடைக்கிடை சங்கு சேகண்டி முதலிய வாத்திய முழக்கங்களுடன் ஊர்வலம் தொடங்கி விவேகானந்த வித்தியாலயத்தை அடைந்தது. அங்கே அடிகளின் பூத உடல் பொதுமக்களின் காட்சிக்காக இதற்கென ஆக்கப்பட்ட மேடையிலே வைக்கப்பட்டது.

சொந்த நாட்டு மக்களுடன் யாழ்ப்பாணம் திரிகோணமலை முதலிய இடங்களிலிருந்து வந்த மக்களும் அடிகளாரின் உடலத்திற்கு இறுதிவணக்கம் செலுத்தினார்கள். அடிகளாரின் உறவினர்களிற் சிலர் அன்னாரின் பிறப்பிடமான காரேறுமூதூரில் கல்லறை அமைக்கவேண்டுமென்று விரும்பினார்கள். அந்த விருப்பிற்கு அடிகள்

வாழ்ந்த காலையிற் சொன்ன மணிவாசகங்களை நினை வுறுத்தினார்கள்.

அடிகளார் தம் உயிரினும் மேலாக விவேகானந்த வித்தியாலயத்தைப் பேணி வளர்த்துக் காத்துவந்தார். தம் வளர்ப்புக் குழந்தை என்றுகூடக் கூறி இருக்கிறார். அத்தகைய விவேகானந்த வித்தியாலயத்திலே தமது உடலை அடக்கம் செய்யவேண்டுமென்று சொல்லி இருந் தார். உண்மைதான்; அடிகளார் முற்றுந்துறந்த முனிவர் அன்னாருக்கு உற்றார் உறவினர் எல்லாரும் நம் தமிழகத்து மக்களாகும். அப்படி இருக்கையில் அடிகளார் எவ்வாறு காரேறு மூதூருக்கு மட்டும் உரியவராகக் கூடும்? அடிக ளாரின் அரும்பெரும் பணியின் பயனாக உருப்பெற்று என்றென்றும் அடிகளாரை நினைவுறுத்திக் கொண்டிருக் கும் விவேகானந்த வித்தியாலயத்திலே அடிகளார்க்குக் கல்லறை அமைப்பது சாலவும் சிறந்ததாகுமென்று பெரி யோர்கள் தீர்மானித்தனர்.

பொதுமக்களின் கடைசிவணக்கத்திற்குப் பின்னர்ப் பிற்பகல் மூன்றுமணிப்பொழுதில் விவேகானந்த வித்தி யாலயத்திலிருந்து மீண்டும் ஊர்வலம் தொடங்கியது. ஆசிரிய மாணவிகள் காவிக்கொடி தூக்கியவாறு இருநிரை யாக அணிவகுத்து முன்னே சென்றனர். அவர்களின் பின்னால் அடிகளாரின் உடலைத்தாங்கிய ஊர்திசென்றது. அதற்குப்பின்னால் ஆசிரிய மாணவிகள் அணிவகுத்துச் சென்றனர். இவர்களைத் தொடர்ந்து பெண்கள் அணியாகச் சென்றனர். கடைசியாகப் பெரியவர்களும், தாய்மார் களும், பொதுமக்களும் சென்றார்கள். ஊர்வலத்திலே தேவார திருவாசகங்களின் ஒலிகள் எழுந்தன. சாம்பிராணி ஊதுவத்திப்புகை பாதைகள் இருமருங்கிலும் கமழலா

யிற்று. ஒவ்வொரு இல்லந்தோறும் நிறைகுடம் வைத்து வழிபாடு செய்தனர்.

ஊர்வலம் நாவற்குடா நொச்சிமுனை மஞ்சந்தொடு வாய் முதலிய ஊர்களுக்கு நடுவாகச் சென்று மறுபாதையின் வலமாக இரவு ஏழரைமணியளவில் விவேகானந்த வித்தியாலயத்தை அடைந்தது. அங்கு அடிகளார் முன்னர் இருந்து வந்த சிவபுரி ஆச்சிரமத்தில் மீண்டும் ஒரு மணிப் பொழுது பொதுமக்களின் வணக்கத்திற்காக வைக்கப்பட்டது.

அடிகளார் விவேகானந்த வித்தியாலயத்தில் பணி ஆற்றிய காலையில் பெரும்பாலும் மாணவர்களைக் கட்டிடத்தின் முன்னுள்ள ஆலமர நிழலிலே வைத்துப் பாடம் சொல்லிக் கொடுப்பார். அம்மரமும் அதன் நிழலும் அவருக்கு உறுதுணை புரிந்தன. ஆதலினால்தான் அடிகளாரின் அன்புக்குரித்தான ஆலமரத்தின் கீழ் கல்லறை வைப்பதற்காக வேண்டிய ஒழுங்குகள் செய்யப்பட்டன. மின்சார ஒளிவிளக்குகளால் அவ்விடத்தை அழகுறுத்தி அடிகளாரின் உடலம் தாங்கிய பெட்டியை வைத்துச் சிறப்பான நீராடல் செய்யப்பட்டது. பின்னர் அடிகளாரின் பணியினைப் பௌத்த, கிறித்துவ, முஸ்லீம் தமிழ்அன்பர்கள் மனங்கசிந்து பேசலானார்கள். தனிப்பாடல்களும், தேவாரங்களும், இரங்கற்பாக்களும் பாடப்பெற்றன. பின்னர் வழிபாடு தொடங்கியது. பௌத்தசமயத்தவர்களின் ஆகமங்களிலிருந்து சிங்கள, பாளிமொழிகளில் வழிபாடு செய்தார்கள். பகவற்கீதையிலிருந்து சில சுலோகங்கள் படிக்கப்பட்டன. குர்ஆன் வழிபாட்டுப் பாடல்கள் பாடப்பட்டன. கிறித்துவ வேதாகமத்திலிருந்து பொருத்தமான பகுதி படிக்கப்பட்டது. சுவாமி சித்தாத்மாநந்தரவர்

களின் வடமொழிக் கிரந்தப்பிரார்த்தனையுடன், இரவு பத்து மணி அளவில் அடிகளாரின் பொன்னுடல் ஆலமரத்தின் கீழ் அமைக்கப் பெற்ற கல்லறையிலே திருநீறு கற்பூரம் என்பவற்றுன் மறைக்கப்பட்டு எழுந்தருளல் செய்யப் பட்டது.

“ கிழக்கிலங்கைக் கொருமணியென் றுலகமெல்லாம்
புகழ்தேத்தக் கிளர்செஞ் சாலி
செழித்துவளர் காரைநகர் தனிலிரவி யெனவுதித்த
செம்மா லுன்றன்
உளப்படுநல் லிசைத்தமிழும் இயற்றமிழு மாங்கிலமும்
உம்பர் ஊரில்
வழுத்திடுவ மெனநினைந்து வானுலக மெய்தினையோ
மதிவல் லோனே.”

கல்லறையின் மேல் ஓர் மேடை கட்டப்பட்டுள்ளது. அதனை மையமாகக்கொண்டு இன்னும் சில நாட்களில் விபுலாநந்த மணிமண்டபம் எழும். கல்லறையினருகிலே செல்லும் வழிக்கு “விபுலாநந்தவீதி” என்று பெயர் எழுதப்பட்ட பலகை போய்வருவோர்களையும் அப்பாதையாற் செல்பவர்களையும் ஈர்த்து அடிகளாரை நினைவுகூரச் செய்கிறது.

கலைவாணர் என். எஸ். கிருட்டிணன் கூட்டத்தார்கள் விபுலாநந்த மணிமண்டபம் மிகவும் சிறந்த கலைச்சின்னமாகத் திகழ்வதற்காகக் கிழக்குஇலங்கையின் பல இடங்களிலும் நாடகம் நடத்திப் பொருள்ஈட்டிக் கொடுத்துள்ளார்கள். அத்துடன் கிழக்குஇலங்கை மக்களின் முழு ஒத்துழைப்புடன் விபுலாநந்த மணிமண்டபம் விரைவிலே எழும். அந்த மணிமண்டபம் தமிழகத்திற்கும், இலங்கைக்கும், மட்டக்களப்பிற்கும் என்றென்றும் அடிகளாரை நினைவுறுத்திக் கொண்டேயிருக்கும்.

அடிகளாரை நினைவுத் திரையில் என்றென்றும் கொண்டுவரும் நோக்கமாக அக்கரைப்பற்று என்னும் ஊரிலே ஆசிரியர் நடராசா அவர்களின் பெருமுயற்சி யினால் ஓர் மண்டபம் எழுந்துள்ளது. இதேபோல் இன் னும் கிழக்கிலங்கையின் பலபாகங்களிலும் அடிகளாரின் நினைவுச்சின்னத்தை ஏற்படுத்தல் சாலவும் சிறப்புடைய தாகும். அடிகளார் பிறந்த காரேறு மூதூரில் பல்வகையி னும் சிறந்த மணிமண்டபம் உருவாகவேண்டும். அம் மண்டபம் அடிகளாரது பிறப்பையும், விவேகானந்த வித்தியாலய மணிமண்டபத்தையும் காட்டிக்கொண்டே யிருக்குமானால் அது ஈழநாட்டின் பெரும்பேறே யாகும்.

---

## ௯௦. இரங்கற் பாக்கள்

அடிகளாரின் மறைவு தமிழகத்திற்குத் தாங்கமுடியாத துயரமாகும். என்றாலும் "இருப்பது பொய், இறப்பது மெய்" எனும் ஆன்றோர் மொழிக்கிணங்க மனிதப் பிறவி எடுத்த எவரும் இறந்துதானாகவேண்டும். அந்தப் பொதுவிதிக்கு யாருமே விலக்காகமுடியாது. அதனால் தான் அடிகளாரும் இறைவனுடன் இரண்டறக் கலந்தார். அத்துயரத்தை மறப்பதற்காகவும், அடிகளாரின் தொண்டுகளைப் பாராட்டும் முகமாகவும் அறிஞர்கள், புலவர்களிற் பலர் அடிகளார்மேல் இரங்கற்பாடல்களை யாத்துள்ளார்கள்.

யாக்கைநிலையாமை அனைவருக்கும் பொதுவானது. என்றாலும் அடிகளார் இன்னும் சிலகாலம் உலகநலத்துக்காக உயிருடன் வாழ்ந்திருந்தால் தமிழகம் இன்னும் மிக்க பெருமைகளைப் பெற்றிருக்கும். ஆனால், விதி யாரைத்தான் விட்டது. அதற்கிணங்க அடிகளார் நம்மை விட்டு மறைந்துவிட்டார். அன்னாரைப்போன்ற ஒருவரை இனி நாம் காணப்போவதில்லை.

தேனும் பாலும் பெருக்கெடுத்தோடும் மட்டக்களப்பு, நாட்டிற்கு என்றும் அழியாத புகழை ஈட்டி, ஈழநாட்டிற்கே பெருமையைக் கொடுத்துத் தாயகத்திற்கு தனிப் பெரும் மதிப்பை ஈந்த அடிகளாரின் புகழ், என்றென்றும் நிலைத்திருக்கும்.

நாம் மாண்டுபோனாலும் அடிகளார்மேல் அன்பர்கள் இயற்றிய இரங்கற்பாடல்கள், வளர்ந்துவரும் தலைமுறைகள் தோறும் அடிகளாரை நினைவூட்டிக்கொண்டேயிருக்கும்.

தமிழ் அன்னை தன் தவப்புதல்வனை இழந்துவிட்டாள்; தாயகம் தன்மானப் புதல்வனை இழந்துவிட்டது; தமிழர்கள் முத்தமிழ்ப்புலவனை இழந்துவிட்டார்கள்; அனைத்தும் விதியின் விளையாட்டே; அந்த வகையில் அடிகளாரின் தொண்டுகளை என்றென்றும் இரங்கற்பாடல்கள் பறையடித்துக்கொண்டே யிருக்கும். ஆதலினால் நாமும் பல அன்பர்களின் இரங்கற்பாடல்களை நினைவுகூர்வது சாலவும் சிறப்புடையதாகும்.

**வெண்பா**

ஞானத் தவக்கொழுந்து நங்கள் கலைமுதல்வன்
மோனத் தமிழ்மூன்றும் முற்றுமுனி—தானமணி
கண்மணிஎம் சாமிவிபு லாநந்த நன்மணிவிண்
மன்மணியாய் விட்டான் மகிழ்ந்து.

**தாழிசைகள்**

சத்தியமும் அன்பதுவும்
சகத்திலுயிர்க் கிரங்குவதும்
உத்தமமென் றொருநோக்கே
யுனதுமத மாயிருந்தாய்
நித்திரையாய் இன்றிருக்கும்
நினைவெதுவோ நிருமலனே!
வித்தக! விபுலாநந்த
வீரமணி மீளாயோ!

இளமையினைத் துறந்தாய்
எழில்துறந்தாய் ஏர்துறந்தாய்
வளமனைத்தும் நீ துறந்தாய்
வாழ்ந்தாயே மன்னுயிர்க்காய்
உளமுனக்கு எங்களையும்
ஒருங்கே துறப்பதெனத்
தவமுதல்வா! சற்றேனும்
எம்மனத்தில் ஓர்ந்திலமே.

கண்ணினுக்கும் கண்மணியே!
கவிஞருக்குச் சொன்மணியே!
மன்னருக்கு மன்மணியே!
மதிப்புலவோர் மனமணியே!
சன்மணிக்குள் சாமிவிபு
லாநந்த நன்மணியே!
பொன்மணியே! எங்குசென்றாய்
புகலாயோ ஒருவார்த்தை.

* * *

காரே றுந்திரு மூதூர்த் தாய்தரு
கடவுட் காதல்ம கன்
கருவிற் றிருவுள கலைஞன் பெற்றோர்
கண்ணிறை திருமயி லோன்
ஏரே றும்படி கீழ்பால் மேல்பா
லாக்கிநல் லிசைநட் டோன்
இமயத் தலையிற் றமிழ்முத் திரைவரை
யீழக் கரிகா லன்
சீரே றுந்தமி ழறிவர்க் காங்கில
நூற்சுவை நிலைக்கூட் டித்
தெருட்டும் புதுமைக் கபிலன் கலியுக
தெய்வ அகத்திய னும்
பாரே றும்புக ழாளன் தெய்விக
பதவிய டைந்தன னே
பன்மொழி விபுலா நந்தன் தெய்விக
பதவிய டைந்தன னே.

ஈழமு தற்பனி யிமயம் வரைக்கொடி
கட்டுமி சைத்தமி ழன்
இந்திய வாணியை ஆங்கில பீடத்
தேற்றிய புதுமையி னோன்
தோழமை கொள்வட மொழிமய மாகிய
தொன்மையி சைத்தமி ழைத்
தூய தனித்தமிழ் வடிவிற் றேற்றிய
தந்தையெ னுந்துணை யான்

சூழமு தத்தமிழ் வடிவிற் றோற்றிய
சோதிச் செஞ்சுட ரோன்
சுவாமிசி வானந் தக்கட லாடிய
படிமைத் தோற்றத் தோன்
வாழிய வன்சுக வாழ்வு புகுந்த
மங்கல நன்னு ளே
மாதவ விபுலா நந்தன் வாழ்வடை
மங்கல நன்னு ளே.

**—புலவர்மணி, ஏ. பெரியதம்பிப் பிள்ளை.**

* * *

நாட்டுப் பெருமை நாவலர் பெருமை
புலமையின் அளவே புகழின் பொலிவாம்
எங்கள் ஓமர் எங்கள் ஷேக்ஸ்பியர்
எங்கள் தாந்தே என்று புலவரைப்
போற்றும் புவியில் ஆற்றல் மிகுந்த
கன்னித் தமிழகம் கம்பனைப் போற்றும்
சங்க நூல்களை எங்கும் போற்றும்
நாவலர் வந்த நல்லியல் நாட்டில்
ஈழ மணியாய் யாழ்நூல் யாத்த
விபுலா நந்த வித்தகன் போந்தான்
தனித்தமி ழுக்குச் சங்கொலி போன்றுன்
அறிஞர் போற்றும் அறிஞன் வளர்த்த
செந்தமிழ் போற்றுவோம் நந்தமிழ்
உலக மெல்லாம் பரவிநிலவிட நீடே.

**— யோகி சுத்தானந்த பாரதியார்**

* * *

கமுகுமா கதலி தென்னை
கன்னல்நற் செந்நெல் லோடு
திமுதிமு வென்னப் பொங்கிச்
செழுந்தமிழ் வளரச் செய்யும்

அமுதகா ரேறு தீவு
அம்புவிக் குவந்த ளித்த
தமிழ்மணி விபுலா நந்தன்
சரண்மலர் வணக்கம் செய்வாம்.

—" **பரமஹம்சதாசன்** "

* * *

தமிழணங்கின் தவக்கொழுந்தே!
தாளாண்மை மிக்குடையாய்!
அமிழ்தெனவின் னிசையளிக்கும்
யாழ்நூலை ஆராய்ந்தே
இமிழ்திரைசூழ் ஞாலத்தோ
ரெல்லோரு மின்பமுறத்
துமிதமழை சொரிவிபுலா
நந்தனெனுந் தமிழ்முனிவா!

மேனாட்டின் கலைச்சிறப்பாம்
விஞ்ஞானக் கலைபயின்று
தானாக்குந் தனிநூற்கோர்
பெருந்துணையா யதைக்கொண்டே
வானீட்டும் புகழ்படைத்த
யாழ்நூலை வகுத்தருளி
ஏனோர்க்கும் வழிகாட்டும்
இசைமுனிவா! ஏகினையோ!

—**பண்டிதை, இ. பத்மாசனி அம்மையார்.**

* * *

கொழும்புநகர்ப் பல்கலைதேர் கழகமதிற்
தமிழ்த்தலைமைக் குரவ னாகிச்
செழும்புலங்கொண் டிடுமாறு மாணவர்க்குக்
கற்பித்த சீர்சால் சாமி
எழும்புலனை நடக்கும்விபு லாநந்த
வடிகளென இயம்பு ஞாலந்
தொழும்புலவன் தமிழின்பந் தந்துலகிற்
கழிவிலின்பந் துய்த்தா னன்றே.

—**வித்துவான், சீ. கணேசையர்.**

* * *

என்றுமுள செந்தமிழ்த்தா யீன்றெடுத்த
தவப்புதல்வா! எவரும் போற்றும்
குன்றனைய நற்றவத்துக் கோமானே!
தமிழ்படர்கற் பகப்பூங் கொம்பே!
வென்றபுல னுடைவீரா! விபுலாநந்
தப்பெயர்கொள் மேலோய்! விண்ணிற்
சென்றனையே யாம்வருந்த யார்செய்த
தவக்குறைவோ தெரிகி லோமே.

தனியான செந்தமிழும் ஆங்கிலமும்
பலகலையும் சமய நூலும்
முனியாது துறைபோகக் கற்றறிந்து
தத்துவநூல் முழுதும் தேறித்
துனியாகும் பவத்தொடக்கைத் துடைத்துமுனி
யாகியொரு துணையாய் நின்றாய்
இனியாரே இனியாராய் மற்றெமக்குத்
துணையாவார் இயம்பு வாயே.

—சோமசுந்தரப் புலவர்.

* * *

இளங்குழவி இடைப்பயிலும் இயல்பினவன்
இடைப்பயிற்சி என்னு நிற்கும்
களங்கமிலா உளம்படைத்துச் சாந்தியுல
கினுக்குதவும் காட்சி சான்றோன்
துளங்குமனை அறம்பூணு துலகினுக்கே
தொண்டுசெய்யுந் தூய ஞானி
விளங்குவிபு லாநந்த அடிகளெனும்
பெரும்பெயரோன் வென்று வாழி.

—பண்டிதமணி, நவநீதகிருஷ்ண பாரதியார்.

* * *

அன்னைதனைத் துறப்பேன்
அருந்தமிழ்நா டுந்துறப்பேன்
விண்ணவர்தம் வாழ்வை
வேண்டா மெனத்துறப்பேன்

என்னுயிர்க் குயிரா
　　மிறைவனையுந் தான்துறப்பேன்
கன்னித் தமிழென்றால்
　　கனவிலும்நான் துறவேனே.

எனவாங்கு,

ஒன்றுநீ யெம்மவர்க்கும்
　　உணர்த்திவிட்டாய் உத்தமனே
நன்றுநீ செய்தாய்
　　நலங்கள்பல கண்டோமால்

கலைபலவுங் கற்றதனாற்
　　கற்றவர்க்கு விருந்தானாய்
விலையொன்றுங் கருதாதே
　　வித்தையினைத் தேடல்
தலையென்று கொண்டதனாற்
　　றலைநின்ற யெம்முள்
நிலையில்லா நினைவுகளுள்
　　நிலைத்ததுநின் நினைவே. —சோ. நடராசன்.

* * *

இலங்கை யன்னையீன் றெடுத்ததொர் அரும்பெறல் மகவை
இலங்கு பாரத தேவிதன் இருகரத் தேந்தித்
துலங்கு தூமணி யாக்கிநற் பணிகொண்ட கோவை
இலங்க லங்கினம் எம்விபு லாநந்த நிதியே.

—தி. சதாசிவ ஐயர்.

* * *

வித்தகனை வியனிலங்கை விளங்க நின்ற
　　விறல்மணியை வேதமுதற் சாத்திரங்கள்
சித்தியுற ஓர்ந்தவனைச் சமயம் பாடை
　　சிறக்கவரு மாறுமுக நாவலோற்பின்
இத்தலத்தில் இறையருளான் எழில்சேர் யாக்கை
　　இனிதெடுத்துப் பரதமுதல் இசைநா டெல்லாம்
மெத்தவரும் புகழ்நாட்டும் விபுலா நந்த
　　மெய்ம்மணியை யிழந்ததுமெம் விதியின் பாற்றே.

—ந. நமசிவாயம்.

* * *

அதன்பின் னிங்கே அவலங் கேளீர்
தமிழ்மணம் நாறு தனிப்பெரு மதுரை
சான்றவர் மலிந்த சால்புறு கரந்தை
அமிழ்தத் தமிழினை அழகோ டிசைக்கும்
அரிய யாழ்நகர் என்னு மூப்பதிச்
சங்க மியாவும் எங்கே யெங்கே
ஆய்கலை அண்ணலார் தோயிலை மதியார்
கருவிலு முருவிலும் கண்ணன் அனையார்
அறநிலைப் பள்ளியுள் அமைந்த அடிகாள் !
இறந்துந் தமிழனை மறவா
எழிசைத் தொகுதி எழுப்பியகிழமை யோரே.

பூவாற் பசுங்கொடியும் புன்சிரிப்பாற் கைம்மகவும்
நாவால் இளங்கிளியும் நன்கோதும்—ஓவாதே
வீசு புகழ்வி புலாநந்த வித்தகன்றன்
வாசலிடை வந்த வருக்கு.

—அ. வி. மயில்வாகனம்.

* * *

தான்யாத்த இசைநூலைத் தமிழ்முனிக்குங்
கலைமகட்குஞ் சாற்ற வெண்ணி
ஊன்யாத்த பொய்யுடல மொருவியவி
யூணமரர் உடல மெய்திக்
கான்பூத்த கற்பகக்கா இறைசுரர்கள்
முனிவரர்கள் களிப்பி னேற்ப
வான்நோக்கி நடந்தனனல் மண்ணுலகம்
ஒளிகுன்றி மயங்க மாதோ.

—பண்டிதர். இ. நமசிவாய தேசிகர்.

* * *

செந்தமிழோ டாங்கிலமும்
தேசுதரும் ஆரியமும்
சிந்தைகொளக் கற்றுமிகச்
சிறந்ததோர் யாழ்நூலும்

தந்தெமக்குப் புகழீந்த
    தவக்கொழுந்தே! தமிழ்நாட்டுச்
செந்திருவே! திகழ்குருவே!
    சிறந்தமயில் வாகனனே.

சன்மார்க்க மேமார்க்கம்
    சமயங்கள் மற்றவெல்லாம்
துன்மார்க்க மென்றுவிட்டுத்
    துறவுகொண்டு தொண்டாற்றி
விண்மார்க்கஞ் சென்றவிபு
    லாநந்த விற்பனனே
எம்மார்க்கஞ் சென்றாலும்
    இனியுனையாம் காணுவமோ.

—வித்துவான். க. இ[illegible]

